# இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும்

## (THE TRAGEDY OF RAVANA)

ஆசிரியர்

**அ. ச. ஞானசம்பந்தன்**

திருவாளர் திரு. வி. க. அவர்கள்
சிறப்புரையுடனும்

பல்கலை வேந்தர் திரு. தெ. பொ.
மீனாட்சிசுந்தரனார் M. A., B. L. M. O. L. அவர்கள்
முன்னுரையுடனும் கூடியது.

விலை ரூபாய் 3—12-0

கலைப்பண்ணை வெளியீடு

கிடைக்கும் இடம்:

இலக்கியப் பதிப்பகம்

காரைக்குடி.

ஓரியண்டல் பிரிண்டிங் ஒர்க்ஸ், கோ. கெ. எம். எஸ். 511.
கலைப்பண்ணை, புதுக்கோட்டை. எல். டிஸ். 14774.

## பதிப்புரை:

காவியங்களில் தலையாய கம்ப ராமாயணத்தில் முக்கிய கதா பாத்திரங்களில் ஒருவனான இராவணன் மாட்சியையும் வீழ்ச்சியையும் பற்றி இராமன், இலக்குவன், சீதை, அனுமன், இந்திரசித்து, கும்பகருணன் முதலியோர் எப்படி எப்படி எல்லாம் எண்ணுகிறார்கள் என்பதனை, நேரிய முறையில், பல கோணங்களில் நின்று, கவிஞர் மூலமே நன்கு விளக்குகிறார் அறிஞர் ஞானசம்பந்தம் அவர்கள்.

தமிழ் மக்கள் விரும்பிப் படிப்பதற்கு ஏற்ற இந் நூலை, மகா கவி கம்பன் திருநாளான இன்று தமிழ்த் தாயின் மலரடிகளில் வைத்து வணங்குகிறோம்.

கன்னித் தமிழ் வாழ்க!

புதுக்கோட்டை
21—3—48

வே. சோமையா,
கலைப்பண்ணை.

# உரிமையுரை



ஆக்குவன் இந்நூல், ஆய்ந்திதன் பெயராம்
'இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும்' என்றே
அமைத்தியான் எழுத, அறிவே வடிவாய்த்
தந்தை மகனுக் காற்றும் நன்றி
முந்தி அவையில் இருக்கச் செய்தல்
என்னும் உரையைப் பொன்னெனப் போற்றி
இளமை முதலாய் வளமாய் உடலை
ஓம்பித் தமிழ்ப்பால் ஊட்டி, உள்ளம்
கள்ளம் இலாது கலைகள் தெளியும்
அறிவும், உணர்வும், ஆய்வியல் திறனும்
இளமையோ டுறவாய் இனிதுடன் வளரக்
கண்ணுங் கருத்தும் கனிவுடன் கொண்டு
போற்றிய எந்தை புகழ்க்குணக் குன்று
தமிழுடன் சைவம் தழைத்திடச் செய்வோர்
அமிழ்தம் வேண்டி அளிப்பினும் இவற்றிற்
கான தொண்டினை ஆற்றலே உயர்வென
அதனை விரும்பா தருந்தொண் டாற்றிடும்
விழுமியோர் பெருஞ்சொல் விளக்கனார்
அ. மு. சரவண முதலியார்க் குரிமையே.

# சிறப்புரை

## திரு. வி. கலியாண சுந்தரனார் அவர்கள்

எல்லாவற்றிற்கும் அடிப்படையாய் ஒரு சக்தி நிற்கிறது. அச் சக்தி வற்றாதது; எல்லையற்றது. அதன் முதல் எங்கேயோ! முடிவு எங்கேயோ! அதற்கு உலகம் வழங்கிய பெயர்கள் பலப்பல.

அப் பெருஞ் சக்தி, காலத் தேவைக்கு ஏற்றவாறு, தன் மாட்டு அமைந்துள்ள வற்றாக் கருவினின்றும் சிற்சில கூறுகளை வெளியிடுதல் மரபு. அக் கூறுகள் முதல் முதல் கவிஞர் உள்ளத்தில் கனவாய்க் கருக் கொள்ளும், பின்னை விஞ்ஞானியர் உள்ளத்தில் நினைவாய் உருக்கொண்டு பொருளாகும். இன்று கவிஞர் நெஞ்சில் கற்பனையாய் உலவும் ஒன்று, பன்னூறு ஆண்டு கடந்து மெய்ஞ்ஞானியர் நெஞ்சில் பொருண்மையாய்த் திரளுதல் இயற்கை. கவிஞர் கற்பனைக் கனவில் என்றோ பறந்த விமானங்கள், இன்று வானத்தில் பறத்தல் கண்கூடு. விஞ்ஞான உலகிற்குத் தாயகம் காவிய உலகம் என்பதை மறத்தலாகாது.

கம்பர் ஒரு பெருங் கவிஞர்; கனவும் நினைவும் பொதுளிய ஒரு தமிழ்ச் சுரங்கம்; பெரிய கற்பனைக் களஞ்சியம். இத்தகைய கம்பர் பெருமானைப் பௌராணிக ஆட்சி சிறைப்படுத்தியது! என்னே! என்னே!! சங்கம் கண்ட தமிழ் நாடே! உனக்கு ஐயோ! கம்பர் இந் நாளில் விடுதலை அடைந்தது கண்டு மகிழ்வெய்துகிறேன். அவ் விடுதலை நல்கிய தோழர் சரவண—ஞானசம்பந்தருக்கு எனது வழுத்து உரியதாக.

தோழர் ஞானசம்பந்தர் தொன்மைத் தமிழ்க் குடியில் தோன்றியவர்; புலவர் வழிவந்த புலவர்; ஆசிரியர் வழிவந்த ஆசிரியர்; விஞ்ஞானியர். அவர் தமது கல்வி கேள்வி ஆராய்ச்சிகளால் பெற்ற காலக் கண்கொண்டு கம்பரை நோக்கினர். பழைய கம்பர் அகமுக மலர்ச்சியுடன் காட்சி அளித்தனர். அக் காட்சியே "இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும்" என்னும் இந் நூல்.

கம்பர் ஈன்ற தமிழ் இராமனும், இராவணனும் கற்பனை வீரர் என்று இந் நூல் விளக்குகிறது. இவ் விளக்கம் நூலின் திறத்தைப் புலப்படுத்தும். கற்பனை வீரம் நாளடைவில் தெய்வத் தன்மை எய்துதல் இயல்பு. இஃது இக் கால உள நூலால் வலியுறுத்தப் பெறுவது. இன்றைய கற்பனை நாளைய பொருண்மை என்பது கருதற்பாலது.

தோழர் ஞானசம்பந்தர் தமிழ் உலகுக்கு ஒரு நல் வழிகாட்டி உள்ளனர் என்று கூறுவது மிகையாகாது. அவர் வாயிலாகக் கம்பரின் பல திறச் சுவைகள் வெளிவர ஏகம்பர் அருள் செய்வாராக.

கம்பர் வளரச் சேக்கிழார் முதலியோர் வாழத் தோழர் ஞானசம்பந்தருக்கு நீண்ட நாளும், நோயற்ற யாக்கையும், வேறு பல பேறுகளும் பெருக; பெருக.

# முன்னுரை

பல்கலை வேந்தர் திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், M.A.,B.L.,M.O.L,

'பழமையை எதிர்ப்பதே புதுமை' என்ற கொள்கை சிலரை மருட்டுகின்றது. இராமனது சிறுமையையும், இராவணனது பெருமையையும் பரக்கப் பேசுகின்ற பேச்சுப் புதுக்காலப் பேச்செனக் கருதிப் பலர் ஆரவாரம் செய்கின்றனர்; நூல்கள் எழுதுகின்றனர்; பாட்டுப் பாடுகின்றனர்; இவை அனைத்தும் கம்பன் காட்டிய இராவணனது பெருமையின் அடித்தூசினையும் விளக்கவில்லை எனலாம். ஆதலின், கம்பன் பெற்ற அருமந்த பிள்ளையாம் இராவணனை, வரலாற்று வழியாலன்றிக் கவிநயத்தின் வழியே ஆராய்வது பழமையும் புதுமையும் கலந்ததோர் இனிமையாம். பழம் நழுவிப் பாலில் விழுகிறது.

பாட்டின் திறனாய்ந்து தெளிதல் எல்லாம், ஒருவகையால் ஒப்பிட்டுப் பார்த்துச் சுவைத்தலே யாம். முன் எல்லாம் வட நூற் பாக்களோடு ஒப்பிட்டுச் சுவைத்து, இந்திய ஒருமை நுகர்ச்சியில் திளைத்தோம். இன்றோ மேனாட்டு நூல்களோடு ஒப்பிட்டுச் சுவைத்து, உலக ஒருமை நுகர்ச்சியில் திளைத்தல் வேண்டும். இயற்கை அன்னை இந்த முதிர்ச்சி நிலையைக் காணவே, நம்மை இது வரையிலும் மேனாட்டுக் கலை வாழ்க்கையில் பழக்கி வந்தாள். 'அரிஸ்டாடல்' என்ற யவனப் பேராசிரியர் கவிநயத்தினைச் சுவைக்கும் வழியை மேனாட்டில் தெளிவு படுத்தினார். அவர் நாட்டு நூல்களைச் சுவைப்பதற்கு, அவர் காட்டியது சிறந்ததொரு வழியே ஆம். பின் வந்தார், அந்த வழி அன்றி வேறு வழி இல்லை என மயங்கினர். ஆனால், ஒரு முகம் போல, ஒரு முகம் இருப்பதில்லை.

அழகு, தனிப்பெருஞ் சிறப்பே ஆம். பாட்டுகள், ஒன்று போல் ஒன்று இருப்பதில்லை. அதனதன் அழகினை அறிய அதனதன் வழியே மனத்தினைத் திளைக்கவிட்டு, அததுவே ஆகிச் சுவைத்து, உணர்ந்து, உண்மையை வெளியிட வேண்டும். அரிஸ்டாடல் கூறியதனைக் கொண்டு, ஷேக்ஸ்பியர் பாடலை அளந்தறிய முடியாது; 'ஹேகல்' கூறியதனைக் கொண்டும் அளந்தறிய முடியாது. ஷேக்ஸ்பியர் தரும் பாட்டு விருந்தினைச் சுவைத்தே அவன் அளவு கோலைக் கண்டறிந்து அளந்தறிய முற்பட வேண்டும். இவ்வாறு, பெருஞ் சுவைஞர் 'பிராட்லி' என்பார் ஆராய்வது காண்க. அவ்வாறே, கம்பனைச் சுவைத்தே, கம்பன் கையாண்ட அளவுகோலைக் கண்டறிந்து, அவன் பாடலை அளந்து பார்க்க முயலவேண்டும்.

நண்பர் திரு. ஞானசம்பந்தனார் இந்த வழியில் நம்மை அழைத்துச் செல்கின்றார், பழைய தமிழ் மரபறிந்த குடும்பத்திற் பிறந்து, தமிழ்ப் பல்கலைக் கழகம் எனப் பாராட்டிக் கொள்ளும் இடத்தில் கல்வி பயின்றார்; பச்சைத் தமிழன் கண்ட இந் நாளைய தமிழ்க் கல்லூரியில் ஆசிரியராக அமர்ந்து, இலக்கிய ஆராய்ச்சியில் மாணவர்களை ஈடுபடுத்தும் தொண்டினைச் செய்யும் பெரும் பேறு பெற்றவர்; தாம் கூறிவந்த இலக்கணங்களுக்கு எடுத்துக் காட்டாக இந்த இலக்கிய ஆராய்ச்சி நூலை எழுதி உள்ளார். காலத்திற்கு ஏற்ற நூல்; காலத்தால் செய்த உதவி; சிறிதன்று; தகுதிக் கேற்ற பேர் உதவியே ஆம்.

மேனாட்டுக் கருத்துக்களில் நம்மை ஓடியாட விடுகிறார்; அந்தப் புதிய கருத்துக்களுக் கேற்ற சொற்களைப் படைக்கவும் செய்கிறார். பழஞ் சொற்களைப் புதுப்பொருளில் பயன் படுத்துவது இடர்ப்பாட்டினை விளையாதா

என ஆசிரியரும், ஓதுவாரும் எண்ணிப் பார்த்து முடிவு கூறவேண்டும். அவலம், முரண், ஒருமை என்பன போன்றவற்றைக் காண்க. இராவணன் தீமையே வடிவானவன் என்ற கருத்தினை மறுக்கும் வழியாக மேனாட்டுக் கருத்தினை விளக்கும் திறம், பாராட்டற்கு உரியது.

பாவலன் படைத்த ஒருவனைப்பற்றி முடிவு கூற வேண்டுமானால், அவனைப்பற்றி அந்தப் பாட்டுலகில் பிறர் கூறும் கருத்துக்களையும், கதைப் போக்கினையுமே அடிப்படையாகக் கொண்டு கூறவேண்டும் என மேனாட்டு அறிஞர் ஆராய்ந்து வருகின்றனர். அந்த முறையைப் பின்பற்றும் நம் ஆசிரியர், பழைய தமிழ் முறையையும் மறவாது, சொல் சொல்லாகச் சுவைத்துப் பேருரைகள் பல தருகின்றார்.

இராவணன் வீழ்ச்சியைக் 'கலைஞன் வீழ்ச்சி' யாகக் கூறுவது போற்றற் குரியது. யாழ்க் கொடி ஏந்தி, அகத்தியரோடும் இசையில் போட்டி போட்ட கலைஞனாக அன்றோ இராவணனைக் கம்பனும் காண்கின்றான்! ஆசிரியர் ஞான சம்பந்தனார், இந்தப் பகுதியில் காட்டும் நுட்பம், சுவைஞர்க்கு என்றும் பெரு விருந்தாம்.

அடிமன் த்தினைப்பற்றி ஆராய்வார் "தான்' என்ற எண்ணம், 'காமம்" ஆகிய இரண்டின் அளவிறந்த கொந்தளிப்பில், அனைத்துக் கேட்டினையும் அடக்கி விடுவர். நண்பர் ஞானசம்பந்தனார், இராவணன் கூத்தினை இவ் விரண்டிலேயே அடக்கிவிடுகின்றார்.

நண்பர், மேலும் பல நூல்களைக் கம்பனைப்பற்றி எழுதுதல் வேண்டும். பிராட்லி முதலியோர் போன்ற பெருஞ் சுவைஞராகி, கம்பன் தன்னையுமறியாது கையாண்ட பாட்டளக்கும் கோலை விளக்கி வைத்தல் வேண்டும். கம்பன் அருள் செய்வானாக!

# முகவுரை

—:o:—

1945-ஆம் ஆண்டு, கம்பர் விழா, காரைக்குடியில் நடைபெற்ற பொழுது, 'கம்பனில் அவலம்' என்ற தலைப்பில், இப் பொருள் பேசப் பெற்றது. அதனைக் கேட்ட சிலர், 'இதனை விரித்து நூலாக ஆக்கவேண்டும்' என்ற எண்ணத்தை வெளியிட்டனர். அவர்கள் கேட்டதைச் செய்து முடிக்கவேண்டும் என்ற எண்ணமும், தேவக் கோட்டை திரு. டி. ஆர் அருணாசலம் அவர்களும், இலக்கியப் பதிப்பக உரிமையாளர் திரு. வே. சோமையா அவர்களும் ஓயாது செய்துவந்த தூண்டுதல்களும், இந்நூல் இப்பொழுது வடிவு பெற்று வெளி வரச் செய்தன. சில ஆண்டுகளாகக் கல்லூரியில் இலக்கியத் திறன் ஆய்வு (Literary Criticism) என்ற பகுதியைக் கற்பிக்க வேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டது. அத் துறையில் நூல்களைக் கற்குந்தோறும் தமிழ் நூல்களின் சிறப்பு ஒருவாறு விளங்கலாயிற்று

தமிழ்க் கவிதைகளிலும், காப்பியங்களிலும் உள்ள சிறப்பை, எவ்வாறு நுகர்தல் வேண்டும் என்று கூறும் கருவி நூல்கள், தமிழில் இல்லாமல் ஒழிந்தன. தொல் காப்பியச் செய்யுளியலில் சில பகுதிகள் தவிர, இலக்கியத் திறனாய்வு செய்கின்ற தனி நூல்களுள் எதுவும் தமிழில் இல்லை. இந்நிலையில், ஆங்கிலக் கருவி நூல்களைக் கொண்டே தமிழ்க் கவிதைகளை ஆராய்தல் நேரிட்டது. மொழி வளம் முதலிய வேறுபாடு காரணமாக, அவர்களுடைய கோட்பாடுகளைச் சிறிது மாற்றியும் கொள்ள லாயிற்று.

அவல இயலின் அடிப்படையை மிக நன்கு ஆராய்ந்து முடிவுகள் கூறிய பெரியார், 'ஹேகல்' ஆவார். ஆனாலும், அவருடைய முடிவுகளுள்ளும் பல காலத்தால் மாறுபடுவன ஆயின. தமிழ் மொழியளவில், அவை, முற்

றிலும் ஏற்றுக்கொள்ளப்படும் தகைமைய அல்ல. எனவே, வேண்டு மிடங்களில் அவருடைய கொள்கைக்குச் சிறிது மாறுபாடான முடிவுகளும் கொள்ளப்பட்டிருக்கின்றன. 'அவலம்' என்ற தலைப்பில் அவ் வியல் கூறு ஆயப்பட்டிருக்கின்றது. பொதுவாகத் திறனய்வு (Criticism) பற்றியும், சிறப்பாக அவலம் (Tragedy) பற்றியும் தமிழில் நூலே இன்மையின், பல சொற்களைத் தமிழில் யாப்பது மிகக் கடினமான தாயிற்று. பல கருத்துக்களும் அவ்வாறே. சிற்சில சொற்களுக்கு மொழி பெயர்ப்புச் செய்து அச்சாகிய பின்னர், இங்குக் கூறப்பட்ட சொற்களைக் காட்டிலும் சிறந்த சொற்களைக் காணுதல் நேர்ந்தது. மீண்டும் ஒரு முறை, இப் புத்தகம் வெளிவரின், அச் சொற்களை எடுத்து ஆளலாம்.

கம்ப ராமாயணத்தைப் படிக்கத் தொடங்கிய முதல் முறையிலேயே, புதிய சில கருத்துக்கள் தோன்றத் தொடங்கின. வழி வழியாக வந்த பொருள்கோள் முறையை ஏற்றுக் கொள்ள மனம் மறுத்தது. கம்பன் கட்டிய கலைக் கோயில் ஆழமான பல பொருள்களை உள்ளடக்கி இருப்பதாக உணர முடிந்தது. இப் புதிய கருத்துடன் மீண்டும் நூலைக் கற்கும் முயற்சி எழுந்தது. பொதுவாக ''இராமனே காப்பியத் தலைவன் என்றும், இராவணன் தீராப் பழி செய்த கொடும்பாவி என்றும்' கொண்டிருந்த கருத்துக்கள் சரியா? என்ற ஆராய்ச்சியில் ஈடுபட நேர்ந்தது. மேற்கூறிய பொதுக் கருத்துக்கள் படியக் காரணம் உண்டு. இதுவரையிலும், நூலை நூலாகப் படிக்கும வழக்கம் இல்லை. நம்மால் பூசிக்கத் தகுந்த ஒரு பாத்திரம் இராமன் என்றும், அவனுடைய சரிதையைக் கூறும் நூல் இராமாயணம் என்றுங் கருதப்பட்ட காரணத்தால், ஆராய்ச்சிக் கண்ணுடன் நூலைப் பார்க்க யாரும் முன் வரவில்லை.

இத் தகைய அருங் காப்பியத்தைக் கலைஞன் ஆக்கிய தன் நோக்கமே, அதனை நாம் நன்கு சுவைக்கவேண்டும் என்பதேயாம். கலையைச் சுவைக்கும் பழக்கம் எக் காரணத்தாலோ நம்மைவிட்டு நீங்கிவிட்டது. இராமனைக் காப்பியத் தலைவனாகக் கருதுவதில் இழுக்கு ஒன்றுமில்லை. ஆனால், காப்பியத்தில் காணப்படும் இராமனை விட்டுவிட்டு, நாம் மனத்தில் கற்பனையில் கொண்டிருக்கும் ஓர் இராமனுடன் அக் கம்பனுடைய இராமனைப் பிணைப்பதனாலேயே இடர்ப்படுதல் நேரிட்டது அம் முறையை விட்டுக் கம்ப ராமாயணத்தில் காணப்படும் இராமன், சீதை, இராவணன் ஆகிய அனைவரும், கம்பனுடைய படைப்புக்கள் என்ற எண்ணத்துடன் நூலைக் கையில் எடுத்தால், பல இடர்ப்பாடுகள் நீங்கிவிடுவதை அறிய முடியும். உண்மையாக 'இராமன் என்ற ஓர் அரசன் வாழ்ந்தானா?' என்பது போன்ற வினாக்கட்கு விடை கம்ப ராமாயணத்தில் தேடிப் பயன் இல்லை. கம்ப ராமாயணத்தில் காணப்படும் இராமன், கம்பன் ஆக்கிய இராமன் ஆவான். அவ்வாறே இராவணனும். அவன், 'ஆரியனா தமிழனா' என்பது போன்ற வினாக்களும் இடப் பொருத்தம் அற்றவையே.

இத் தகைய வினாக்களை விட்டுவிட்டு இராமாயணத்தை ஒரு காப்பியமாகக் காண்பதே சரியான முறையாகும். மேல் நாடுகளில் தோன்றிய 'சுவர்க்க நீக்கம்' 'உலிசிஸ்' என்பன போன்ற காப்பியங்களுடன் ஒத்த இயல்புடையதாகும் கம்ப ராமாயணம். இராமனைப் படைத்த அதே கம்பனே இராவணனையும் படைத்துளான். யாரை உயர்ந்தவனாகக் கலைஞன் ஆக்குகிறான் என்பதன்று நாம் காணவேண்டும் பொருள். அவ்வாராய்ச்சியில் ஈடுபட்டால் உண்மை காண்பதை இழப்பதோடு, கம்பன் எதைக் கருதவில்லையோ அதைத் தேடுப

வர்களாக ஆகி விடுவோம். ஒவ்வொருவரையும் அவரவ ருடைய சூழ் நிலையிலும், பிற சூழ் நிலையிலும் வைத்துக் காட்டுகிறான் கம்பன். சிற்சில இடங்களில் மிக உயர்ந்த பாத்திரங்களாகக் காட்சி யளிப்பவர்கள், சிற்சில விடங் களில் மிகத் தாழ்ந்தவர்களாகக் காட்சி யளிக்கிறார்கள். ஏன் அவ்வாறு கலைஞன் செய்கிறான்? மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவனும், நன்மை தீமை என்ற இரண்டு பண்புங் கலந்தவனே தவிர, முழுவதும் நன்மையை உடையவனா கவோ, முழுதும் தீமையை உடையவனாகவோ இவ் வுலகில் இருத்தற் கில்லை. இவ் வுண்மையை அறிவுறுத்தவே, கலை ஞன் எல்லாப் பாத்திரங்களையும் எல்லாச் சூழ் நிலையி லும் வைத்து நம்மைக் காணுமாறு செய்கிறான். பெரும் பாலும் மனிதன் நல்லவன் ஆவதும், தீயவன் ஆவதும் சூழ்நிலையைப் பொறுத்தே ஆம். இராவணனாகிய அவ லத் தலைவனும், சூழ்நிலை காரணமாகவே அழிகிறான். அவனுடைய சூழ்நிலையில் யார் இருந் திருப்பினும் அவ னுடைய கதிக்கே ஆளாகி இருப்பர்.

அத் தகைய நிலையிலேயே, இராவணனும் காட்சி யளிக்கிறான். இராவணனைப்பற்றி உயர்வாகக் கம்பனைக் காட்டிலும் அதிகமாக நாம் ஒன்றுங் கூறிவிட இய லாது. காரணம், இராவணன் கம்பனுடைய படைப்பு என்பதே. எனவே அவனுடைய வீழ்ச்சியைப் பற்றி யும் நாம் ஒன்றும் கவலை உறுவதற் கில்லை. இது தவிர, இராவணனை வீழச் செய்த முறையில், கம்பன் தன் இனத்திற்கே பழி சூழ்ந்துவிட்டான் என்று நாமா கக் கருவது பொருத்த முடையதன்று.

முற்கூறியபடி, புதிய கருத்தால் தூண்டப்பெற்று, இராமாயணத்தைப் படித்ததில், இராவணன் புதிய தொரு காட்சியை நல்குகிறான். இராமனை எவ்வாறு கம்பன் ஓர் இலக்கிய மனிதனாக ஆக்கி உள்ளானோ, அவ்வாறே

XIII

இராவணனையும் ஆக்கி உள்ளான் என்ற உண்மை புலப்பட்டது. சாதாரணமானவனுடைய வாழ்வு தாழ்வு என்ற இரண்டிற்கும் யாரும் கவலை உறுவதில்லை. அப்படிப் பட்டவனுடைய வாழ்க்கை யாகட்டும், வீழ்ச்சி யாகட்டும் யாருக்கும் ஒரு படிப்பினையையும் நல்குவதில்லை. ஆனால் உயர்ந்தோன் ஒருவனுடைய வீழ்ச்சியில் உலகம் ஒரு படிப்பினையை மேற்கொள்கிறது. அல்லாமலும், அவ் வீழ்ச்சியே ஓர் 'அவல'மாகவும் கருதப்படுகிறது. அது வெறும் 'சாவு' அன்று. 'அவலத்திற்கும' அழிவாகிய சாவுக்கும் வேற்றுமை யுண்டு. நாம் பொதுவாகக் கருதுகிறபடி, இராவணனை ஒரு கொடும் பாவியாகக் கம்பன் கருதி இருப்பானானால், அவனுடைய வீழ்ச்சிக்கு ஒரு காப்பியம் இயற்றி இருக்கமாட்டான்; இராவணன் வீழ்ச்சிக்கு இயற்கையும் அழுததுடன், அதனைத் தடுக்க 'உற்பாதங்கள்' முதலியவற்றையும் தோற்றுவித்தது என்றும் பாடி இருக்க மாட்டான். மேலும் இராவணன் அழிவுக்கு, அவனைப் படைத்த கலைஞன் வருந்துவதுபோல் வேறு யாரும் வருந்த இயலாது. இக் கருத்துக்கள் எல்லாம், இராவணனைப் பற்றிக் கம்பன் எக் கருத்தைக் கொண்டிருந்தான், எக் கருத்தை நம்மைக் கொள்ளுமாறு செய்கிறான் என்பதை நன்கு வலியுறுத்துகின்றன.

ஒரு சிலர், கம்பன் இராவணனை உயர்த்திப் பேசுவதெல்லாம், இராமன் உயர்வை மிகுவிப்பதற்காகவே யாகும் என்று நினைத்துக் கூறவும் செய்கின்றனர். இதனைவிடப் பெரிய தவற்றைச் செய்ய முடியாது. இதைவிடப் பெரும் பழியைக் கம்பன் தலைமேல் ஏற்றவும் முடியாது. இராமன் பண்பை உயர்த்தக் கம்பன் இராவணனை ஒரு கருவி யாகக் கொண்டிருப்பானே யானால், அவன் ஒரு கலைஞனாகவே இருத்தல் இயலாது. இராமன், இராவணன் இவ்

விரு பாத்திரங்கட்கும் அவன் பற்பல பண்புகளை ஏற்றி இருக்கிறான். இருவரும் குறையும் நிறைவும் ஒருங்கே உடையவர். நிறைவுக்காக இருவரையும் போற்றுகின்றான் கம்பன். குறைவு காரணமாக இருவரும் அவதிப் படுகின்றனர். குறைவின் அளவிற்கு ஏற்ப, அவதியும் மிகுதிப்படுகிறது. ஒருவரோடு ஒருவரை அவன் இறுதியில்தான் சந்திக்க வைக்கிறான். இராமனைப் புகழ்வதற்கு எனவே, கம்பன் இராவணனை உண்டாக்கினான் என்பது பொருத்தமற்ற வாதமே. தனித் தனியே இருவர் பண்பையும் நாம் அறிந்துகொள்ள வேண்டும். இருவரும் சந்திக்க நேர்ந்த காலத்திலும், இவர்களுடைய பண்புகள் ஒளிவிட்டு மிளிர்தலைக் காணலாம். இராமனோடு பொருது மீண்ட இராவணன் "நாசம் வந்துற்ற காலை நல்லதோர் பகையைப் பெற்றேன்' என்று கூறுவதால் அவன் வீரம் இராமன் வீரத்திற்குச் சிறிதும் சளைத்த தன்று, என்பதையும் உணர முடிகிறது. கம்பன் கருத்தும் அது வாதல் அறியக் கிடக்கிறது.

ஆகவே, ஓர் அவலத் தலைவன் (Tragic Hero) என்றால், அவனுக்கு என்ன என்ன பண்புகள் இருக்கவேண்டும் என்று கருதப்படுகின்றனவோ, அவை எல்லாவற்றிற்கும் ஒரு கொள்கலமாக இராவணனை ஆக்கியுள்ளான் கம்பன்; அவலத் தலைவன் வீழ்ச்சிக்குக் காரணமாக இருக்கும் பண்புகள் சிலவற்றையும் இராவணன்பால் ஏற்றியுள்ளான். இப் பண்புகள் காரணமாக இராவணன் வீழ்ச்சி நடைபெறுகிறது. அவ் வீழ்ச்சியைப் படிப்படியாகக் கூறுகிறான் கலைஞன். இதனை ஒரு கோவைப் படுத்திக் காண்டலே ஓர் அழகு.

இதன்மேல் அவல இயலைப்பற்றி, 'ஹேகல்' போன்ற பெரியார்கள் கொண்ட முடிவுகள் எவ்வளவு தூரம் கம்ப ராமாயணத்திற்குப் பொருத்தம் என்ற ஆராய்ச்சி

யும், ஓரளவு செய்யப் பெற்றிருக்கிறது. இப் புதிய அடிப்படையில், இப் பெரு நூலை ஆராய்ந்தமையின், தவறுகள் ஏற்பட்டிருத்தல் இயல்பு. அவற்றை அறிஞர்கள், ஆசிரியனுக்கு எடுத்துக் காட்டுவார்களாயின், அடுத்த பதிப்பில் திருத்திக்கொள்ள ஏது வாகும்.

'தன்னிரக்கம்' என்று தொடங்கும் பகுதியிலிருந்து, இறுதிவரை உள்ள பகுதிகளே வீழ்ச்சியை அவல இயலோடு இணைத்து ஆராயும் பகுதியாகும். பிற்பகுதியை எழுதி முடிக்கப் பேருதவி செய்தவர் திரு. S. R. மார்க்கபந்து சர்மா ஆவார். அவருக்கு ஆசிரியன் நன்றி உரியதாகும். இவ் வாசிரியனுடன் கல்லூரியில் துணைத் தமிழ்ப் பேராசிரியர் வேலை நடாத்தும் திரு. மொ. அ. துரை அரங்கனார், M. O. L அவர்களுடைய உதவியும் போற்றற்குரியது. அவருக்கும் நன்றி உரியது.

தம்முடைய பல்வேறு அலுவல்கள் இடையேயும், இந் நூலைப் படித்து, ஒரு முன்னுரை எழுதி உதவிய பல்கலை வேந்தர் திரு. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், M. A., B. L., M. O. L. அவர்கட்கும் அணிந்துரை உதவிய திருவாளர் திரு. வி. க. அவர்கட்கும் நன்றி உரியது. இந் நூலை வெளியிட்டு உதவிய திரு. வே. சோமையா அவர்கட்கும், நன்றி.

இறுதியாக ஒரு சொல்: இந் நூலை எழுதியதன் நோக்கம் கூறப்பெற்றது. அதை மீண்டும் நினைவூட்டும் கடமை உளது:

கம்ப ராமாயணத்தை ஒரு கலையாகக் கொண்டு கலைக் கண்ணுடன் படித்து எழுதப்பட்ட நூல் இதுவாகும். தனிப்பட்ட பாத்திரங்கள் மீதுள்ள விருப்பு வெறுப்புக்களைக் கொண்டு, இந் நூலைப் பார்த்தால், பெரிதும் கருத்து வேறுபாடு தோன்றவே செய்யும். எனவே விருப்பு வெறுப்பு நீக்கி இதனைப் படிக்கவேண்டுமென்று அன்பர்கள் வேண்டப் பெறுகிறார்கள்.

சென்னை
18—3—47

அ. ச. ஞா.

# பொருள் அடக்கம்

# இராவணன் மாட்சியும் - - - வீழ்ச்சியும்

## காப்பியம்

தமிழ் மொழியே மூன்றாகப் பகுக்கப்பட்டு இயல், இசை, நாடகம் என்று வழங்குவதை யாவரும் அறிவர். விரிந்த பல தொகுப்புக்களைத் தன்பால் கொண்டு இலங்குவது 'இயல்' பகுதி. பெருங் காப்பியங்கள் என்று இடைக் காலத்தில் எழுந்த அனைத்து நூல்களும் இத் தொகுப்பினுள்ளேயே அடங்கும். சிலப்பதிகாரம் நாடக நூலாகாவும் கருதப்படினும், அதனுள் இம் மூன்று பிரிவுகளும் இடம் பெறினும், பொதுவாக நோக்குமிடத்து, அதுவும் இயற்பகுதியிலேயே அடங்கும்.

பெருங் காப்பியத்திற்குரிய இலக்கணங்கள் யாவும் அமையப் பெற்று ஏறத் தாழப் பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய கம்ப ராமாயணமும் முற்கூறிய இயற் பகுதியிலேயே அமையும். ஈண்டுப் பெருங் காப்பியம் என்ற சொல்லைச் சில மாறுபாடுகளோடு கூட்டி ஆங்கிலத்தில் உள்ள 'எபிக்' (Epic) என்ற சொல்லின் நேர் பொருளுடையதாக வழங்கலாம்.

இப் பெருங் காப்பியங்கள் எல்லாம், உலகின் எப் பகுதியில் எம் மொழியில் தோன்றினும், அவை ஒரு சிறந்த உட்கோளோடு திகழ்தலைக் காணலாம். அவை பழைய சம்பவம் ஒன்றை அடிப்படையாகக் கொண்டு

தோன்றுகின்றன. அவற்றில் குறிக்கப்படும் பொருள், செயல்களின் விரிவால் ஓரளவு ஓர் உலகத்தையே தம்முள் அடக்கிக் கொண்டிருக்கின்றன. ஒவ்வொரு காப்பியமும் ஒரு சமுதாய மக்களின் சரித்திரத்தை அப்படியே கூறமுற்படுகிறது. பெருங் காப்பியத்திற் கூறப்பட்ட செயல்கள் நடந்து பலகாலஞ் சென்றபிறகே அவற்றைத் தொகுத்துக் கூறும் நூல் தோன்றுகிறது. ஆதி மனிதன்பலத்தைப் பெரிதாக மதித்து வெறும் வன்மைக்கு வணக்கஞ் செலுத்திவந்த காலமே மேற்கூறிய செயல் தோன்றச் சிறந்த கால மாகும். ஆனால் அந் நிலையில் சிறந்த கவிதை உடன் தோன்றுவதற் கில்லை. காரணம், மனித மனம் வளர்ச்சி யடையாமையே யாம். எனவே, காலம் செல்லச் செல்ல, நாகரிகம் மிகமிக, கவிதைக் கலை மக்கள் மனத்தில் முகிழ்க்கும் பொழுது, அக் கலை வெளி வருவதற்குச் சிறந்த சாதனமாக மேற்கூறிய செயல்கள் விளங்குகின்றன. ஆதி மனிதனின் அடிப்படை உணர்ச்சிகளாகிய காதல், வீரம், சினம் என்பவையும் அவற்றின் வெளிப்பாடுகளாகிய மணம், போர், சூழ்ச்சி முதலிய செயல்களுமே இக் காப்பியங்களில் பெரிதும் இடம் பெற்றன.

என்றோ நடந்த செயலைக் கூட்டியும் குறைத்தும் கூறக் கூடிய தன்மை யுடைமையினாலும், விருப்பு வெறுப்புக்களுக்கு இடந்தரவேண்டும் இன்றியமையாமை இன்மையினாலும் இக் காப்பியங்கள் சிறந்து விளங்குகின்றன. காப்பியங்கள் தோன்றும் பொழுது உள்ள மக்கள் வாழ்க்கைக்கும், அவற்றில் கூறப்பட்ட மக்கள் வாழ்க்கைக்கும் கட லனைய வேற்றுமை இருக்கலாம். காப்பியத்தில் கூறப்பட்ட செயல்கள் நடந்து பன்னெடுங் காலங் கழித்து, நூல் தோன்றுவதனால், இவ் வேற்றுமைகள் இருந்தே தீரும். ஒரு சமுதாயத்தில் ஒரு காலத்தில்

வாழ்ந்த பல்வேறு வகைப்பட்ட மக்கள் வாழ்க்கையையும், அவர்கள எண்ணங்கள், நினைவுகள், குறிக்கோள்கள், செயல்கள் ஆகிய இவற்றையும் கூறும் தன்மை இக் காப்பியத்திற்கே உண்டு. அம் மக்களது வாழ்க்கையைப் பற்றிய முழுத் தகவலையும் தரும் ஒரு சிறந்த கருவூலமாக அது விளங்க வேண்டும். இவற்றைத் தனியான முறையில் பாட புத்தகம் போன்றும் கூறலாம். அங்ஙனம் கூறும் நூலுக்குச் சமுதாய நூல் (Socialogy) என்று பெயர். ஆனால் அது யாவரும் கற்று இன்புறும் நிலையில இராமல் ஒரு சிலர்க்கே பயன்படும். எனவே யாவரும் விரும்பி அதனைக் கற்க வேண்டுமாயின் அஃது ஒரு காப்பியமாகவே தோன்றல் வேண்டும். அக் காப்பியத் தலைவர், அதன்கண் வரும் ஏனையோர் ஆகியவர் சொல், செயல் என்றவற்றால் அக் கால மக்கள் வாழ்க்கையை எடுத்துக் காட்டவேண்டும்.

இதனால் மெதுவாகச் செல்லவேண்டும் கட்டுப்பாடும் விரித்துக் கூறவேண்டும் தன்மையும் காப்பியத்திற்கு ஏற்பட்டுவிடுகிறது. பல்லாயிரக் கணக்கான பாடல்கள் பாடப்படுவதும் இக் கருத்தாலேயே. அங்கு; தொடர்ந்து செல்லும் நிகழ்ச்சிகளை, நாம் நின்று அனுபவித்துச் சுவைத்துச் செல்ல வேண்டிய முறையில், அது செல்ல வேண்டும். நிகழ்ச்சிகள், ஒன்றன் பின் ஒன்றாய், நாடகம் போல் அடுக்கி விரைவாக வருமாயின் அது காப்பிய நிலைக்கு ஏற்ற தாகாது.

பெருங் காப்பியங்கள் தோன்றின காலத்தைப் பற்றிப் பேராசிரியர் 'ஹேகல்' கூறும் வாதம் மிக அழகானது. அஃதாவது; ஆதிமனிதன், விலங்கு மனப்பான்மையிலிருந்து விடுபட்டு, நாகரிக மனப்பான்மைக்கு மாறுங் காலமே காப்பிய நிகழ்ச்சிகள் நடந்த காலமாகும். அஃதாவது மனிதனின் ஒழுக்கமுறை ஏட்டில் எழுதப்பட்டு

அதன்படி நடக்கவேண்டும் என்று வற்புறுத்தப்படுகிற காலமாகும். இதனாலேயே பெருங் காப்பியங்களுள் பெரும்பாலானவற்றில் போர் முதலிடம் பெற்று வந்தது. நாகரிக வளர்ச்சி யடைந்த மனிதன், தானே தன் மனச் சாட்சியின் உதவியால், சமுதாயத்தில் செம்மையாக வாழ வேண்டும் முறையை அறிந்து நடக்கிறான். அங்ஙனம் அவன் தன் மனச் சாட்சியைப் பழக்கு முன்னர், ஒழுக்கக் கட்டுப்பாடுகள் வெளியிலிருந்து வற்புறுத்தப்படும் சட்ட திட்டங்களாகவே இருக்கும். இந் நிலையே காப்பிய நிகழ்ச்சிகள தோன்றச் சிறந்த காலமாயினும், காப்பியம் பாடற்குரிய கவிதை தோன்றாத கால மாகும். பின்னர் அது தோன்றுங் காலத்தில் இந் நிகழ்ச்சிகள் பழையனவாகவும் நம்பத் தகாதனவாகவும் காணப் படலாம். இக் காப்பியத்தை இயற்றும் புலவன் தன்னை மறந்து, தான் எந்த சூழ்நிலையில் நின்று பாடுகிறானோ தன்னை அந் நிலையாகவே மாற்றிக் கொண்டு பாடினாற்றான் அதனை நாம் அனுபவிக்க முடியும். பாடலைப் படிக்கும் பொழுது நம்மை அஃது அவ்வுலகத்திற்குக் கொண்டு செல்ல வேண்டும்.

சமுதாயம் ஒழுங்கு முறையில் கட்டுப்பெற்று வாழ முற்படுங் காலம் காப்பிய நிகழ்ச்சி நடைபெறுவதற்கு ஏற்ற கால மன்று. சமுதாயம் செம்மை யடைந்து விட்டால், மனத்தில் தோன்றிய கருத்துக்களை உடனே செயலாக்க இயலாது தடைகள் தோன்றிவிடும். மேலும் மனிதனுடைய வாழ்வு, செம்மை பெற்ற சமுதாயத்தில் செயற்கை கலந்ததாகவும் ஆகிவிடுகிறது. இயற்கையோடு உறவு பூண்டு வாழ்ந்த ஆதி மனிதனின் வாழ்க்கை காப்பிய நிகழ்ச்சிக்கு ஏற்ற நிலைக் களமாகும். அளவுக்கு மிஞ்சிய செயற்கைச் சட்ட திட்டங்களை மனிதன் ஏற்படுத்திக் கொண்டவுடன் அவன் தனது

தனித் தன்மையை (Individuality) இழந்து விடுகிறான். தனித் தன்மை எவ்வளவுக் கெவ்வளவு மிகுதியாகக் காணப் படுகிறதோ அவ்வளவுக் கவ்வளவு காப்பிய நிகழ்ச்சிக்கு அஃது ஏற்ற இடம் ஆகிறது. காப்பியத்தில் காணப்படும் நிகழ்ச்சிகள் நேரடியாக உணர்ச்சியி லிருந்து பிறப்பவையாக இருக்கவேண்டும். உணர்ச்சி யைச் செயலாக்க இன்றைய உலகிலுள்ள தடைகள் அங்கு இருக்க மாட்டா. இயற்கையோடு ஒன்றிய வாழ்வு வாழ்ந்த அவர்கள் உணர்ச்சியை உடனே செய லாக மாற்றினர். கட்டுப்பாடுகள் நம்மைப் போன்று அவர்களைத் தடை செய்ததில்லை. போலி நாகரிகம் மிகுந் துள்ள நம் சமூகத்தில் தனி மனிதன் விருப்பம்போல் செய்யும் உரிமையை இழந்துவிட்டான்.

நாடகத்திற்கும், காப்பியத்திற்கும் உள்ள அடிப் படை வேற்றுமைகள் பல. அவற்றுள் சிறந்த ஒன்றை நாம் மறத்த லாகாது. நாடகத்தில் பாத்திரத்திற்கு உள்ள உரிமை காப்பியத் தலைவனுக்கு இல்லை நாடகத் தலைவனே வாழ்க்கையைத் தன் விருப்பம்போல் மாற்றி அமைத்துக் கொள்ளும் உரிமை பெற்றவன். காப்பியத் தலைவன் விதியினால் கட்டுப்பெற்றவன்; விதி செலுத்தும் வழி, அதனை எதிர்த்துச் செல்லச் சக்தியற்றுச் செல்கிற வன். காப்பியத் தலைவன் விரும்பினும், விரும்பாவிடி னும் அவனது விதி அவனைப் பிடர் பிடித்து உந்துகிறது. அவன் அதற்குக் கீழ்ப் படிந்தே நடக்கிறான். ஆனால் இங்கு விதி என்று கூறப்படுவது நம்மினும் உயர்ந்துள்ள ஒரு பொருள் வழங்கும் நீதி யாகும். அந் நீதி நாம் தகுதி யானது என்று நினைக்கும் வழியே செல்வதில்லை. நமது சிற்றறிவுக்கு எட்டாத முறையில் அது தனது நியா யத்தை நடத்திச் செல்கிறது. தனிப்பட்ட மனிதன் கற்பனைக்கு அடங்காத முறையில் தனது ஆணையை

அது செலுத்துகிறது. அதனால் காப்பியத்தில் பெரும் பாலும் சோகத்தின் நிழல் படர்ந்திருக்கிறது. இந்த அடிப்படையிலேயே காவியம் இயற்றப்படுகிறது.

மேலே கூறிய கருத்துக்களை மனத்தில் கொண்டு, இராமாயணத்தைக் காணவேண்டும். அங்ஙனம் காணும் பொழுது அஃது ஒரு வழி நூல் என்பதனையும் மறந்து விடலாகாது. தனியாகத் தானே காப்பியம் இயற்றுகிற வனுக்கு உள்ள உரிமை வழிநூல் செய்கிறவனுக்கு இல்லை. அவன் விருப்பம்போல் கவிதை புனைவதற்குச் சில தடைகளும் அங்கு ஏற்படுகின்றன. இவையனைத் தும் இருந்தும், இராமாயணம் ஓர் ஒப்பற்ற தமிழ்க் காவியமாக இருந்து வருகிறது.

கம்ப ராமாயணத்துச் சிறப்புக்களை எடுத்துப் பேச இஃது இடமன்று. அக் காப்பியம் பெற்ற தலைவர்கள் இருவர். ஒருவன் இராமன்; மற்றவன் இராவணன். இரண்டாவது உள்ள தலைவனின் மாட்சியும் வீழ்ச்சி யுமே நாம் காண எடுத்துக் கொண்ட பொருளாகும்.

இலங்கை வேந்தனாகிய இராவணனை வால்மீகி கண்டவிதம் வேறு; கம்பநாடன் காட்டுகிற விதம் வேறு. கம்பன் கூறும் கோசலம் எப்படி ஒரு கனவு நாடோ அப்படியே அவனது இலங்கையும் ஒரு கன வுலகம். அவனுடைய இராவணனும் ஒரு கனவுத் தலைவன். இங்ஙனம் கூறுவதால் உண்மை கூறாதவன் என்ற குற்றச் சாட்டை அவன்மேல் ஏற்றவேண்டுவ தில்லை. இத் தகைய பெருங் காப்பியத்தைக் கலைஞன் கைக்கொண்ட பொழுது அவற்றின் மூலம் சில உண்மை களை அறிவுறுத்த முன்வருகிறான் என்று நாம் அறிய வேண்டும். அவ்வாறு செய்யவேண்டுமேயானால் அவனது விருப்பம் போல் உண்மைகளை மாற்றவும் கூட்டல்

கழித்தல் செய்யவும் அவனுக்கு உரிமை இருத்தல் வேண்டும். ஒரு நிகழ்ச்சி எவ்வளவு உண்மையாக நடந்து சரித்திர பூர்வமானதாக இருப்பினும் அதனை அவ்வாறே கூறினால் அது பாட புத்தகம் போன்றதும், சுவையற்றதுமான சரித்திரமாகுமே தவிரக் கவிதை நிறைந்த கற்பனை மிகுந்த காப்பியமாக ஆகாது. நாம் அதனை இத்துணை விருப்பத்துடன் கற்கவும் மாட்டோம். எனவே அவனது கற்பனைக்கு இடந் தரவேண்டுமானால் அங்குச் சரித்திர பூர்வமான மெய்மையைத் தேடி கொண்டிருத்தல் தவறானதாகும். இத்தகைய இலக்கியப் படைப்பை ஆக்கும் கலைஞன் சில நிகழ்ச்சிகளை ஆதார மாகக் கொண்டு, தன் கற்பனையால் ஒரு முழு வடிவம் பெற்ற கலைக்கோயிலைச் சிருட்டிக்கிறான். அவன் ஆதார மாகக்கொண்ட நிகழ்ச்சிகள் அவன காலத்திலேயே நடை பெற்றவையாயும் இருக்கலாம். இன்றேல் பன் னெடுங் காலமாக வழங்கப்பட்டுவரும் கர்ண பரம் பரைக் கதைகளாகவும் இருக்கலாம். அத் தகைய கதை களை அடிப்படையாகக் கொண்டு தோன்றிய காப்பியத் தில் (இராமாயணம் போன்றதில்) சரித ஆராய்ச்சிக்கு இடமே இல்லை. இவ்வா றில்லாமல் சிலப்பதிகாரத்தைத எடுத்துக்கொண்டால் அதன் ஆசிரியர் காலத்திலேயே சம்பவம் நடந்ததாகலின், சரித்திர பூர்வமான உண்மை கள் பலவற்றை அங்கே பெறமுடியும். கலைஞனாக ஆக் கிக்கொள்ளும் அக்கலையின் வெளிப்பாட்டிற்கு அவனே சட்ட திட்டங்களையும் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அக் கட்டுப்பாட்டை மீறிச் செல்லாத வரையில் நாம் அவனைக் குறை கூறவேண்டியதில்லை.

இராவணன் என்றொருவன் வாழ்ந்தானோ? அவ் வாறாயின் எப்பொழுது? அவன் இச் செயலைச் செய் தானோ? அவன் தமிழனோ? ஆரியனோ? இக் கேள்விகள் அநா

வசியமாகும். இவற்றிற்கு விடை வேண்டுமானால் கம்ப ராமாயணத்திற் சென்று தேடவேண்டாம். இவ்வுண்மைகளை ஆராயப் பழைய சரித்திரத்தைத் தேடவேண்டுமே தவிர, இலக்கியத்தைத் தேடிப் பயனில்லை. கம்ப ராமாயணத்தில் உள்ள இராமனும், இராவணனும், ஏன்? அனைவருமே கம்பன் பெற்ற பிள்ளைகள். அவர்களின் ஆக்கமும், வீழ்ச்சியும் அவனுடைய கற்பனையே தவிர வேறு ஒன்றும் இல்லை. 'இங்ஙனம் ஒருவன் செய்ய முடியுமா? இஃது அறமா?' என்ற வினாக்களுக்கு அங்கு இடமில்லை. அவன் பெற்ற பிள்ளைகளை அவன் என்ன கருத்தோடு செயல் செய்யுமாறு செய்கிறான் என்றுதான் காணவேண்டும். நமது விருப்பு வெறுப்புக்களை அப் பாத்திரங்கள்மீது ஏற்றிக் காண்டல் பொறுத்த முடையதாகாது.

கம்பன் பெற்ற இராவணன் இருந்த மாட்சியையும், அவன் அடைந்த வீழ்ச்சியையும் கம்பனே குறிக்கிறான். இவை இரண்டையுஞ் செய்கிறவன் கலைஞனாகிய கம்பன் என்பதை மறந்து விடக்கூடாது! மாட்சியோடிருந்த இராவணனை ஏன் வீழ்ச்சி யடையச் செய்கிறான் என்று கேட்க நமக்கு உரிமை இல்லை. ஆனால் எவ்வாறு வீழ்ச்சி யடையுமாறு செய்கிறான் என்பதே நாம் காணவேண்டுவ தொன்று. கலைஞன் தனது கற்பனையால் இப் பாத்திரத்தை ஆக்கினானாயினும் அவனுக்குக் கூறப்பட்ட குணங்களெல்லாம் உலகில் காணப்படாதவை யல்ல. எனவே, இன்ன இயல்பால் வீழ்ச்சியடைந்தான் என்று கலைஞன் கூறினால், அது நாம் அறியவேண்டுவ தொன்று தானே? அதனை எவ்வாறு அவன் செய்கிறான் என்பதே கலையின் விளக்க மாகும்.

இராவணனை ஒரு காப்பியத் தலைவனோடு ஒப்பவே கம்பன மதிக்கிறான்; இத் தலைவர்களுள்ளும், ஓர் அவலத்

தலைவனுக்குள்ள அனைத்து மதிப்பையும் வழங்குகிறான். இராவணனைக் கம்பன் காட்டும் முறையிலேயே காண்பதுவே இந் நூலின் நோக்கமாகும். அவ்வாறாயின் 'அவலம்' என்பது என்ன என்றும், அஃது இலக்கியத்தில் எங்ஙனம் இடம் பெறுகிறதென்றும் அறிய வேண்டுவது இன்றியமையாததாகிறது. அடுத்து வரும் பகுதியில் அவலத்தைப் பற்றிய குறிப்புக்கள் தரப்படுகின்றன.

---

# அவலம்

(TRAGEDY)

அவலம் என்பது வாழ்க்கையிலும் இலக்கியத்திலும் இடம் பெறும் ஒரு சுவையாகும். அவலத்திற்கும் அழுகைக்கும் வேற்றுமை நிரம்ப உண்டு என்பதை நினைவில் இருத்தவேண்டும். அவலத்தின் முடிவு அழுகையாகவும் இருக்கலாம். ஆனால் அழுகையில் மட்டும் முடிந்தால் அது அவலமாக ஆகாது. அழுகையை விடச் சிறப்பாக வியப்புச் சுவை ஆண்டுக் காணப்படும். அவலத் தலைவன் அடைகின்ற ஒவ்வொரு துன்பமும், நம்மாட்டு அச்சத்தோடு கூடிய ஒரு வியப்பை உண்டாக்குகிறது. ஆனால் வாழ்க்கையில் உண்டாகும் அவலத்திற்கும் இலக்கியத்தில் காணப்படும் அவலத்திற்கும் வேற்றுமை உண்டு. வாழ்க்கையில் அவலத்தை யாரும் விரும்ப மாட்டார்கள். ஆனால் இலக்கியத்தில் அவலச் சுவை பெரிதும் விரும்பப்படும். அவலத் தலைவன் படுந் துன்பங்களில் எல்லாம் நாமும் பங்கு கொள்கிறோம். எனினும் அத் துன்பத்தில் பங்கு கொள்வதில் ஒருவித இன்பம் அடைகிறோம். ஆனால் அவ் வின்பம் பிறர் துன்

பத்தைக் கண்டு மகிழ்ச்சி அடையும் அற்பர்களது இன்பம் அன்று. ஆழ்ந்த துக்கத்தில் தோன்றும் இன்பமே யாகும்.

இலக்கியத்திற் காணப்படும் அவலம் பற்றி ஆராய்ந்து அரிய முடிவுகளைத் தந்த பெரியார்கள் இருவர். ஒருவர் 'அரிஸ்தாத்தில்'; மற்றொருவர் 'ஹேகல்' என்ற பெரியார். அப்பெரியார்கள் முடிபுகள் அனைத்தும் நம்மால் ஏற்றுக் கொள்ளக்கூடியவை அன்றெனினும், அவற்றில் பெரும்பாலானவை உலகிடைத் தோன்றிய இலக்கியங்கள் எல்லாவற்றிற்கும் பொதுவான வையே. எக் காலத்தும் தோன்றும் இலக்கியம் அனைத்திற்கும் அப் பொது நியதிகள் பொருந்துபவை.

அவற்றுட் சிலவற்றை ஈண்டுக் காண்போம். அவலம் நடைபெறுவதற்கு இன்றியமையாது வேண்டப்படுவது 'முரண்' (Conflict) என்று சொல்லப்படுவது. இரண்டு வேறுபட்ட கருத்துக்கள் உள்ள பொழுதே முரண் ஏற்படும். இக் கருத்துக்கள் தனித்தனி இயங்கு கிறவரையில் போராட்டம் இல்லை. ஏதோ ஒரு காரணத்தால் இவை ஒன்றற்கொன்று எதிர்ப்படின் அவற்றினிடையே முரண்பாடு தோன்றுகிறது. கருத்துக்கள், எண்ணங்கள், ஆசைகள், குறிக்கோள்கள் என்ற இவற்றினிடையே முரண்பாடுகள் உண்டாதல் இயல்பு. தனிக் குணங்களாக இவை நிற்பின் முரண்பாட்டிற்கு வேலை இல்லை. அதற்கு மறுதலையாக இப் பண்புகளை மேற்கொண்ட மக்கள் தம்முள் முரண்பாடு கொள்ளு கின்றனர். இவற்றுள் ஒன்றோ அன்றிப் பலவோ முரண்பாட்டிற்குக் காரணமாகத் திகழலாம். இவ்வாறு முரண்படும் கருத்துக்களை யுடைய மக்கள் சாதாரண மக்களாயின் அம் முரண்பாடு நிலைத்து நிற்பதில்லை.

ஆனால் அவற்றை யுடையார் வலுவுடையராயின் தாங்கள் கொண்ட கருத்துக்காகப் போரிடுகின்றனர்.

இப் போராட்டத்திலிருந்து தோன்றுவது அவலம். அவலம என்பது போராட்டத்தில் ஏற்படும் துன்பத்தின் சரிதை என்பதைப் பலரும் அறிவர். போராட்டம் என்றாலே துன்பந்தான் விளைவாக இருக்கும். ஆனால் வெறுந் துன்பம் மட்டும் அவலம் என்று கூறப்படுவதில்லை. அப்படியானால் தனிப்பட்ட மக்கள் அனுபவிக்கும் துன்பமெல்லாம் அவலம் என்றே கூறப்படல் வேண்டும். அவ்வாறில்லை யாதலானும், அத் துன்பம் தாழ்ந்த இனத்தைச் சேர்ந்தது ஆதலானும் அதனை அவலம் என்று கூறல் இயலாது. முரண்பாட்டின் விளைவாக நிகழ்கின்ற போரே துன்பத்திற்குக் காரணமாக இருப்பதாதலின் அப்போரே சிறப்புடையது. அச் செயல் பற்றி விளையும் அச்சம் முதலிய உணர்வுகளே சிறப்புடையவை. சாதாரணத் துன்பத்தைக் கண்டும் இரக்கம் கொள்கிறோம். வறுமை முதலியவற்றால் துன்பம் நேரிடுகையிலும் இரக்கம் கொள்கிறோம. ஆனால் இவ்விரக்கத்திற்கும் அவலத்தால் ஏற்படும் இரக்கத்திற்கும் வேற்றுமை உண்டு. மேலே கூறிய சாதாரணத் துன்பங்களை காணும்பொழுது உண்டாகும் இரக்கம் மனத் தளவின் நின்று மறைவது. ஆனால் முரண்பாட்டால் விளைந்த போர் அவலத்திற்குக் காரணமாக, அவ்வலத்தைக் கண்டு நாம் அடையுந் துன்பம் மனத்தளவில் நிற்பதில்லை, மனம், சித்தம் என்ற இரண்டையுந் தாண்டிச் சென்று நம் உயிரிலேயே சென்று தைக்கிறது. ஆன்ம பூர்வமான இரக்கத்தை நம்மாட்டு உண்டாக்குகிறது.

ஏனைய துன்பங்கள் மனத் தளவில் நின்றுவிட, அவலத்தால் ஏற்படுந் துன்பம் மட்டும் உயிரிடைச்

சென்று பதிவதற்கு ஒரு சிறந்த காரணமும் உண்டு. மற்றைய துன்பங்கள் பெரும்பாலும் உடலையோ அன்றி மனத்தையோ பற்றியன. வறுமை, நோய் முதலியவற்றால் ஏற்படும் துன்பங்களும் மனத்தையும் உடலையும் மட்டும் பற்றியன. வறுமைத் துன்பம் யாருக்கு உண்டாகிறது? மனத்தால் தன் வறுமையை எண்ணி, இன்பம் அனுபவிக்க முடியவில்லையே என்று நினைக்கிறவனுக்குத் தானே வறுமை இடுக்கண் செய்ய முடியும்? வறுமையை வேண்டுமென்றே பெற்று வாழும் துறவிகட்கும் மனத் திண்மை யுடையார்க்கும் இது துன்பமாகப் படுவதில்லை. அதனைத் துன்பமாக நினைக்கின்றவனுக்கும் அது மனத்தளவே நின்று விடுகிறது. இங்கும் ஒரு முரண்பாடு வேலை செய்கிறது பொருளுடைமையால் இன்பம் அனுபவிக்க வேண்டும் என்று நினைக்கிற நினைவிற்கும், இன்மை யென்ற உண்மை நிலைக்கும் உள்ள மாறுபாடே துன்பத்திற்குக் காரண மாகிறது. இம் முரண்பாட்டால் துன்பம் விளையினும் அது மிகவும் சாதாரண மானது. அத் துன்பம் நம் மனத்தில் அச்சத்தோடு கலந்த வியப்பை உண்டாக்குவதில்லை. ஆனால் அவலத்தில் ஏற்படும் முரண்பாடு எளிதான தன்று. உயிருக்குள் ஏற்படும் முரண்பாடே அவலத்திற்குக் காரண மாகிறது, அதாவது மனிதனின் எண்ணத்திற்கும் செயலுக்கும் இடையே தோன்றும் போராட்டமே யாகும். உயிரினுஞ் சிறந்ததாகக் கருதப்படும் இரண்டு பொருள்களின் நடுவே ஏற்படும் முரண்பாட்டையே உயிருக்குள் ஏற்படும் முரண் என்று கூறுகிறோம். கடமைக்கும் அன்பிற்கும் இடையே நடைபெறுகிற போராட்டத்தையும் இதற்கோர் உதாரணமாகக் கூறலாம். கணவன் மனைவி, அரசன் குடிமகன் தந்தை தனையன் என்பவர் போன்ற தொடர் புடையவர்

களின் இடையே நிற்பது அன்பு, கடமை ஆகிய சிறந்த தளைகள். இத் தளைகளால் பிணிக்கப் பெற்றுள்ள இருவர் முரண்பட்டு, இத் தளைகளை அறுத்துவிட முயல்வாராயின் ஆண்டு அவலம் நிகழ்கின்றது. தனி மனிதனுள்ளும் இது நிகழ்வதுண்டு. அவனுள் இருக்கும் இரண்டு சிறந்த பண்புகளுள் முரண் தோன்றி ஒன்றையொன்று மடக்க முயல்வதும் உண்டு. முன்னர்க் கூறிய தளைகளையுடைய இருவர் மாட்டு நிகழும் முரண்பாடும் பின்னர்க் காட்டிய இதுவும் ஒன்றேயாம். மேலே கூறிய இருவரிடையேயும் காணப்படுவது அன்பு முதலிய தளைகள். உலகிடை வாழும் எல்லா உயிர்களையும், புல்பூண்டு முதல் மனிதன் ஈறுக்குவுள்ள அனைத்துயிரையும், ஒன்றுபடுத்தி நிற்கும் எந்த ஒரு சக்தி உண்டோ அதனை ஒன்றல் (Harmony) சக்தி என்று கூறுகிறோம். இவ்வொன்றலை அடிப்படையாகக் கொண்டே கலைகள் அனைத்தும் தோன்றுகின்றன. பல வேறு பாடுகளோடு உலகிடைக் காணப் பெறும் பொருள்கள் அனைத்தினுள்ளும் அவற்றை இணைத்து ஒன்றுபடுத்தும் சக்தி ஒன்றுள்ளது. அச் சக்தியைப் பிறர் அறிந்து மகிழுமாறு வெளியிடும் சாதனமே கலையாகும். வேற்றுமையினிடையே ஒற்றுமையைக் காண்பதே கலை என்ற கட்சியும் ஒன்றுண்டு. கலைகள் முயன்று முயன்று வெளியிட நினைப்பதெல்லாம் 'ஒன்றலாகிய' ஒன்றையே. ஆனால் அவலமாகிய கலை ஒன்றுமட்டும் ஒன்றுதலில் இன்பந் தராது முரணில் இன்பந் தருகிறது. இவற்றின் இடையே என்றும் நிலை பெற்றுள்ளதும், ஒன்றோடொன்று ஒற்றுமைப்பட்டு நடைபெறுவதும் ஆன தன்மையை ஏனைய கலைகள் விரிக்கின்றன. ஓவியமும் சிற்பமும் அன்பு முதலிய இச் சக்திகள் ஒன்றுபட்டு இழைவதைக் காட்டுகின்றன. கணவன் மனைவி என்ற இருவரிடையே உள்ள

அன்பு என்னும் தளை அவர்களிருவரையும் ஒன்ருய்ப் பிணித்து வைக்கிறது. இருவரும் பிணிக்கப் பட்டிருக்கிற நிலையை எக் கலையால் வெளிப்படுத்தினுலும், ஓவியமோ சிற்பமோ, கவிதையோ எதுவாயினுஞ் சரி, அங்குத் தோன்றுவது இன்பம் என்ற ஒன்றுதான். ஆனல் பிணிப்பிற்குக் காரணமான இதே அன்பு போருக்குக் காரணமாக இருக்குமே யானல் அங்கே அவலம் பிறக்கிறது. அன்புகூடப் போருக்குக் காரணமாக இருத்தல் கூடுமோ என்ருல், ஆம் என்றே விடை தருதல் வேண்டும். இதனை நன்குணர்ந்த வள்ளுவப் பெருந்தகையார் "அறத்திற்கே, அன்புசார்(பு) என்ப அறியார்; மறத்திற்கும் அஃதே துணை" (குறள், 76) என்று கூறிப் போந்தார். ஆனல் இக் குறளுக்குப் பரிமே லழகர் வேறு பொருள் கூறிச் செல்கிருர். அஃதொருபுறம் நிற்க, மறம் நிகழ்வதற்கும் அன்பு காரணமா யுள்ளது என்ற கருத்தே நமக்குப் போது மானது. எனவே அன்பே முரண்பாட்டிற்குக் காரண மாகலாம் என்று அறிகிருேம். உதாரணத்தால் இதனை நன்கு விளங்கிக் கொள்ளலாம். சீதையின் மாட்டு அன்பு பூண்டார் இருவர். ஒருவன் இராமன், மற்றையவன் இராவணன். இராவணன் கொண்ட அன்பு சரியானதா என்ற கேள்வியைச் சற்று மறந்துவிட வேண்டும். அவ் வன்பு தவருகையால் நேர்ந்த பயன் ஒருபுறம் இருக்கிறது. நிற்க அவன் கொண்ட அன்புக்கும், இராமன் கொண்ட அன்பிற்கும் ஏற்பட்ட முரண்பாடே, ஒரு பெரிய அவலமாக நமக்குக் காட்சி யளிக்கிறது. அன்பு என்பது சிறந்த குணங்களுளெல்லாம் உயர்ந்தது. அவ் வன்பே இரண்டாகப் பிரிந்து தம்முள் முரண்பட்டுப் போர் இடுமாஞல் அப் போர் அஞ்சத் தக்கதாக இருக்கும். எல் லாரும் விரும்பி மேற்கொள்ளும் 'அன்பு' என்ற ஒன்றே இப்பொழுது அவலத்திற்கு அடி கோலி விட்டது. இவ்

வன்மை மேற் கொண்ட இருவரின் தராதரத்தையும் சிறப்பையும் நாம் கவனித்தலாகாது. அவர்கள் நல்லவர்களா? தீயவர்களா? என்ற வினு வெல்லாம் பின்னர் ஆராயப்படும். ஆனல் இப்போருக்குக் காரணமாக இருப்பது ஒன்றே. அஃது அன்பு என்று சொல்லப்படும். அவலத்திற்குக் காரணமான இம் முரண்பாடு நன்மைக்கும் நன்மைக்கும் இடையேகூட நிகழலாம் நன்மைக்கும் தீமைக்கும் இடையேயும நிகழ்வது இயல்பு. அஃதாவது முரண் ஏற்பட்டுப் போரிடும் இருவரும் நற்பண்புகளால் நிறைந்தவர்களாகவே இருக்கலாம். உதாரணமாகத் தேசத் தலைவனுன அரசன், அவன் குடிகளில் ஒருவன் என்ற இருவரிடையேயும் கருத்து வேறுபாட்டால் முரண் ஏற்பட்டுப் போர் நிகழலாம். இருவரும் தாம் நன்மை என்று கருதும் ஒன்றற்காகவே போரிடுகின்றனர். இறுதியில் ஒருவர் அழிய நேரிடலாம். இப் போராட்டத்தில் தன்னலம் என்பதோ, பயன் கருதிச் செய்யும் இழி தொழிலோ ஒன்றும் இல்லை. இத் தகைய போராட்டத்தை நன்மைக்கும் நன்மைக்கும் இடையே நடைபெறும் போராட்டம் என்று கூறுகிறேம். இதன் மறுதலையாகத் தீமைக்கும் நன்மைக்கும் முரண் ஏற்பட்டுப் போர் நிகழ்வதும் உண்டு. இங்ஙனம் நன்மைக்கும் தீமைக்கும் இடையே நடைபெறுகிற போர் இரு மனிதர்களிடையே நடக்கலாம்; அல்லது ஒரே மனிதனிடம் காணப்படும் நன்மை தீமை ஆகிய இருபண்புகளின் இடையேயும் நடைபெறலாம். எவ்வாறயினும் அஃது அவலம் என்றே கூறப்படும். இராவணனிடத்து நிகழும அவலம் அவனிடத்தே காணப்படும் இரண்டு தனிப் பண்புகளின் இடையே தோன்றிய முரண்பாடாகும். அவனது அன்பிற்கும, மானத்திற்கும் (Honour) இடையே நடக்கின்ற போரே அவலமாகப்

பரிணமிக்கிறது. அன்பு விரும்புகின்ற ஒன்றை மானம் தடுக்கிறது. இவை இரண்டையும் தனித் தனியே எடுத்துக் கொண்டால் அவற்றின் விருப்பங்களில் தவறு ஒன்றும் இல்லை. அன்பு தான் விரும்பிய பொருளை எவ்வாருயினும் அடைய வேண்டும் என்று விரும்புவதில் தவறு இல்லை. மானமும், தவருன முறையிற் சென்று அன்பு செய்யப்பட்ட பொருளை அடைவது தனக்குத் தாழ்வு என்று நினைப்பதும் தவறு இல்லை. இந்த இரண்டு பண்புகளும் தங்கள் தங்கள் எல்லையில் நிற்கின்ற வரையில், போர் நிகழ்வதில்லை. ஆனல். ஒன்று மற்றென்றை அழித்துவிட்டுத் தானே ஆட்சிசெய்ய வேண்டும் என்று நினைக்கையில்தான் முரண்பாடு முற்றிப் போர் மூளுகிறது.

இனிப் பொதுவான கருத்துக்கள் சிலவற்றைக் காண்போம்: இப் பண்புகளும் தளைகளும் அவலத்திற்குக் காரணமாக விருத்தல் அவை வெளிப்படும் தலைவர்களைப் பொறுத்தே இருக்கின்றன. அவலத் தலைவனது சிறப்புக்களில் சிறந்ததும், அவனுடைய வீழ்ச்சிக்குக் காரணமாக இருப்பதும் ஆகிய ஒரு பண்பு என்னவெனின் தான் மேற்கொண்ட செயலின் நன்மை தீமை ஆராயாது இறுதிவரை அதைக் கொண்டுசெலுத்தும் தன்மையாம.

இங்ஙனம் கூறுவதால் அவனுக்கு வேறு பண்புகளே இல்லை யென்ற கருத் தில்லை. எத்தனையோ பண்புகள் இருக்கலாம். ஆனல் போருக்குக் காரணமாக உள்ள இரண்டு பண்புகள் அவற்றையெல்லாம அடக்கித் தாம் மட்டும் தலைதூக்கி நிற்கும். இவ் விரண்டனுள் ஏதோ ஒன்றேடு தலைவன் மனப் பூர்வமாக இணைந்து விடுகிருன். அங்ஙனம் அவன் இணைந்த பிறகு அதனைக் கொண்டு செலுத்துவதில் அரை குறை வேலை செய்வதில்லை.

தான் வேறு என்றும், அப் பண்பு தன்னால் கொண்டு செலுத்தப்படும் ஒரு குணமே தவிர, அதனால் தான் கொண்டு செலுத்தப்படுதல் கூடாது என்றும் அவன் நினைப்பதில்லை. அதற்கு மறுதலையாக, அப் பண்பொடு தான் இரண்டறக் கலந்து விடுகிறான். தலைவனுக்குரிய பண்பு என்பது போய்ப் பண்பின் அடிமையாக அவன் ஆகி விடுகிறான். இதனால் அவன் அப் பண்பின் எதிரான எதையும் முறை யானது என்று எடுத்துக் கொள்வதில்லை; அதன் மறுதலையான பண்பிலும் சிறிது நியாயம் இருத்தல் கூடும் என்ற எண்ணமே அடைவதில்லை. அத் தலைவனிடம் வேறு எத் தகைய நல்ல பண்புகள் இருப்பினும், பிறர் வியக்கத் தகுந்த குணங்க ளிருப்பினும் அவை யெல்லாம் முரண்பாட்டால் விளையும் அவலத்தில் தலை யெடுப்ப தில்லை. அவை அனைத்தும் சேர்ந்து அம் முரண் பாட்டிற்கே துணை செய்கின்றன. "இராவணன் ஆயிரம் மறைப் பொருள் உணர்ந்து அறிவு அமைந்தவன்" தான். அப்படிப்பட்ட அவன் சீதைபாற் கொண்ட காமத்தால் அவலத் தலைவனாக ஆகும் பொழுது, காமம் அவன் பண்புகளில் ஒரு பகுதியாக அமையவில்லை. அவன் அக் காமமாகவே மாறிவிடுகிறான்; அக் காமத்தின் முன்னால், வானமும் வையமும் வளர்ந்த வான்புகழையும்', தனது 'அறிவையும்', இந்திரப் பெரும் பதத்தையும்', பலி யிட்டுவிடுகிறான்.

இங்ஙனம் இரண்டு முரண் பட்ட பண்புகளின் இடையே நடக்கின்ற போரில் ஒன்றும் முற்றிலும் வெற்றி பெறுவதில்லை. அங்ஙனம் வெற்றி பெறுமற் போவது விதியின் விளையாட்டுமட்டு மன்று. அஃது இயற்கையின் கூறுபாடு மாகும். ஏனெனில் இப் பண்புகள் அனைத்தும் தலைவனுக்கு உறுப்புக்களாக அமைய வேண்டுமென்பது இயற்கையின் கட்டளை. அதனை விட்டு

அவை தலைமை இடத்திற்குப் போராடுகின்றன; ஏனைய உறுப்புக்களைத் தள்ளித் தாங்களே தலைமை வகிக்க வேண்டும் என்று நினைப்பதோடுமட்டு மல்லாமல், உறுப்புக்களை யுடைய தலைவனையும் தங்கள் வசப்படுத்தி அடிமைப்படுத்த முயல்கின்றன. அறிவின் உதவியால் இவ் வுறுப்புக்களாகிய பண்புகளைத் தலைவன் அடக்கி, ஆட்சி செய்து, அவ் வவற்றிற்குக் கொடுக்க வேண்டும் இடம் கொடுத்து வைக்காது போவானேயாகில் அவற்றுள், சில முரண்டி, அவனை அடிமைப்படுத்த முயல்கின்றன. அங்ஙனம் போரிடும் அப் பண்புகளுள் ஒன்று முற்றிலும் வெற்றி பெறுமேயானால் அஃது இயற்கையின் கட்டளைக்கு மாறாக முடியும். காரணம் என்னை?

மனித மனம் பல பண்புகளின் கூட்டுறவால் ஆயது. அவனது வாழ்க்கை செம்மை யடைவதற்கேற்ப இவை அமைந்துள்ளன. இவற்றுள் ஏதேனும் ஒன்று மிகினும் வாழ்க்கை செம்மையாக நடவாது. அங்ஙனம் மிகுகிற பண்பு நற் பண்பாகவே இருப்பினும் பயன் நன்மையாக இருக்கும் என்று கூறல் இயலாது. இங்ஙனம் அவ் வவற்றிற் குரிய அளவோடு அவை அவை அமைந்தா லொழிய உலகம் நன்கு நடைபெறாது. எனவே இவற்றுள், ஒன்று மற்றொன்றை அடக்கி, ஆட்சி செய்து, மேல் எழும்ப முயலும் பொழுது, இயற்கை தனது திறத்தால் அவற்றை அடக்கிச் சமநிலைப் படுத்துகிறது. அங்ஙனம் இயற்கை அடக்கும் பொழுது அழிவு நேரிடலாம். அந்த அழிவு அவலமாக நமக்குக் காட்சி யளிக்கிறது. பல சமயங்களில் அழிக்கப்படும் பொருள் நன்மை யாகவே இருக்கலாம். இங்ஙனம் அழிக்கப்படும் பொருள் நன்மையாக இருந்தால்மட்டும் அங்கே அவலம் தோன்றும் என்று ஹேகல் போன்ற பெரியோர் கருதினர். ஆனால் தீமையே

அழிக்கப்படினும் அதிலும் நாம் வருத்தத்தையே அடைகிறோம். மேலும் அத் தீமை மிகப் பெரியதாயிருக்குமாயின் நமது மதிப்பு இன்னும் உயருகிறது. எனவே ஹேகலின் கருத்துத் தற் காலத்தவரால் மறுக்கப்படுகிறது.

ஒவ்வொரு பண்பும், தான் தன் நிலை பேற்றுக்குப் போராடினால் தவறில்லை. அவலத் தலைவரின் வாழ்க்கையில் இவ்விதம் நடைபெறுவதில்லை. ஏதோ ஒரு பண்பு மிகும் பொழுது, மற்றப் பண்புகள் வாழ அம் மிகும் பண்பு இடங் தருவதில்லை; தானே ஆட்சி செய்ய முற்படுகிறது. இதனாலேயே அவர் ஏனையோரினும் மேம்பட்டவராகக் கருதப் பெறுகின்றனர். எவ்வாறாயினும் மற்றவற்றின் உரிமையில் ஒரு பண்பு தலையிடும் பொழுதே போராட்டம் மிகுந்துவிடுகிறது. அதனாலேயே முழு உரிமை ஒன்றிற்கும் இல்லை என்பதை நிலைநாட்டப் போரின் இறுதியில் முழு வெற்றி ஒன்றுக்கும் இல்லை என்ற நிலை ஏற்படுகிறது.

போரிடும் பண்புகள் இரண்டுமே போரில் நட்டமடைகின்றன. இறுதியில், வெற்றி பெறும் பண்பும் தோல்வியடைந்த பண்பு பெற்ற நட்டத்தை அடைகிறது. எனவே பெயரளவில் வெற்றி ஏற்படுகிறதே தவிர, முழு வெற்றி என்று அதனைச் சொல்வதற்கில்லை.

இயற்கை இறுதியில் தரும் இம் முடிவு பல வகையில் தரப்படலாம். முரண்பாட்டில் தொடங்கிய பொருள்கள் தம்முள் ஒத்துப்போய்விடலாம். இரண்டு உரிமைகளும் ஒன்றை ஒன்று பொறுத்துக்கொண்டுபோய்விடலாம். அவ்வாறாயின் முடிபு துன்பமின்றிக் கிடைத்துவிடுகிறது. அவலத் தலைவன் தன் தவற்றை உணர்ந்து

அதற்கு இரங்கிக் கழுவாய் தேடிக் கொள்ளலார். அதுவும் ஒரு முடிவே ஆனால் சில சந்தருப்பங்களில் இறுதி வரைப் போராட்டம் நீடிக்கப்படுகிறது. ஒரு பண்பு இறுதியில் அழிக்கப்படும் வரையில், போர் நடைபெறுகிறது. அழிக்கும் பண்பும் அவ் வேளையிலே சிறிது அழிக்கப்படுகிறது. இந் நிலையில் அவலத் தலைவனும், அவனோடு தொடர்புடையாரும் அழிக்கப்பெறுகின்றனர். 'இழவு' (Catastrophe) நேரிடுகிறது. இந் நிலையில் 'அறம்' அழிக்கும் சக்தி யுள்ளதாகவும் காணப்படுகிறது. இவ் விறுதி இழவில், நாம் ஒருவகை ஆறுதலை அடைகிறோம். போரிட்ட பண்புகள் முற்றிலும் மடிவதில்லை. ஆனால் அவை எல்லை யற்றுச் சென்று, பிற பண்புகளையும் அடக்கி ஆள முற்பட்ட தன்மையே அழிக்கப்படுகிறது.

தமிழிலக்கியங்களிற் காணப்படும் அவலங்களில் இவ் விரண்டு பண்புகளுமே சிறக்கக் காணலாம். இராவணன் அவலத்திற்கு அடிப்படை காமமும், மானமும், சூரபதுமன் அவலத்திற்கு அடிப்படை அறிவும் அறியாமையும், கோவலன் அவலத்திற்கு அடிப்படை மானமும் காதலும் ஆகும். இராவணன் காமத்தைப் பெரிதாகவும், சூரபதுமன் அஞ்ஞானமாகிய ஆணவத்தைப் பெரிதாகவும், கோவலன் மானத்தைப் பெரிதாகவும் நினைத்து, அதனால் தம் உயிரும் இழந்தனர்.

இராவணன் இறுதி நிலையில் தன் பகைவன் யார் என்று அறிந்து கொள்கிறான். அந் நிலையில் சீதைபாற் கொண்ட ஆசை நீங்கிற்றேனும் இதுவரை தலைகாட்டா திருந்த மானம் இப்பொழுது வெளிவருகிறது அதுவும் தன் நிலையில் இருந் திருக்குமேயாயின் அவனது ஆவி பிரிந்திருக் வேண்டிய இன்றியமையாமை இல்லை. இதுவரை ஆசைக்காகப் போரிட்ட இராவணன் இப்பொழுது

மானத்திற்காகப் போராடுகிறான். 'தனியாண்மை நிறுத்தி ஆவி முடிப்பன்' என்று கருதுகிறான்.

சூரபதுமனும், இறுதியாகத் தான் போரிடும் பேறு பெற்றது குழந்தையோ டன்று என்றும், அவனே எல்லாம் வல்ல முழு முதற் பொருளென்றும் மெய்யுணர்வு பெறுகிறான். உடனே தலையால் வணங்க வேண்டும்; நாவால் துதிக்க வேண்டும்; கால்களால் வலம் வர வேண்டும் என்று நினைக்கிறான். ஆனால், இந் நினைவை அடுத்து மற்றோர் நினைவு தோன்றுகிறது. அதுவே அவனது இறப்பிற்குக் காரண மாகிறது. 'தடுத்தது மானம் ஒன்றே' என்று அவனே கூறிவிடுகிறான். அஞ்ஞானம் என்று கூறப்படும் அறியாமை நீங்கினும் அவ் விடத்தைப் பற்றிக் கொண்டு எல்லை யற்ற மானம் ஆட்சி செய்ய முற்பட்டுவிடுகிறது. மானம் சிறந்ததா யினும் அஃது அறிவு, ஞானம் போன்ற மற்றப் பண்புகளை நீக்கி ஆட்சி செய்ய முற்பட்டமையின் அவன் அழிவு நேரிட்டது.

கோவலன் மாதவிபால் கொண்ட காதலுக்கும், அவளைப் பிரிந்த பின்னர் அவன் உணர்ந்த மானத்திற்கும் நிகழ்ந்த பூசலே அவனது அவல நாடகமாக ஆகி விட்டது. மாதவிபால் வாழுகின்ற வரையில் எவ்வாறு மற்றை உலகத்தை மறந் திருந்தானோ அவ்வாறே அவளை விட்டு நீங்கினதும் ஏனைய உலகை அவன் மறந்து விட்டான், தான் வாழ்ந்த வாழ்க்கையில் அடைந்த தோல்வியைப் பிறர் அறியு முன்னர்த் தான் வெளிநாடு சென்று விட வேண்டும் என்று நினைத்தான். அவ்வாறு செல்ல, அவன் நினைவைத் தூண்டியது மானம ஒன்றே. அங்ஙனம் அவன் செய்திருக்க வேண்டா என்பதை நாம அறிவோம். மீண்டும் அவள்பால் செல்லா

மல் அவன் வாழ்ந்திருப்பின் அதுவே மானம் காத்த மையை அறிவித்திருக்கும். ஆனால், அவன் மதுரை சென்றது மானமாகிய பண்பை மிகைப் படுத்தியதாகும். இதுவே அவன் சாவிற்குக் காரணமாகிவிட்டது.

அவலங்கள் தோன்றும் காரணம் பற்றி அவற்றை இரண்டாகப் பிரிக்கலாம். அவற்றுள், முதலாவது இரண்டு நந் நல மற்ற பண்பாடுகளுள் தோன்றும் போராட்டம் பற்றி நிகழுகிற அவலம்.

இத்தகைய அவலம் தமிழ் இலக்கியத்தில் காணப் படுவதில்லை. காரணம், நன்மைக்கும் நன்மைக்கும் முரண் ஏற்படுவதைப் பழந் தமிழர் ஏற்றுக் கொண்டதே இல்லை. பிறர் பொருட்டாகத் தன் வாழ்க்கையைச் செலுத்த ஒருவன் முனைந்து அதில் தோல்வி எய்தின் அதனை இவ் வகை அவலத்தில் சேர்க்கலாம். ஆனால் அங்ஙனம் வாழ்ந்து தோல்வி எய்தி, அதனால் அழிந்து போயினும் அத் தகையோர் வாழ்வை அவலம் எனத் தமிழர் கொண்டிலர். பெரிய புராணத்தில் கூறப் படும் சில நாயன்மார் வரலாறுகள் இவ் வகுப்பைச் சேர்ந்தவை. இவ் வவலத்தின் அடிப்படை, தன்னையும் தன் செயலையும் அடிப்படையாகக் கொண்ட தன்று. இஃது ஒரு சிறந்த அவலமே. இறுதியில் ஏற்படும் இழவில் நாம் அவலத் தலைவன் பெற்ற தண்டனை தகுதியானது என்று நினைப்பதற்கும் அஞ்சுகிறோம். தண்டனை தந்த பொருள்மாட்டுக் கொண்ட மதிப்பால் வேறு வழி யில்லை என்றே நினைக்கிறோம்.

ஆனால் ஹேகல் முதலியோர்களால் ஒத்துக் கொள் ளப்பட்ட இதனினும் வேறுபட்ட அவலம் ஒன்றுண்டு. இந்த அவலத்தில் அடிப்படைப் பொருள் இரண்டும், தனி மனிதனையும், அவனுடைய பண்பு செயல்களையும் பொறுத்தவையே. உலகத்திற்காகவோ, தனது சமு

தாயத்திற்காகவோ செய்யப்படுஞ் செயல் ஒன்றும் ஈண்டில்லை. கதையின் போக்கில், அவலத் தலைவனது எண்ணம் செயல்களின் அடிப்படைக் காரணத்தை நாம் காண முடிகிறது. இராவணனுடைய எண்ணத்திலும் செயலிலும், அரக்கர் சமுதாயத்தைப் பற்றிய கவலை ஒன்றும் இல்லை. ஏன்? அருமைத் தம்பியும், தனயனுங் கூட அவனுடைய மனக் கருத்து முடிவு பெற உதவும் தூண்களாகப் பயன் படுகிறார்களே தவிர வேறில்லை. தனிப் பட்ட அவனுடைய ஆசை முடிவு பெற இத் துணைச் செயல்களும் நிகழ்கின்றன. அவ் வாசை முறையானதா என்ற கேள்விக்கு நாம் விடை இறுத்துப் பயனில்லை. முறை யற்ற தென்றே யாவரு ஒப்புக் கொள்வோம். ஆனாலும் முறை யற்ற ஆசை இவ்வளவு தூரம் வாதாடலாமா எனின், அதற்கு அவனே விடை கூற முடியும். அவலத்தில் இக் கேள்விக்கும் அவசியமில்லை என்றே கூறி விடலாம். நாம், ஒழுக்கம் என்றும், சட்டம் என்றும், கட்டுப்பாடு என்றும் வைத்துக் கொண்டிருக்கும் அளவு கோல்களைக் கொண்டு இவ் வவலத் தலைவர்களின் செயலை அளவிட முடியாது. நம சட்ட திட்டங்களே அவர்கட்கும் ஏற்றனவாக இருப்பின் நமக்கும் அவர்கட்கும் வேற்றுமை இல்லாமற் போய் விடும். அவ்வாறாயின் அவர்கள் நம்போன்ற சாதாரண மனிதர்களாக ஆவார்களே தவிர அவலத் தலைவர்களாக ஆக மாட்டார்கள். அவர்களின் சட்ட திட்டங்களை அவர்களே வகுத்துக் கொள்கிறார்கள், ஆதலால் செயலும் செயலுக் கேற்ற முடிபும் இருக்கின்றனவா வெனக் காண்பதே அவலத்தின் நோக்க மாகும், என்கிறார் 'ஹேகல்' என்ற பெரியார்.

தமது இன்பம் ஒன்றையே கருதி வாழ்ந்து அவலத் தலைவ ராகிற இராவணன் போன்றார் இலக்கி

யத்தில் இடம் பெறுவது இராமன் பெருமையை மிகு திப் படுத்திக் காட்டவே யாகும் என்று ஒரு சிலர் நினைக்கின்றனர். இது தவறு. தவறான செயலில் ஈடு படினும், தன் பாலுள்ள ஏனைய சிறந்த பண்புகளால் இராவணன் ஒரு தலைவனுக்கு வேண்டும் சிறப்புக்கள் அனைத்தையும் பெற்றிருக்கிறான். இறுதியில் அவன் இறக்கும் பொழுது 'தகுந்த தண்டனை'யை அடைந் தான் என்ற எண்ணம் மட்டும் நமக்குத் தோன்ற வில்லை. அதற்குப் பதிலாக, வருத்தத்தையும், இரக் கத்தையுமே அடைகிறோம்; கவிஞனும் அவ்வாறே அடைகிறான். 'இவனோ இந் நிலை யடைந்தான்?' என்றே வருந்துகிறோம். ஆனாலும் அவலத் தலைவன் இறுதியில் ஒரு விதமான ஆறுத லடையவேண்டு மென்றே விரும்புகிறோம். இவ் வாறுதல் எத் தகையதாக வேண்டு மானாலும் இருக்கலாம். இத் தகைய எண்ணம் நம் மனத் தில் உண்டாகக் காரணம், நாம் அவலத் தலைவனின் முழுத் தன்மையிலும் ஈடு பட் டிருந்தமையே யாகும். அங்ஙனம் அல்லாமல் அவனுடைய தீமையை மட்டும் நினைந்திருப்போ மாகில் அவன் அழிவுக்கு வருந்த மாட்டோம். அங்ஙனம் இன்றி அவனுடைய முழுத் தன்மைக்கும் அவனை விரும்புகிறோ மாதலின் எவ் வித மாகவேனும் அவன் அமைதி பெறவேண்டு மென்றே விரும்புகிறோம். அவ் வமைதி எவ் விதமாகவேனும் இருக்கலாம். இவ் வுலகை விட மே லுலகம் சிறந்த தாகலின் அதனை விரும்பி உயிரை விடும் தலைவர் களும் உளர். அல்லது, தமது வீழ்ச்சியில் அமைதியைக் காணுகிறவர்களும் உளர். இறுதியாகத் தம்மை நசுக்கிக் கொல்லும், துன்பங்களிடையே நின்றும், இறுதிவரைத் தமது கருத்தை விட்டுக் கொடாது நின்று உயிரை விடும் அவலத் தலைவர்களும் உண்டு.

தான் கொண்ட கொள்கையை இறுதிவரை விடாது பற்றி நிற்கும் வீரம், தனக்கு அழிவு வந்த விடத்தும், அதனை ஏற்றுக் கொண்டு அக் கொள்கையை நிலை நாட்டும் அவ் வீரம் போற்றற் குரியது. இங்ஙனம் கொள்கைக்காக உயிரை விடுதலினாலேயே இவர்கள் வீரர்கள் என்றும், அவலத் தலைவர்கள் என்றும் போற்றப் பெறுகின்றனர்.

அவலஞ் சிறக்கின்ற நாடகங்களுள் காட்டப்படும் நிகழ்ச்சிகள் பல வகைப்படும். அவலத்தை மிகுதிப் படுத்திக் காட்டும் வன்மை, ஆசிரியனைப் பொறுத்ததே. உடலுக்கு நேரும் துன்பமும் அவலத்தைக் காட்டுகிறது. அதைவிட அதிகமாக, மனம் துன்பமடையும் பொழுது அவலம் மிகுதிப் படுகிறது. இவற்றுள், அவலத் தலைவனின் வீழ்ச்சிக்குக் காரணமாகக் காட்டப்படும் பொருள்களுள் 'விதி' என்ற ஒன்று மிக இன்றியமையாதது. விதி என்று கூறின வுடன் அது கையா லாகாதவர்கள் கூறும் சமாதானம் என்ற முடிபுக்கு வருதல் தவறு. உலகிடை எத்தனையோ செயல்கள் நடை பெறுகின்றன. நமது அறிவை எவ்வளவு தீட்டிக் கொண்டு அவற்றிற் கெல்லாம் காரணம் என்ன வென்று ஆராய்ந்தாலும் ஒரு முடிவுக்கு வர இயலுவ தில்லை. உலகில் நடை பெறுகிற செயல்கள் எல்லாம் காரண காரியத் தொடர்பால் கட்டுப்படுத்தப் படுவதில்லை. மனிதனது செயல்கள் நிச்சயமாகப் பலனைத் தந்தே தீரும். ஆனால் அவை எப்பொழுது பலன் தரும் என்று கூறுவதற்கில்லை. மேலே கல்லை எறிந்தால் அது கீழே விழுந்தே தீரும்; எறியப்படும் வேகத்திற் கேற்ப, உடனேயும், காலந் தாழ்த்தும் விழும்; உடனே வீழினும், சிறிது காலந் தாழ்த்து வீழினும் விழுதல் என்பது தவறாது. மேலும், கல்லை எறிந்தால், அது திரும்புங்கால், கல்லாகவே வருமே

தவிர, மலர் மாலை யாக வருதல் இயலாத காரியம். இக் கருத்தே பற்றி நல் வினையின் பயன் நன்மை யாகவும், தீ வினையின் பயன் தீமை யாகவும் வந்து தீரும் என்று கூறப்படுகின்றன.

சில செயல்களின் பயன் பிறவிதோறுந் தொடர்ந்து வருதல் உண்டு. எனவே, ஒரு பிறவியில் அனுபவிக்கும் பயன் எச் செயலால் நிகழ்ந்தது என்று ஆராய்ந்து பய னில்லை. இக் கருத்தை அடிப்படையாகக் கொண்டே அவலம் நடைபெறுகிறது. கல்வி கேள்விகளிற் சிறந்த தலைவன் ஒரு பெருந் தவற்றைச் செய்கிறான். அவனே தவறு என்ற அறியக் கூடிய அதனைப் பிறர் எடுத்துக் காட்டிய பொழுதும் திருந்துகிறானில்லை. காரணம் என்ன? தனக்கு அறிவைத் தானே தேடிக்கொள்ள யாரேனும் முன் வருவார்களா? அறிவு உறுதி என்று அறிந்திருந்தும் ஏன் இத் தலைவன் இங்ஙனம் செய்கிறான். விடை கூற முடியாத விடத்து விதி என்று கூறுகிறோம். மாட்சியுடைய அவலத் தலைவன் வீழ்ச்சி யடையும் பொழுது நாம் வியக்கிறோம். இத் தகைய மாட்சியுடைய ஒருவன் தான் செய்த தவற்றை அறிந்துகொள்ளாமலும், அறிந்த பின்னர் அதனைப் போக்கிக் கொள்ளாமலும் இவ்வாறு வீழ்ச்சியடைய லாமா, என வருந்துகிறோம். இத் தகைய வீழ்ச்சியை அடைந்தவன் நன்மையும், தீமையும் முரண் பட்டதால் வீழ்ந்திருந்தால் ஒரு வேளை மன அமைதி யடையலாம். ஆனால் நன்மையும் நன்மையும் முரண்பட அதன் பயனாக வீழ்ச்சியும் அவலமும் ஏற்பட்டிருந்தால் நாம் வியப்பும் திகைப்பும் அடைகிறோம். ஏன் ஒரு நன்மை வீழ்ச்சியடைய வேண்டும்,ஒன்று வெற்றி பெறவேண்டும் என்று நம்மையும் அறியாமல் கேட்கிறோம். இவ் வினா விற்கு விடை கிடைத்தல் இயலாத காரியம் என்று

அறிகிறோம். இந் நிலையில்தான், ஆசிரியன், விதி என்ற ஒன்றை முன் நிறுத்துகிறான். விதியின் பயனாலேயே ஒரு நன்மை அழிகிறது; மற்றொன்று வெற்றி பெறுகிறது. அழியும் நன்மை, வலிய விதியால் அழிக்கப்படுகிறது. அதற் குரிய காரணம் நாம் அறிவால் காணும் தரத்த தன்று. ஒரு வேளை உள் ளுணர்வால் காணலாமேனும், அவ் வழியின் நியாயத்தை எடுத்துக் கூற முடியாது. எனவே நமது விவகார அறிவால் காரணங் காண முடியாத ஒன்றையே 'விதி' என்று கூறுகிறோம். விதி வலிதாயினும், அதன்வழிச் சென்று வீழ்ச்சி யடைபவர்களைக் காட்டிலும், அதனை எதிர்த்து மடிபவர் புகழுக் குரியர் வீழ்ச்சிக்கு முழுக் காரணமும் விதியே என்று கூறும் அவலத்தைக் காட்டிலும் தலைவனது செய்கையாலேயே இம் முடிபு ஏற்படலாயிற்று என்று கூறும் அவலஞ் சிறந்தது. குருட்டு விதி முன்னே செல்லப் பின்னே செல்கிறான் கோவலன். செய்கிற செயலின் பயன் இது வாகும் என்று தெரிந்து செய்பவ னல்லன் அவன். அவன் வீழும்போது இரக்கம ஒன்றுமே நம் மாட்டு நிகழ்கிறது. ஆனால், தான் செய்வது இன்னது என்று தெரிந்திருந்தும், அதன் பயன் எதுவாய் விளையும் என்று அறிந்திருந்தும், 'விதி வலிது' என்று அறிந்திருந்தும், தனது மனவலி ஒன்றையே துணையாகக் கொண்டு, இறுதிவரைப் போராடி உயிர்விடும் வீரன் அவலத் தலைவன் ஆக எவ் வாற்றானும் தகுதி உடையனாவான்.

இத் தகைய வீரர்களின் முடிவின் பிறகு, நம் மனத்தில் இரக்கத்தோடு கூடிய வியப்பும் தோன்றுகிறது. அவன் எத் தகைய தவற்றைச் செய்து அதன் பயனாய் அழிந் திருப்பினும், நம் வியப்புக் குறைவதில்லை. ஒரு சிலர் கருதுகிறபடி இத் தண்டனை இவனுக்கு ஏற்றது தான் என்ற எண்ணம் தோன்றுவதில்லை. அவனுக்கு

அழிவு ஏற்படுகிறவரை அவனுடைய, தவறுகள் நம் மனத்தின் முன்னர்த் தெரிகின்றன.

ஆனால், அவன் தவறுகளுக்குச் சாவாகிய முத்திரையை வைத்து விட்ட பிறகு, நாம் அவன்மேல் காழ்ப்புக் கொள்ளுவதில்லை. தனது முடிவை அவன் வரவேற்கும் முறையில், நாம் நம்மையும் அறியாமல் அவன்பால் மரியாதை செலுத்துகிறோம். நம் மனத்தில் தோன்றும் இம் மரியாதை உணர்வும் ஒரு காரணத்தை உட்கொண்டே தோன்றுகிறது. அவனது வாழ்வில் பெற்ற தோல்வியின் சிகரமாகிய சாவிலே, அவன் பொலிவும், விளக்கமும் பெற்றுத் தோன்றுவது போல், அவன் வாழ்வில் எங்கும் பொலிவு பெறவில்லை என்ற எண்ணமே மேற்கூறிய உணர்விற்குக் காரணமாகிறது. இராவணனது வாழ்வின் பிற்பகுதி முழுவதிலும் அவன் பெற்ற தோல்விகளையே காண்கிறோம். எந்த நேரத்தில் சானகியை, அறந் துறந்து மனச் சிறையில் வைத்தானோ அந்த நேரத்தில் அவன் வாழ்வில் தோல்வி புகல் ஆயிற்று. அத் தோல்வியின் சிகரமாகிய அவனது சாவில் அவன் பொலிவும் விளக்கமும் பெற்றுவிட்டான் என்று ஆசிரியரே கூறுகிறார். "மும்மடங்கு பொலிந்தன அம் முறை துறந்தான் உயிர் துறந்த முகங்கள்' இவ் வரிகள் மேற் கூறிய கருத்தை வலியுறுத்தல் காண்க. நம்மையும் அறியாமல், அவன்மாட்டுக் கொண்ட மதிப்பும் பன் மடங்கு உயர்ந்து விடுகிறது அவனது ஆன்ம உயர்வு நமக்கு அப்பொழுது தான் புலப்படுகிறது. அவன் அடைந்த 'சாவு' இவ்வெண்ணங்களைப் போக்கடிக்காமல், அவை மிகுவதற்குத் துணை செய்கின்றன. அவன் சாவுக்குக் காரணமாயிருந்தது, கேவலம், குருட்டு விதி யன்று என்றும், கடவுள் தன்மை பெற்ற பொருளே என்றும் நாம் அறிகிறோம். கடவுள் தன்மை பெற்ற பொருளால் அழிந்தான்

என்று அறியினும், அவன் மாட்டுக் கொண்ட மதிப்பு நம் மனத்தினின்று நீங்குவ தில்லை. இப் பகுதியில் ஐயப் பட்டு இதனை மறுக்கிறவர்களும் உண்டு. பேராசிரியர் ஹேகலே இதனை மறுக்கிறார். குற்றம் காரணமாக விழ்ந்த அவலத் தலைவர் மாட்டு வியப்பும் மதிப்பும் நம் மனத்தில் தோன்றுதல் இயலாத காரியம் என்பதே அவருடைய எண்ணம்போலும். ஆனால் அவர் கருத்துப் படி நன்மையும் நன்மையும் முரண்பட்டு ஏற்படுகிற அவலத்திலும் குற்ற மில்லை என்று கூறுவதற் கில்லை. நற் பண்புகள் ஒன்றை ஒன்று விஞ்சி ஆட்சி செய்ய வேண்டும் என்று நினைப்பதால்தானே அங்கும் அவலம் பிறக்கிறது? அப்படி அவை நினைப்பதும் ஒரு தவறு தானே! எனவே பொதுவாகக் குற்றங் காரணமாக வீழ்ச்சி யடைந்தார்மாட்டு நாம் வியப்புக் கொள்வது தகாது என்று கூறி விட்டால் 'ஹேகல்' கருத்துப்படி ஏற்படும் அவலத்திற்கும் நாம் வியப்படைதல் இயலாத காரிய மாகும் எனவே அவர் கருத்து ஒப்பக் கூடியதா யில்லை. மேலும் தற் காலத்தார் இதனை ஒப்புவ தில்லை. 'ஹேகலின்' அவல தத்துவத்தை ஆராய்ந்த பேராசிரி யர் 'பிராட்லி' என்பாரும் ஹேகலின் கொள்கையை மறுக் கிறார். மேலும் இவ் வவல வீரர்களின் வாழ்க்கை யைக் காணும் நமது அனுபவமும் இக் கருத்திற்கு அரண் செய்கிறது. நிற்க, நமது தமிழ்க் காப்பியங் களிலும் இக் கருத்தே வலியுறுத்தப் படுதல் காண லாம். இராவணன் மாய்ந்தான் என்று கூற வரும் பொழுது, அவன் பெருமைகளை எல்லாம் ஒன்றொன்றாக எண்ணிப் பார்க்கிறான் கவிஞன். "மும் மடங்கு பொலிந் தன" என்று இறந்தவன் முகங்களைக் கூறுகிறான் என்றால் கவிஞன் மனத்தில் தோன்றிய மதிப்புக்கு வேறு என்ன சான்று வேண்டும்? மேலும் அவனது வாழ்வு

முடிந்த காரணம் விதியினு லன்று என்றும், விதிக் கெல்லாந் தலைவனுன வேத முதற் காரணனு லென்றும் இராவணன் நினைத்ததாக ஆசிரியன் கூறிவிட்டான். அங்ஙனம் அவன் கூறுகையிலேயே, நாமும், அம் முதற் காரணனேடு மிக நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளான் இராவணன் என்று நினைக்கிறேம். ஏனென்றல் ஏனையோர் போலச் சாதாரண முறையில் இராவணன் இறந்துபடவில்லை. அவ்வேத முதற்காரணன் மானுட வடிவந் தாங்கி, அரசைத் துறந்து, தம்பியொடும் கான் போந்து, மனைவியைப் பிரிந்து, வருந்தி நின்று, நீண்ட தொரு போரைச் செய்தே இராவணனுடைய உயிரை மாய்க்க வேண்டி இருந்த தென்றல் ஏனை யோரினும் இராவணன் வேறு பட்டவன் என்பதும், அம் முதற் காரணன் இவ்வளவும் இராவணனுக் காகச் செய்தான் என்பதால் இருவரும் மிகவும் தொடர் புடையவர்கள் என்பதும் நாம் அறிகிறேம் அம் முதற் காரணனுலே கொல்லப்படுந் தறுவாயில்தான் கொல்பவனும், கொல்லப் படுபவனும் ஒன்றுக ஆகி விடுகிறர்கள். அதனுலேயே அவலத் தலைவன் மாட்டு நாம் கொண்டுள்ள மதிப்பு உயருகிறது. வேத முதற் காரணன் நேரே தோன்றி அழிக்க வேண்டிய சிறப்புக் களை உடைமையால் தலைவன் சிறக்கிறன்; அம முதற் காரணனது விருப்பத்திற் கிணங்கியே உயிரைத் தருகிறன்.

இனி, அவலத்தில் தீமையின் செயலையுங் காண வேண்டும். பெரும்பாலும் அவலத் தலைவன் வீழ்ச்சிக் குக் காரணமா யிருப்பது அவன்பாற் காணப்படும் ஓரிரு தீமைகளே யாகும். முழுதும் தீமையே யுடை யாரும், நன்மையே உடையாரும் இவ் வுலகில் இல்லை. முழுதும் தீமையே வடிவானவன் என்று நாம் யாரை

யும் தள்ளிவிடுதற் கில்லை. அப்படிப்பட்டவர்கள் இருப்பினும் அவர்கள் காப்பியத்தில் இடம் பெறுதல் இயலாத காரியம். எனவே, தீமையும் நன்மையுங் கலந்தவர்களே தலைவர்க ளாகிறார்கள். அவற்றுள் எது மிகு கின்றதோ அக் குணம் அவர்கள் வீழ்ச் சிக்குக் காரண மாகிறது என்றுங் கண்டோம். இத் தீமைக்கும் அதன் மறுதலையாய நன்மைக்கும் முரண் ஏற்பட்டுப் போர் ஏற்படுகிறது. நன்மையே வடி வான கடவுளும், அல்லது இயற்கையும், அல்லது சக்தியும் இத் தீமையின் எல்லை தாளாது இதனை அழிக்க வருகின்றனர் என்று அறிகிறோம். அங்ஙனம் அவர்கள் தீமையோடு மாறுபட்டு அதனை அழிக்க வருகையில்தான், அவ் வழிக்கும் சக்தியை நன்மை யோடு தொடர் புடையதென எண்ணுகிறோம்.

அழிக்கும் சக்தி எது வாயினும், அது நன்மையும் உண்மையும் உடையதா யிருக்கும் என்பதில் ஐய மில்லை. தீமை என்றேனும் ஒரு நாள் அழிந்தே தீரும். நன்மைகளே இரு பிரிவாகப் பிரிந்து, ஒன்றை விட ஒன்று மேலே செல்ல நினைக்க அந்த நினைவின் விளைவாக அவலம் ஏற்படுதலும் உண்டு. அப்படிப் பட்ட நிலைமையில் நன்மை நன்மையை அழித்து விட்டது என்று கூறுதல் தவறு ஆகும். ஆனால் அழிந்த நன்மையிடத்தில் ஒரு தீமை இருந்த தல்லவா? அஃதாவது, ஏனைய பண்புகளும் நிலை பெற வேண்டும் இடத்தில் அவற்றை அழித்து விட்டுத் தானே ஆள வேண்டும் என்று நினைப்பதும் ஒரு தவறு தானே! அதன் காரணமாக அந் நினைவு மற்றொரு நன்மையால் அழிக் கப் படுகிறது. ஆனால் பெரும்பாலான அவலங்களில் தீமைக்கும் நன்மைக்குமே போர் மூளுகிறது. உதாரண மாகப் பல நற் பண்புக ளிருந்தும் "பிறர் மனை நயத்தல்"

என்னும் தீமை இராவணன்பால் குடி கொண்டது. இத் தீமையை அறிவுடைய அவனே போக்கிக் கொண்டிருக்கலாம். அன்றேல் பிறர் எடுத்துக் கூறிய பொழுதேனும் திருந்தி இருக்கலாம். கரன் முதலியோர் பட்டபொழுதும், முதற் போர் புரிந்த பின்னரும், கும்பகர்ணன் குலைந்த பொழுதும் இந்திர சித்தன் இறந்த பொழுதும்கூட அவன் தன் தவற்றை உணர விரும்ப வில்லை. வீடணன் சமயத்தில் எடுத்துக் காட்டிய பொருள் மிகச் சிறந்த தன்றே!

கோநகர் முழுவதும் நினது கொற்றமும்
சானகி எனும்பெயர் உலகின் தம்மனை
ஆனவள் கற்பினால் வெந்த(து) அல்ல(து)ஓர்
வானரம் சுட்டதென்(று) உணர்தல் மாட்சியோ?

—(மந். படலம். 75)

இவை யனைத்தையும் உணராது, தான் செய்வது தவறு என்று அறிந்திருந்தும் மேலும் விடாது தவற்றைச் செய்கின்ற தீமை தண்டிக்கப் படவேண்டியதொன் றன்றே? தீமை அழிக்கப் படும்பொழுது, உடனிருக்கும் நன்மையும் அழிவது வருந்தத் தக்கதே. இராவணன்பா லுள்ள வீரம், தவம் முதலியனவும் உடனழிந்தன. ஆனாலும் அவனது புகழ் நிலை பெறுதல் அவனது ஏனைய நற் பண்புகளின் பயனாகும்.

அவலத்தைப் பற்றிய கருத்து வேறுபாடுகள் பல. அவற்றுள், ஒன்று இந் நூலுக்கு இன்றியமையாத தாகலின் அதை இங்குக் காண்போம். இராவணன் தீமையே வடிவானவன் என்றும், அவன் பெற்ற முடிவு அவனுக்குப் பொருத்த மானதே என்றும், தீமையே வடிவான இராவணனை நன்மையே வடிவான இராமன் கொன்றானாதலின் இங்கு அவலமே இல்லை யென்றுங்

கூறுகிறவர்கள் உண்டு. இவர்கள் கூற்று உண்மையா வென ஆராய வேண்டும். அவர்கள் கருதுகிறபடி வைத்துக் கொண்டாலும் நன்மை அழிக்கப்படும் பொழுது அவலம் தோன்றுகிறது. இவ் விடத்தில் சிறிது சிந்தித்துப் பார்க்க வேண்டும். இராவணன் மாட்டே இரண்டும் காணப் படுகின்றன. அவன் கொண்ட ஆசை அழிக்கப் படுவது முறை. இராகவன் வாளி, 'சானகியை இராவணன் தன் மனச் சிறையில் கரந்த காதல் உள் இருக்கும் எனக் கருதி உடல் புகுந்து தடவியது' என்று கவி கூறு மாற்றான் ஆசை அறவே ஒழிக்கப் பட்டமை பெற்றாம். ஆனால் அழிந்தது அஃது ஒன்று மட்டுமா? அல்லவே! இது மட்டும் அழிக்கப் பட்டிருப் பின் அஃது அவலமு மாகாது. அதற் கொரு காப்பியமும் தோன்றாது. ஆனால் அதனுடன் உறைந்த எத்தனை நன்மைகள் அழிந்தன! அந் நன்மைகளின் அழிவுக்கே நாம் வருந்துகிறோம். வியப்போடு கலந்த அச்சமுங் கொள்கிறோம். கவிஞனும் அதனையே வலியுறுத்து கிறான். "மூன்று கோடி வாணாளும், முயன்று பெற்ற பெரிய தவமும்," முதல்வனால் முன்னாளில் எக்கோடி யாராலும் வெல்லப் படாய் என்று கொடுக்கப்பட்ட வர மும், உலகனைத்தையும் செருக்கடந்த புயவலியும்" எளிமையாக யாரும் பெறுதற் குரிய பண்புகள் அல்லவே! நற் பண்புகள் என்பவை இவற்றினும் வேறு எவை உண்டு? இவை யெல்லா மன்றோ அழிந்தன! இந் நற்பண்புகளின் அழிவிற்கு நாம் வருந்துகையிலேயே அவலம் பிறக்கிறது.

இக் கருத்தோடு மாறுபடுஞ் சிலர் நாம் இராவணன் அழிவிற்கு வருந்த வில்லை யென்று கூறித், தீயவனாகிய இராவணனை அழிக்க நன்மையே வடிவான இராமன் அடையுந் துன்பமே நமது சோகத்திற்குக் காரணமென்

பர். தசரதனை இழந்தது முதல் இராமன் அடையுந் துன்பங்கட்கு நாம் வருந்துகிறோம். ஆனால் நன்மையே வடிவானவனாகக் கருதப்படும் இராமன் துயரிலும், தசரதன் அழிவிலும், பரதன் தவத்திலும், இலக்குவன் உறக்கம் இழந்த தன்மையிலும், சீதை வனம் புகுந்த செயலிலும் அவலம் பிறக்கிறது என்பது பொருந்தாக் கூற்றே. நன்மையின் அழிவில் அவலம் என்ப துண்மை. ஆனால் எந் நன்மையின் அழிவு குறிக்கப் படுகிறது? இராவணனுடைய நற் பண்புகளின் அழிவிலேதான் அவலம் பிறக்கிறது. கவிதைகளைப் படிப்பார்க்கு இக் கருத்து விளங்காமற் போகாது. நன்மைக்கும் தீமைக்கும் இடையே நடைபெறும் போராட்டத்தை அவலத்துள் 'ஹேகல்' சேர்க்காததே இவர்கள் கூற்றுக்கு ஆதாரம் போலும் ஹேகலின் கருத்தையே ஒரு சிறிது ஆராய்வோம் :

நன்மைக்கும் நன்மைக்கும் நடைபெறுகிற போராட்டத்தில் மட்டுமே சிறந்த குறிக்கோள் இருக்க முடியும் என்பதும், சமூக நன்மை கருதித் தனி மனிதன் அழிக்கப்பட்டால் அங்கே அவலம் தோன்றும் என்பதும் இவர்கள் முடிபாகும். ஆனால் இந் நிலையிலும் இதற்கு மறுதலையாய நன்மை தீமைப் போராட்டத்திலும் காணப்படும் உண்மைப் பொருள் ஒன்றே. முரண் ஏற்பட்ட பிறகு இரண்டு பக்கங்களிலும் அழிவு நடைபெறுகிறது. சக்தி, வன்மை, நன்மை என்றவற்றோடு ஆன்ம சக்தியும் அழிவுறுகிறது. தீமை என்று நம்மால் கூறப்படும் பகுப்பிலும் சக்தி, வன்மை, ஆன்ம பலம் என்பவை இருத்தல் கண்கூடு. இவை முறை தவறிப் பயன்படும் பொழுது தீமை என்ற பொதுப் பெயரை அடைகின்றன. ஆன்மபல அழிவுதான், சுருங்கக் கூறுமிடத்து, அவலமாகப் பரிணமிக்கிறது. ஆன்ம

பல அழிவின்பொழுது ஏற்படுந் துன்பத்தைக் கண்டு தான் நாம் உளம் வருந்துகிறோமே தவிரச் சாதாரண துன்பத்தைக் கண்டு உளம் வருந்துவதில்லை. மனத்தில் மட்டுமே வருந்துகிறோம். உளத்திற்கும் மனத்திற்கும் வேற்றுமை உண்டென்பதை மறக்கலாகாது. ஆன்ம பல அழிவின் பொருட்டு மட்டும் ஏன் வருந்துகிறோம்? காரணம், நாம் ஆன்மாவின் மேல் வைத்திருக்கும் மதிப்பே ஆகும். எனவே நாம் எப் பொருளின்மேல் மதிப்பு (value) வைத் திருக்கிறோமோ அப் பொருளின் அழிவுக்கே உளம் வருந்துகிறோம். வருத்தத்தின் காரணம் நாம் கொண்டுள்ள மதிப்பே தவிரப் பொருளின் இயல் பன்று. ஓரே பொருளின் அழிவு பலருக்குப் பலவிதமான அளவில் வருத்தத்தை உண்டாக்குகிற தென்பது யாவரும் அறிந்த உண்மை ஒரு மனிதன் இறந்தான் என்றால் அதனைக் காணும் அனைவரும் ஒரே அளவு வருத்தத்தை அடைய முடியாது. அவனோடு நெருங்கிய தொடர்புடையார் மிகுதியும் வருந்துவர். ஏனையோர் அவரவர்கள் இறந்தவனோடு கொண்டுள்ள தொடர்பிற் கேற்ப வருந்துவர். காரணம் என்ன? நெருங்கிய தொடர்புடையரான அவன் குடும்பத்தார் அவன் மாட்டுக் கொண்டுள்ள மதிப்பே அவர்களுடைய வருத்தத்திற்குக் காரண மாயிற்று. பொருள் ஒன்றே யாயினும் காண்பாரின் தொடர்பை நோக்கி அதன் மதிப்பு உயர்ந்தும் தாழ்ந்தும் காணப்படுகிறது. இந் நிலையில் ஒவ்வொரு ஆன்மாவையும் நாம் மதிக்கிறோம். அவற்றிலும் பண்பாடு பொருந்திய ஆன்மாவை மிகுதியும் மதிக்கிறோம். தான் தான் பெற்ற பண்பாட்டிற் கேற்பவே ஒருவனை மகாத்மா வென்றும், மற்றொருவனை ஆன்மா வென்றும், வேறொருவனைத் துராத்மா என்றும் கூறுகிறோம். இத் தன்மை கொண்டு இராவணனைக் காண

போம். அவன் எத் தகையவன் என்பதை நூலில் பரக்கக் காணலாம். அவனுடைய பகைவர்களே அவனுடைய வீரத்தை வியக்கின்றனர். இந்திரப் பெரும் பதத்தை ஆட்சி செய்தது தாழ்ந்த மனோநிலை கொண்டமையால் அன்று. எனவே இத் தகைய ஒருவன், தன்னம்பிக்கையே வடிவான ஒருவன், "என்னையே நோக்கி நான் இந் நெடும்பகை தேடிக் கொண்டேன்' என்று கூறும் ஒருவன், 'நாசம் வந் துற்ற காலை நல்ல தோர் பகையைப் பெற்றேன்' என்று கூறும் ஒருவன், தன்னோடு பொருகின்றவனை நோக்கி "இவனோ தானவ் வேத முதற் காரணன்" என்று நினைத்த பின்னரும் யா ரேனும் தானுகுக யானென் தனி யாண்மை பேரே நின்றே வென்றி முடிப்பென புகழ் பெற்றேன்" என்று கூறிப் போர் செய்து உயிர் துறந்த ஒருவன் சாதாரண மானவனா? இராவணனைப் பற்றிக் காணும் பொழுது நமது உளம் வருந்த வில்லையா? நன்மை என்பதும் தீமை என்பதும் ஒப்பு நோக்கிக் காணும் சொற்களே தவிர முழுப் பொருள் தருஞ் சொற்க ளல்ல. மேலே கூறிய இயல்புகள் இராவணனிடம் காணப்பட்ட ஆன்ம பலமும் நற்பண்புகளும் அல்லவா? இவை நற்பண்புகள் அல்லவெனின் இவை போன்ற பண்புகளையே உடைய இராமனை மட்டுஞ் சிறந்தவன் என்று கூறுதல் எங்ஙனம்? இப் பண்புகளாலேயே நாம் கூறும் சாதா ரணத் தீயவன் என்ற சொல்லால் அவனைக் குறித்த லாகாது என்று அறிகிறோம். அவ்வாறு கூறின் அஃது அவலமாக ஆகாது; இழி வாகவே முடியும் என்பதும் நினைவி விருத்த வேண்டுவ தொன்று.

இன்னும் ஓர் ஐயம் தோன்றியே தீரும். இராவண னிடத்து நன்மை என்பது இருந்திருக்கு மானால், அதிலும் நாம் கூறுகிற அளவு இருந்திருக்குமே யானால்

அஃது அவனது ஒரு தீமையைப் போக்கி இராதா? அவனது கல்வியும், தவமும், அனுபவமும், வீரமும், ஆண்மையும் இவ்வொரு தவற்றைப் போக்க வில்லையெனில் அவற்றின் வன்மைதான் என்ன? எண்ணிக்கையில் பலவாக விருப்பினும் அவை வலிமையிற் குறைந்தவை போலும்! இவ் வெண்ணங்களும் வினாக்களும் நியாய மானவையே. ஆனால் மனித மனத்தின் கூறுபாடுகளை ஆராய்வார்க்கு இதில் வியப்போ ஐயமோ தோன்றுவதில்லை. இப் பண்புகள் நிரம்பி இருக்கிற காரணத்தால் வேறு இயல்புகள் இருத்தல் கூடாது என்ற கட்டுப்பாடு மனிதனிடம் செல்லாது. இவை இரண்டும் தனித் தனி மனத்தில் தங்கிச் சம வலிமையோடு நிலை பெற்றிருக்கலாம். ஆனாலும் வியக்கத் தக்க ஒரு நிகழ்ச்சி நடைபெறுகிறது. இவ் விரண்டு பண்புகளுள் ஒன்று தலை தூக்கி நிற்கும் பொழுது அதன் மறுதலை யான வொன்று அதனை எதிர்த்துப் போராடாமல் அதற்குத் துணையாகவே நின்று விடுகிறது. தீமைக் குணம் மிகுத்த காலை அறிவும் அதற்குத் துணை செய்கிறது.

இராவணன் சீதையின் வருணனையைச் சூர்பனகை பாற் கேட்ட வுடனேயே அவளை இதயமாம் சிறையில் வைத்தான் என்று கூறப்படுகிறான். இந் நிலையில் அவனிடம் உள்ள நற் பண்புகள் அனைத்தும் புதிதாக அவனிடம் குடிப் புகுந்த இத் தீய பண்பு வளருவதற்கு உதவி செய்கின்றன. இவ் வெண்ணத்தைத் தூண்டி அவளை எவ்வாற்றானும் அடைய வேண்டும் என்ற எண்ணத்தை அவன்பால் வளர்த்தவை அவனுடைய ஏனைய நற் பண்புகளேயாகும். அவனுடைய கல்வி யறிவு அவளைக் கற்பனை செய்யச் செய்தது. கர தூடணர்கள் அழிந்தனரென் றறிந்தும் இராமன் வலியை மதியாது, மானிடன் என்று நினைக்கச் செய்தது அவனுடைய தவ வலியும்

ஆண்மையு மாகும். எனவே இப் பண்புகள் தாங்கள் செய்யவேண்டிய நற் செயல்களை விட்டு அவனுடைய தீய வெண்ணத்திற்கே துணை நின்றன. அங்ஙனம் துணை நின்றமையால் அவற்றையுந் தீயவை என்று தள்ளிவிடுதல் அறிவுடைமை யாகாது. நாம் அவனை மதிக்குமாறு செய்பவை அப் பண்புகளே யாகும்.

இவ் வொரு தீய பண்பைத் தவிர ஏனைய நற் பண்புகளில் இராவணன் இராமனுக்குச் சிறிதும் குறைந்தவனல்லன். நற் பண்புகளே நிறைந்த இராமனும் தவறே செய் தறியாதவன் என்று கூறுவதற்கில்லை. மனைவியின் சொற் பொருட்டு மாய மான்பின் போதல் தகாது என்று கூறிய இளையோன் சொல்லைத் தட்டிச் சென்ற குற்றத்திலிருந்து, வாலியை மறைந்து நின்று கொன்ற குற்றம் வரை எத்தனையோ அவன்பாலும் ஏற்றிக்காணலாம். ஆனால் அவற்றிற்காக அவனைத் தவறு கூறுவாரில்லை.

"அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும் பெண்ஏவல் செய்வார்கண் இல்"—(குறள் 909) என்ற குறளை மறந்தமையான இராமன் பட்ட இடுக்கண் கொஞ்ச மன்று. ஆனாலும் இத் தவறுகள் பெருந் தவறுகள் அல்ல. அத் தவறுகளால் இராமனும் துன்பமடைகிறான். இராமன் தவற்றைக் காட்டிலும் இராவணன் தவறு பன் மடங்கு பெரியது. எனவே அவனுடைய உயிரைக் கொடுத்தே தவறுகட்குக் கழுவாய் தேடவேண்டி இருந்தது. பின்னர் இக் கருத்து விரித்துரைக்கப்படும்.

இதுகாறுங் கூறிய வற்றான் இராவணன் தீமையே வடிவானவன் என்று நினைப்பது தவறு என்று புலப்படும். தீமை சிறிதும் நன்மை பெரிதுங் கலந்திருந்தமையாலும், அவன் தீமை வீழ்ச்சி யடையும் பொழுது உட

னிருந்த நன்மைகளும் அழிந்தமையாலும், அவன் வீழ்ச்சி அவலமாகக் கருதப்படுகிற தென்பதும் நன்கு விளங்கும்.

மேலும், அவலத்தின் முடிபு பற்றி ஒரு வார்த்தை கூறவேண்டும். பெரும்பாலும் அவலத்தின் முடிபு அமைதியைத் தர வேண்டும. அவலத் தலைவன் வீழ்ச்சியில் நாமும் வருந்துகிறோம். அவனுடைய முடிபு இரு பகுதிகளை யுடையது. ஒன்றில் உண்மை இன்மையை உண்மை அழிக்கிறது. என்றைக்கும் உண்மை ஒப்பற்றதும் சிறந்ததுமாகலின் அது வென்றே தீரும். ஆனால் இவ் வெற்றியின் பின்னர், ஓர் ஆறுதல் இருக்க வேண்டும். அஃதின்றேல் அவலம் நம் மனத்தில் தவறான எண்ணங்களை உண்டாக்கும். வெறுங் காழ்ப்பே மிஞ்சும். எனவே இறந்த தலைவன் தண்டித்த தலைவனுடன் ஒன்று படும் பகுதியை அவலம் எடுத்துக் கூறுகிறது. எந்த ஒரு சக்தியால் இராவணன் துன்ப முற்றானோ அந்தச் சக்தியே இராமனையும் துன்ப மடையச் செய்கிறது. இருவருந் துன்ப மடைகின்றனர் என்றால் இருவருந் தவறு செய்துதானே இருக்க வேண்டும்? எனவே, முடிவில் இராமன் படுந் துன்பம் துன்ப அளவில் நின்றுவிட, இராவணன் துன்பம் அவன் சாவில் முடிகிறது. முடியினும், அவனுடைய சாவில் நமது கவலையும் செத்து விடுகிறது. தலைவன் சாவில் ஒருவாறு பெருமையுங் கொள்கிறோம். ஏன்? அவனுக்கும் அவனைப் பற்றிக் கொண்ட சாவிற்கும் தொடர்பு ஒன்று மில்லை. அவன் சாக வியலாது. அவன் செய்த தவறே இறந்து விட்டது. அவனுடைய ஏனைய பண்புகளும் அவனும் உயர்ந்ததும் சிறந்ததும் ஆன ஒரு பொருளில் இரண் டறக் கலந்து விட்டனர். அவலத்தின் முடி வாகக் கருதப்படுவது இதுவே யாகும். அவலத் தலைவன் ஏனையோர் போல மாண் டிருப்பின் அவன் அவலத் தலைவனாக மாட்டான். அவனை அழித்த பரம் பொருளோடு அவன் மிகுதியும்

தொடர் புடையவன். அத் தொடர்பு காரணமாகவே பரம்பொருள் நேரே அவனை அழிப்பதற்காக வந்தான். அவலத் தலைவனிடம் இருந்த தீமை நீக்கப்பட்டதும் அவன் உயர்ந்த அப் பொருளி னிடத்தில் ஐக்கிய மாகி விடுகிறான்.

இக் கருத்துக்கள் 'ஹேகல்' போன்ற பெரியார் களின் அவல தத்துவத்தோடு பெரிதும் மாறுபடினும் கம்பநாடன் கருத்து இதுவேயாம். ஒரு சிலர் கருதுகிற படி கம்பன் இராவணனை மீளாத் தவறு செய்த முழுப் பாவி என்று கருத வில்லை. அங்ஙனம் கருதி யிருப் பின் அவன் மாட்டு நாம் மதிப்பு வைக்கும்படி பாடி இருக்கவும் மாட்டான். ஏன்? கம்பனுடைய பாடல்களை நடுவு நிலை பிறழாது நோக்கு வார்க்குக் கம்பனே இராவணன் மாட்டு மதிப்புக் கொண்டிருந்தான் என்பதும் விளங்கும். இராவணனுடைய ஆட்சியின் மாட்சியைப் படலம் படலமாகக் கம்ப நாடன் பாடிய தன் கருத் தென்னை? வீடணன் முதலியோர் கூற்றாக அவனையும் அவனுடைய தவ வலிமையையும் புகழ்வது எற்றுக்கு? வான்மீகியோடு பல் விடங்களிலும் மாறு பட்டது எற்றுக்கு? சீதையைப் பன்னசாலையோடு பெயர்த்து எடுத்துச் சென்றான் என்பதும், தனது உயிரினும் இனிய அசோக வனத்தை அழித்த குரங்கைக் கொல்க என்று கட்டளை யிட்ட பின்னர், வீடணன் தூதுவரைக் கொல்லற்க என்று கூறினனாக, உடனே அச் செயல் தவிர்ந்ததும் எத்தகைய பண்பைக் காட்டு கின்றன? இராவணனைத் தீயவன் என்று காட்ட வேண்டும் என்று கம்பன் கருதி இருப்பானேயாகில், இவற்றைப் பாடி இருக்க வேண்டாமே. அசோக வனத் தில் சிறை இருந்த சீதை பொறுக்க வியலாத முறை யில் தூற்றியும் கோபமே உருவமான இராவணன்

வாளா விருந்து விட்டான் என்று பாடுவது எற்றுக்கு? மைந்தனை இழந்து ஆறாத் துயர்க் கடலில் மூழ்கிச் செய்வ தின்ன தென்று தெரியாத நிலையில் சீதையைக் கொல்லத் துணிந்தானாக, மகோதரன் உலகெலாம் உளதனையும் பெரும்பழி பிடித்தி போலாம், செய்யற்க என்று கூறவே, தனது செயலி னின்றும் தவிர்ந்து விட்டான். இங்ஙனம் எத்தனையோ நற் பண்புகள் கூறப் படுகின்றன.

கம்ப நாடன் வான்மீகக் கதையை மட்டும் எடுத்துக் கொண்டானே தவிர அதன் போக்கைத் தன் மனம் விரும்பியபடி மாற்றி யமைத்து விட்டான் என்பது யாவரும் அறிந்த தொன்று. அவ்வாறு அவன் மாறுதல் செய்வதற் குரிய காரணங்களும் உண்டு. கதைப் போக்குப் பல விடங்களில் தமிழ் நாட்டார் மனப் பான்மைக்கு ஏற்றதாக வில்லை. எனவே வேண்டுமான விடங்களி லெல்லாம் மாறுதல்கள் செய்து விட்டான். அங்ஙனம் செய்த அவன் நாம் நினைப்பது போல, இராவணனை முழுத் தீயவன் என்று காட்ட விரும்பி இருந்தால் நன்றாகக் காட்டி இருக்கலாம்? அங்ஙனம் அவன் செய்யவில்லை அம் மாட்டோ? பல விடங்களிலும அவனது பெருமை விரித்துக் கூறப்படுகிறது. இராமனுடைய பெருமையும், ஆற்றலும், புகழப் படுவது போலவே இராவணனுடைய புகழும் பெருமையுங் கூறப்படுகின்றன. இராவணன் வீழ்ச்சிக்கு மிகுதியாகத் துயர மடைகிறவன் கம்ப நாடனே யாகும்; இவ்வளவு ஆற்றலும் தவறான வழியிற் சென்று அழிகிறதே என்று வருந்துகிறான். பிறர் மனை நயக்கின்ற பேதைமையைத் தமிழர் பெரிதும் வெறுத்தனர். அத் தவற்றைச் செய்த இராவணனைக் கம்பன் மிகுதியும் வெறுக்கிறான். அங்ஙனம் வெறுப்பதால் இராவணன்

மாட்டுள்ள மற்ற சிறந்த பண்பாடுகளையும் வெறுக்கிறான் என்பது கருத் தன்று. இத் தவற்றுக்காக எவ்வளவு வெறுக்கிறானோ அவ்வளவு பிற பண்புகட் காக நேசிக்கிறான். இதனால் இரண்டையும் கூறிக்கொண்டே செல்கிறான். இராவணன் கொண்ட காமம தவறான தாயினும், ஓர் அவலத் தலைவனுக்கு உள்ள முறையில், அக் காமம் மிக ஆழமாக உள்ளது என்பதையும், இராவண னுடைய ஏனைய நற் பண்புகளும் இத் தவற் றைப் பெரி தாக்கவே உதவுகின்றன என்பதும் விரித்துக் கூறுகிறான். மயிலிளஞ் சாய லாளை வஞ்சியா முன்னமே இராமாஞ் சிறையில் வைத்தான என்பதனால், இராவணன் வாழ்க்கையில இடைப் பிற வரலாக இத் தவறு நிகழ வில்லை என்றும் வேண்டுமென்றே, தவறு என்று அறிந்திருந்தும் செய்தது என்றும் கூறுகிறான்.

இதுகாறுங் கூறியவற்றான் ஓர் உண்மை புலப் பட்டே தீரும். அஃதாவது இராவணனைக் கம்பன் இழித் துப் பேசவில்லை என்பதாம். மேலும் மற்றொரு கருத் தும காண்டற் குரியது. இராமாயணத்தைப் படிக்கும் பொழுதும், அதனைப் பற்றி எழுதும் பொழுதும் ஒரே கருத்தோடே செய்கிறோம். இராமனும் இராவணனும் உண்மையாக வாழ்ந்தார்களா? இந் நூலில் கூறப் பட்டவை அனைத்தும் உண்மையா? இவ் வினாக்கள் நம் மனத்தில் தோன்ற வேண்டிய இன்றியமையா மையே இல்லை. அந் நூலை இக் கருத்தோடும் படிக்க லாம். ஆனால் அதில் கம்பன் காட்டிய இராம இரா வணர்களைக் காண முடியாது. நாம் விரும்பும் இராம இராவணர்களையே காண்டல் கூடும். மேலே கூறிய கருத்து மனத்தில் தோன்றிய வுடனேயே விருப்பு வெறுப்புக்கள் மனத்தில் முளைத்து விடுகின்றன. அவற்றிற்கு ஆளாகிவிட்ட நாம், நாம் விரும்பும் கருத்

துக்கஃா நூலில் ஏற்றிக் காண்போமே தவிர அவன் கூறுவனவற்றை அறிய முடியாதவர்க ளாகிவிடு வோம். எனவே இக் கருத்தை நீக்கி அதனை ஒரு காவியமாக நினைப்போமாக! காவியப் பண்புகள் நிறைந்த ஒரு நூலாகும் கம்ப ராமாயணம். அதில் காணப்படும் இராமன் முதல் இராவணன் வரை அனைவரும் கம்பன் பெற்ற பிள்ளைகளே யாவர். அவனுகப் பெற்ற பிள்ளைகட்கு அவனே குணங்கள் கற்பிக்கிறுன். அவனுக ஒருவனை அதிகம் விரும்பிப் புகழ்ந்து மற்றையோரை வெறுத்து இகழ்கிறுன் என்று கூறுவோமே யாயின் தவ றிழைத்தவர்க ளாக ஆவோம். காவியத்தைக் கற்பதால் விளையும் இன்பமும் நமக்கு இல்லாமற் போய்விடும். எனவே விருப்பு வெறுப்பு நீக்கி, நூலில் காணப்படும் அனைவரையும் படைத்து, காத்து, அழிக் கின்றவன் கவிஞனே என்பதைத் திண்ணமாக மனத்துட் கொண்டு கவிதைகளை அனுபவிக்க வேண்டும். அப்பொழுது தான் நாம் இன்ப மடைய முடியும். மேலும், கவிஞன் கருத்து எது என்பதையும் அறியமுடியும்.

இம் முறையில் நோக்கின, கம்பன் இராவணனை ஓர் அவலத் தலைவனுகவே கருதித் தனது காப்பியத்தை இயற்றினுன் என்பது விளங்கும். அம் முறையிலேயே இந் நூலும் எழுதப்படுகிறது.

# நூல் வழி

இராவணன் போன்றதோர் சிறந்த தலைவனே அவலத் தலைவனாக இருக்க இயலும். இத் தலைவனைப் பற்றிப் பல வகையிலும் நாம் அறியவேண்டுவது இன்றியமையாததாகின்றது. சில வழி துறைகள் வகுத்துக் கொள்வதன் மூலம் அவனை நாம் முற்றிலுங் காணக் கூடும். இராவணனைப் பற்றி ஏனைய பாத்திரங்களின் கருத்துக்கள் எவை எவை என்பதை முதலில் அறியவேண்டும். அவனைப் பற்றி அவன் தம்பி கும்பகருணன், மைந்தன், மனைவி, இவர்களுடைய கருத்துக்கள் முதலிற் காண்டற்குரியன.

இவை அவன் உறவு கொண்டார் கூற்றுக்கள்.

இனி அடுத்துக் காண வேண்டுவன அவன் பகைவர்களாகிய வீடணன், இராம இலக்குவர், சடாயு, சுக்ரீவன், அனுமன், சீதை ஆகியோர் கருத்துக்கள். இவை எல்லாவற்றையும்விட அவனே தன்னைப் பற்றிச் சொல்லிக் கொள்ளும் கூற்றுக்கள். இவை எல்லாம் ஒருபுற மிருக்க, இவ் வனைவரையும் படைத்துப் பேசுமாறு செய்த கலைஞன் கூற்று. இம் முறையில் ஆராய்ந்து இராவணனை முழு வடிவம் பெற்ற ஒருவனாகக் காணவேண்டும். இத் தன்மை பெற்ற அவன் வீழ்ச்சிக்குரிய காரணத்தைப் பின்னர் ஆய வேண்டும். இம் முறையை அடிப்படையாகக் கொண்டே இராவணனைக் காண்போமாக.

# இலங்கை மாட்சி!

இராவணன் ஆட்சி செய்த நாடே அவன் பெருமைக்கும் சிறப்புக்கும் ஓர் எடுத்துக் காட்டாக விளங்கியது. நாடு இத் தகைய சிறந்த நிலையி லிருந்தது என்று கூறினுலே அதனை ஆட்சி செய்த மன்னவன் நிலையும் விளங்கும் எனக் கருதிய கம்பநாடர் 'ஊர்தேடுபடலம்' என்ற தொரு படலத்தை ஆக்குகிறுர். அதன்கண் இலங்கையின் சிறப்பு ஒருவாருக விரிக்கப்படுகிறது. இன்று நாம் காணும் இலங்கையே மிக்க வளமுடையது. அன்று ஒரு சிறந்த மன்னனுல் ஆட்சி செய்யப்பட்ட காலத்து அஃது இன்னுஞ் சிறந்திருந் திருக்கும் என்பதில் ஐய மில்லை.

பன்னெடுங் காவதம் அகன்றும் விரிந்தும் உள்ளது அப் பழம் பெரு நாடு. நாட்டின் இடையே திகழ்வது நகரம். நகரில் உயி ரினங்கள் யாவையும் வாழ்வதால் உலகை வாழ்விக்கும் திருமாலே போன்றது என்று ஆசிரியர் உவமை கூறுகிறுர். நகரில் அமைந் துள்ள வீடுகள் செல்வச் செருக்கை வெளிக்காட்டி நிற்கின்றன. உலக முழுவதையும் வென் றடிப்படுத்து நிற்கும் வெற்றி வீரன் ஒருவனுடைய நகரம் செல்வத்தில் செழித் திருந்தது என்பதில் வியப் பொன்று மில்லை யன்ருே! வீடுகள் பொன்னினுல் கட்டப் பெற்று மணிகள் அழுத்தப்பெற் றுள்ளன. அவை வீசும் ஒளி மின்னலையும், கதிரவனையும் தோற்கச் செய்கின்றது. இவை உயர்வு நவிற்சி யணியின் பாற்படினும் உண்மை யில்லாமற் போக வில்லை. இத் தகைய அரு நகரைச் சமைத்த தேவதச்சனைப் புகழுதல் ஒல்லுமோ என்று

கூறு முகத்தான், ஆசிரியர் 'கலைஞனது படைப்பினை யாவரே முடியக் காண்பார்' என்ற உயர்ந்த தத்துவத்தை விளக்குகிறார். இத் தருணத்தில் இராவணனே ஒரு கலைஞன் என்பதை அறிய வேண்டும். ஒரு நகரின் பெருமையை, பொருட் செல்வர் வாழும் இடத்தைமட்டும் கண்டுவிட்டுப் புகழுதல் சிறப்புடைமை யாகாது. இலண்டன் மா நகரப் பெருமையைக் கிழக்கு இலண்டனைப் பார்த்த பிறகு, யாரும் விவரிக்க முன் வரார். உலகத்தில் பல் விடங்களிலும் உள்ள வறுமைக்குச் சிறிதும் இளைக்காத வறுமை தாண்டவ மாடும் இடம் கிழக்கு இலண்டனாகும். ஆகவே உண்மையை உணர வேண்டுமே யாயின் இத் தகைய பகுதிகளையே காணல் வேண்டும். அஃதே போலக் கம்பநாடர் இலங்கையில் மக்கள் வாழும் பகுதிகளை வருணித்துவிட்டுக் குதிரைகளும், யானைகளும் கட்டப்படும் கொட்டிலைக் கூறுகிறார். மிருகங்கள் கட்டப்படும் இடம் மிகச் சிறப் புடையதாக இருப்பதற் கில்லை. ஆகவே அவற்றின் சிறப்பைக் கூறின் மற்றவற்றைப் பற்றிக் கூற வேண்டாம் என்று நினைத்து போலும் அதனைக் கூறுகிறார். மரகதம் முதலியனவற்றால் செய்யப் பெற்ற தேர்கள் நிறுத்தப்படும் கொட்டிற் சாலைகள் சூரியனும் வெள்கும்படி ஒளி விடுகின்றன வாதலால் இவற்றையுடைய இலங்கையோடு ஒப்பு நோக்கினால், சொர்க்க உலகமும் நரகமென்றே மதிக்கப்படும்.

"இரவி வெள்க நின்(று) இமைக்கிற இயற்கைய என்றால்
நரகம் ஒக்குமால் அந்நெடுந் துறக்கம் இந்நகர்க்கு"

—(ஊர். படலம், 14)

இவ் வரிய நகரைச் சுற்றி மதில்கள் காணப்படுகின்றன. தேவருலகையே சென்று முட்டுவன வாக உள்

ளன அவைகள். பொன்னாலே சமைக்கப் பட்ட அம் மதில்கள் "ஊழி திரி நாளும் உலையா" என்று கூறப்படு கின்றன. நாட்டுக் காவற்கு மதில் எவ்வளவு இன்றி யமையாத தென்பது கூற வேண்டுவ தின்று. "உயர்வு, அகலம், திண்மை, அருமை இந் நான்கின்; அமைவு அரண் என்றுரைக்கும் நூல்" என்ற குறட் கருத்தை மனத் துட் கொண்ட ஆசிரியர் கீழ்வருமாறு கூறுகிறார். "கதி ரவன், இராவணன் ஆணைக்கு அஞ்சி இலங்கை மீது செல்வ தில்லை என்று பிறர் கூறுவது தவறு. இவ் வுயர்ந்த மதிலைத் தாண்டிச் செல்ல இயலாததா லன்றோ அவன் இலங்கை மேற் செல்வ தில்லை" இங்ஙனம் கூறி அனுமன் வியந்ததாக வுள்ளது பாடல். மதிலின் சிறப்பைச் சிறந்த வீரனும், காற்றின் மகனும், கருங் கடலைத் தாவிச் செல்ல வல்லவனுமாகிய அனுமனே புகழ்ந்தான் எனில் அதன் சிறப்புப் பன் மடங்குயர்தல் காண்க.

இப் பெரு மதிலிடத்துக் காணப்படுகிறது வாயில். ஓயாது பகைவர்க்கஞ்சும் நாடோ சிறு வாயிலை யுடையதா யிருக்கும். இராவணனது வாயில் 'மேரு மலையை நிறுத்தி அதன் நடுவே ஒரு வெளி செய்தது போலவும், தேவர்கள் ஒரு சேர வந்து புகுதற் கமைத்த பெரு வெளிபோலவும், கடல் நீர் வந்து புகுதற்குச் செய்த பிலம் போலவும்' அகன்றும், விரிந்தும், காணப்படு கிறது. அவ் வகன்ற வாயிலிடத்துக் காவல் புரிகின்றார் வீரர். ஆயிரக் கணக்கான அவரை, "கள்ள வினை வெவ்வலி யரக்கர் இரு கையும் முள் எயிறும் வாளும் உற முன்ன முறை நின்றார்" என்று கூறு முகத்தான் அக் காவலினது சிறப்பைக் கூறுகிறார். துப்பாக்கியைத் தோள்மே லிட் டுத் தூங்கும் இற்றை நாளில் காவலர் அத் துப்பாக்கி இல்வழி வீர ராகார். ஆனால் அவ் வரக்கர் ஆயுத

மில் வழியும், வலியும் இரு கையும், பல்லும் ஆயுதங்க ளாகப் பயன்படுந் தன்மை யுடையார் என்று கூறுகிருர்.

இவ் வரும் பெரு மதிலை யடுத்து வளைந்து கிடப்பது அகழி. அதனுடைய ஆழத்தையும், அகலத்தையும் அளவிட்டுக் கூறுதலைக் காட்டிலும், உலகினை வளைத் துள்ள எழு கடல்களும் இராவணன் ஆணைக் கஞ்சி, அவனை நேரே காண வன்மை யற்று, அவனது மதிலைச் சுற்றி உலாவி வருவனவே போன்றுள என்று கூறி விடலாம்.

இராகவன் பெருமையை நன் கறிந்த அனுமனே, இலங்கையின் பாதுகாவலைக் கண்ட பிறகு, கீழ்வருமாறு கூறுகிருன். "சேவகனும், யாமும், வெவ்வமர் தொடங் கிடின் என் ஆய் விளையும். மேலும் கடலைக் கடப்பது அரி தன்று. அங்ஙனம் கடந்த பின்னர் இக் காவலைக் கடத்தல் அரி தாகவே முடியும். போரும் மூண்டு விட்ட தாயின் "நெருங்(கு) அமர் கிடக்கும் நெடுநாள்" என்று நினைப்பானே யாகில் அந் நகரின் காவல் மிகுதி யைப்பற்றிக் கூறவேண்டுவது என்னுளது?

இத் தகைய சிறப்பு வாய்ந்த நகரில் வாழ்ந்த மக்கள் எத் தகையர் என்று காணல் வேண்டும், மக்களைப் பொறுத்தே ஒரு நாட்டின் பெருமையும், சிறுமையும ஏற்படுகின்றன என்பது தமிழருடைய கொள்கை யாகும். இது கருதியே ஔவையார் நாட்டை நோக்கிக் கூறுகை யில் "நீ நாடாக இருப்பினும், காடாக இருப்பினும், பள்ளமாக இருப்பினும் மேடாக இருப்பினும், அவற் ருல் பெருமை சிறுமை அடைவ தில்லை. யாண்டு நல் லார் உளரோ ஆண்டே நீயும் நல்லை" என்று கூறிப் போந்தார். இலங்கை மா நகரம் இவ்வளவு சிறப்புடைய தாக விருந்தும், அங்கு வாழும் மாந்தர் செம்மை யற்ற

வராக விருப்பின் அது சிறப்பாகாது. முன்னர், நாட்டின் வளத்தை நோக்கி, "நரகம் ஒக்குமால் நந் நெடுந் துறக்கம் இந் நகற்கு" என்று கூறிய ஆசிரியர் அவ் வுவமையையே மேலும் கூறிக் கொண்டு செல்கிறார். "செல்வ மிகுந்த இலங்கை மாந்தர் நன்கு வாழத் தெரிந்தவர்கள்; இன்பத்தை அனுபவிக்கத் தெரிந்தவர்கள்; சிந்தையில் நிறைவோடு வாழ்ந்தார்கள்" என்றெல்லாம் ஆசிரியர் குறிக்கிறார்.

நாட்டின் உண்மை வளர்ச்சியைக் குறிக்க வல்லார் பெண்களே. பெண்கள் நன்றா யிராத நாட்டிலும் அவர்கள் அடிமைகளாக வுள்ள நாட்டிலும் வீரம முதலிய விளையா. எனவே இலங்கை மா நகரப் பெண்டிர் இருந்த நிலையைக் காண்போம். அவர்கள் பேச்சை என்னென்று கூறுவது? குழலும், வீணையும், யாழு மென்று இனையன குழைய மழலை மென் மொழி பேசும் மடவார்களாம் அவர்கள். அவர்கட்கு ஏவல் செய்பவர் தேவ மாதர்! இத் தகைய நிலையைப் பெற்ற அவரை என்னென்று புகழ்வது. "தவஞ் செய்த தவமே அவர்கள்" என்று கூறி அத்துட னமைகிறார் ஆசிரியர். அவர்கள் பொழுதைக் கழிக்கும் வழியே மிகச சிறந்த தாகவுளது. முருகியற் சுவையை (Aesthetic Taste) முற்று முணர்ந்த அவர்கள் இசையிலும் இன்பத் திலுமே பொழுது போக்குகின்றனர். பலர் பாடு கிறார்கள். பலர் அப் பாடல்கட் கேற்ப ஆடுகிறார்கள். சிலர் அவ் வாட்டத்திற் கேற்ப வாத்தியங்கள் முழக்கு கின்றார்கள்; அன் றலர்ந்த கற்பக மலரையே விரும்பிச் சூடுகின்றார்கள். அவர்களோடு ஒருங் கிருந்து விளையாடு பவர் தேவ மாதர்கள். அவர்களது தூபத்தினின் றெழுந்த புகை மேக மண்டலத்தை மூடுகிறது. கான கத்து மயில்களைப் போலவும், அன்னங்களைப் போலவும்

சென்று வான மகளிர் தெய்வத் தன்மை யுடைய நீரால் மஞ்சன மாட்ட அவர்கள் குளித் தெழுகின்றார்கள். புண்ணியஞ் செய்தமையான் தேவ ருலகத்து வாழ்வதாகக் கருதப்படுகிற தேவமாதர் மஞ்சன மாட்ட அரக்கியர் ஆடுகின்றார்கள் என்றால் இது விந்தை யன்றோ! மஞ்சன மாடி முடித்த மகளிர் உண வுண்டு, பின்னர் இசை இன்பம் உண்டு, இறுதியில் கணவன்மாரோடு இன்பக் கேளிக்கைகளிற் பொழுது போக்குகின்றனர்: அவ் வின்பத்தின் நடுவே மது அருந்துகிறார்கள். இதனை ஆசிரியர் "வரம்(பு) இன்றி வளர்ந்த காம, வருத்திய பயிர்க்கு நீர் போல் அரு நற(வு) அருந்துகின்றார்" என்று கூறுவது அறிந்து மகிழற் குரியது. அவரது வடி வழகைப் பலபடியாக வியந்த ஆசிரியர் "ஓவியம் அனைய மாதர்" என்று கூறி முடித்து விடுகின்றார். கற்பனை ஒன்றுக்கே இயைவதாகிய ஓவியம் கலையின்பாற் படும். கலை மனத்தின் எல்லையைக் கடந்து நிற்பது. 'ஓவியம் அனைய' என்று ஆசிரியர் கூறுமிடத்து, 'கற்பனையால் வரித்துக் கொள்ளப்பட்ட அழகெலாம் திரண்டு உருவு கொண்டதை ஒத்தவர்' என்றே பொருள் கொள்ள வேண்டும் எனவே, இவ்வளவு அழகுடைய மகளிர், தவஞ் செய்த தவமே போன்று வாழும் மகளிர் வாழ்க்கை முறை எது என்பதையும், பொழுதைக் கழிக்கும் முறை எது என்பதையும் ஒருவாறு கண்டோம். இத் தகைய வாழ்க்கை மகளிர் நடத்தின ரென்றால் அது மன்னவன் சிறப்பாலேயே நடைபெற் றிருக்க முடியும். அச்சம் என்பது ஒரு சிறிதும் இல்லாது செல்வங் கொழிக்கும் நாட்டிலேயே இஃது இயலும். அம் மட்டோ? இவை இரண்டு மிருந்துங்கூடக் கலை யறிவு இல்லை என்றால், அங்கு இசைக்கும் நடனத்திற்கும் இட மேது? எனவே இலங்கை மகளிர் கலைச் செல்வம் பெற்றுத் திகழ்ந்தன

ரென்பது ஒருதலை. இங்ஙனம் அவர்கள் வாழ வழி செய்தவன் இராவணனே யல்லவா? இலங்கை முழுதுஞ் சுற்றித் திரிந்து, அவர்கள் வாழ்க்கையை, அவர்கள் தன்னைக் காணாத வகையில், கண்டவனாகிய அனுமன் தன் கருத்தைத் தெரிவிக்கின்றான். அவர்கள் தன்னைக் காணாத வகை வடிவங் கொண்டு அவன் சென்றான் என்று முன்னமேயே கூறப்பட்டுள்ளது. அங்ஙனம் கூற வேண்டிய இன்றியமையாமையும் உண்டு. இன்றும் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டினைக் காண அரசரோ, அல்லது அவர் அருள் பெற்றவரோ செல்வார்களாயின், செல்லும் நாட்டில் எல்லாவற்றையும் செல்பவர் காண இயலாது அந் நாட்டின் விரும்பத் தகாத பகுதிகளெல் லாம் மறைக்கப்பட்டு விரும்பத் தகுந்தனவும், காண்டற் குரியனவும் ஆகிய பகுதிகளே காட்டப்படும். இரஷ்யா தேசத்தைக் காணச் செல்கிறவர்கள் இந் நிலையை அடை கிறார்கள் என்று நாம் புத்தகங்களிற் படிக்கிறோம். காண வருபவர் பகை யரசன் நாட்டினராகவோ, அல்லது ஐயத்திற் குரிய நண்பராகவோ இருப்பின் கேட்க வேண்டுவ தில்லை. அரசியலை நன்குணர்ந்த கம்ப நாடன் வேண்டு மென்றே இதனை இங்ஙனம் கூறு கிறான்; எத் துணையோ சந்தருப்பங்க ளிருந்தும் இலங் கையை வருணிக்க வேண்டும் பகுதியை அனுமன் மாட்டு விட்டு விடுகிறான். இதற்குக் காரணங்கள் பல வுண்டு. முதலாவது, அனுமன் இலங்கைக்கும், இராவணற்கும், ஏன்? அரக்க ரனைவர்க்குமே பகைவன்; மேலும் இராம னிடம் பூண்ட அன்புப் பெருக்கால் இராவணன் மாட்டுத் தீராப் பகைமை கொண்டவன்; அல்லாமலும் பிறன் மனை வியைக் கவர்ந்து செல்கின்ற செயலை முற்றும் வெறுப்ப வன்; தன் தலைவனாகிய சுக்ரீவன் படும் அல்லலைக் கண்டு அச்செயல் செய்கின்ற அனைவரையுமே அடியோடு

கப் பழகிவிட்டான்; அச் செயல் செய்தா ரிடத்துக் கொண்டுள்ள வெறுப்புக் காரணமாக அவரிடத் துள்ள ஏனைய நற்குணங்களைக் கூட மறந்து விடுகிறான். எனவே இத் தகையவன் கூற்றில் வைத்து இலங்கையையும் இராவணனையும் புகழ்தலே சாலச் சிறந்த தாகும். மேலும், அத் தகையவன் எதிர் பாராத சந்தருப்பத்தில் இலங்கையினுள் நுழைந்து கண்ட காட்சிகளைக் கூறு தலே சிறப்புடையது. விரும்பத் தக்கனவும், தகாதனவு மான அனைத்தையும் அவன் காண்டல் கூடும். ஆகவே அவனுடைய வார்த்தைகளே சிறந்தவை. மேற் கூறிய வற்றை மனத்தி லிருத்திக் கொண்டு கீழ் வரும் இரண்டு பாடல்களைப் பார்ப்போமாக: இவற்றிலிருந்து இரா வணனது இலங்கையைப் பற்றிய ஒரு முழுக் காட்சியை நாம் பெறமுடியும்:

பளிக்கு மாளிகைத் தலந்தொறும் இடந்தொறும் பசுந்தேன்
துளிக்குங் கற்பகத் தண்ணறுஞ் சோலைகள் தோறும்
அளிக்குந் தேற லுண்(டு) ஆடுநர் பாடுநர் ஆகிக்
களிக்கின் றாஅலால் கவல்கின்றார் ஒருவரைக் காணேன்.

—(ஊர்-படலம் 30)

நித்தநிய மத்தொழில ராய்நிறையு ஞானத்(து)
உத்தமர்உ றங்கினர்கள் யோகியர்து யின்றார்
மத்தமத வெங்களி(று) உறங்கினம யங்கும்
பித்தரும்உ றங்கினர்இ ளிப்பிறர்இ தென்னும்.

—(ஊர்-படலம் 165)

இத் தகைய நிலையில் சாதாரண மக்களும், உத்தமர் களும் வாழ வேண்டுமேயாயின், அது கொடுங் கோன் மன்னன் நாட்டில் இயலுமோ? சாதாரண மக்கள் 'ஆடுநர் பாடுந

ராகி வாழ்கின்றார்; களிக்கின்றா ரலால் கவல்கின்றார் ஒருவரைக் காணேன்' என்ற வாக்கால் அம் மக்கள் வாழ்வு படம் பிடித்துக் காட்டப்படுகிறது. மக்கள் மனத்தில் மகிழ்ச்சி பொங்கித் ததும்பிய பொழு தல்லவா இசை பிறக்கும்? வயிற்றில் வறுமை யில்லாத பொழு தல்லவா இசை பிறக்கும்? சீதையைக் கவருவதன்முன் னர் இராவணன் செங்கோலனுகவே திகழ்ந்தான் என்று எண்ணவேண்டி யுளது. அவன் வாழ்க்கை முறையைப் பின்னர்க் காண்போம். கவலையில்லாமல் தன் மக்களை வாழ வைத்தவன் இராவணன் என்று அறிகிறோம். இம் மட்டோ? கேவலம் பொருட் செல்வம் ஒன்றினாலேயே மகிழ்வடையும் பான்மை யுடையார் மட்டுமே ஈண்டுக் குறிக்கப் பட்டார் என்று எண்ணவேண்டாம் அருட் செல்வ முடையாரும் அந் நாட்டில் வதிந்தனர் என்பதைத் தெரிவிக்கவே ஆசிரியர் இப் பாடலைக் கூறுகிறார். தினந் தோறும் அற முறை வழுவாது காரியங்கள் செய்வதோடு நிற்க வில்லையாம் அவர்கள். 'நிறையும் ஞானத்து உத்த மர்' என்று கூறினமையால் சிறந்த நல் ஞானத்தைத் தரக் கூடிய கல்வி கற்று, அக் கல்வியை ஏட்டளவில் நிறுத்தாமல் வாழ்க்கையிலும் வாழ்ந்து காட்டினர் எனக் கூறப்படுகிறது. 'நிறையும் ஞானத்து' என்றமையின் கல்வி மேம்பாடும், உத்தமர் என்றமையின் ஒழுக்க மேற்பாடும் கூறியவா றாயிற்று. இங்ஙனம் உள்ள அவர் கள் தம் நாட்டை விட்டு ஓடிவிடாமல் அங்குத் தங்கித் தினப்படி காரியங்கள் செய்துகொண்டு வாழுகிறார்கள் என்பது 'நித்த நியமத்தராய்' என்றதால் குறிக்கப்படு கிறது. இத் தகைய மக்கள் ஒரு கொடுங் கோலன் நாட்டில் வாழ முடியுமா? வாழத்தான் விரும்புவார்களா? ஒரு வேளை வாழ வேண்டிய இன்றியமையாமை ஏற்படினும், அவ்வாழ்க்கையை உதறித் தள்ள வழி தேடுவார்களே

யன்றி மகிழ்ச்சியோடு அங்குத் தங்கி இருப்பார்களா? அவர்கள் அங்ஙனம் மனம் ஒப்பி இருந்தார்கள் என்னும் கருத்துக் குறிப்பாக உணர்த்தப் படுகிறது. 'உத்தமர் உறங்கினர், யோகியர் துயின்றார்' உறக்கமும், துயிலும் மன வமைதி யுடையார்க்கு ஒல்லுமே தவிர, மனத்தில் மாறுபாடு கொண்டு நாட்டை விட்டுச் செல்ல வேண்டும் என்று நினைப்பார்க்கு இயலாத தொன்றாம். எனவே இப் பாடலால் யோகியர் உத்தமர் ஆகிய அனைவரையும் ஆதரித்து வந்தனன் இராவணன் என்ற கருத்து அறிவுறுத்தப் படுகிறது.

இவ்வளவு விரிவாக இலங்கையையும், அதன் மக்களையும் அறிவதற் கொரு காரண முண்டு. இந்த அடிப்படையை நன் கறிந்தபின்னரே, இராவணனைப் பற்றி நன்கு அறிய முடியும்.

இவ் வரிய பெரிய இலங்கையைத் தலை நகராகக் கொண்டு ஆட்சி செய்தவன் இராவணன் என்னும் தோன்றல்; புலத்தியன் மரபில் வந்தவன்; மூ வுலகத்தை யும் வென் றடிப்படுத்துத் தனி யாட்சி செய்தவன்; சிறந்த சிவபக்தன் ; எல்லை யில்லாத வரங்களை யுடையவன் ; தன் பெருமைக்கு ஏற்பப் பத்துத் தலைகளையும் இருபது கைகளையும் பெற்று வாழ்ந்தவன் ; மூன்று கோடி வா ணாளையும், முயன்று பெற்ற அரிய தவத்தை யும், 'எவராலும் வெல்லப்பட மாட்டாய்' என்று இறைவனாலே கொடுக்கப் பட்ட வரத்தையும் உடையவன் ; திக் கயங்களை வென்று அவ் வெற்றியின் அறிகுறியாக அவற்றின் தந்தங்களை மார்பிலே தாங்கியவன்.

கேவலம், மிருக பலம் மட்டும் பொருந்தியவனல்லன் ; ஆன்ம வலிமையும் நிரம்பப் பெற்றவன்.

அவன் வன்மைகளை யெல்லாம் பலபடியாகச் சுவைத்துச் சுவைத்துப் பாடுகிறார் கம்ப நாடர் ;

" முக்கோடி வாழ்நாளும் முயன்(று)உடைய பெருந்தவமும்
முதல்வன் முன்னாள்
எக்கோடி யாராலும் வெலப்படாய் எனக்கொடுத்த
வரமும் ஏனைத்
திக்கோடு முலகனைத்தும் செருக்கடந்த
புயவலியும் "

(இரா. வதை. 198)

உடையவனும் அவன். இப் பாடலிற்றான் எவ்வளவு சொல் லழகும், பொரு ளழகும் பொதியப்பட்டிருக்கின்றன? "நாளென ஒன்றுபோற் காட்டி உயி ரீரும் வாள் ; அஃ துணர்வார்ப் பெறின் " என்று கூறினார் ஆசிரியர் வள்ளுவப் பெருந் தகையார். அத் தகைய வாழ் நாளில் மூன்று கோடியை உடையவன் இராவணன். அம் மட்டோ? தவமுடையன் இராவணன். எத்துணைத் தவம்? பெருந் தவமாம். அப் பெருந் தவந்தானும் எவ்வாறு கிடைத்தது? முயன்று பெற்ற பெருந்தவம் எனவே, தன் முயற்சி யாலேயே பெற்ற அது மிகுதியுஞ் சிறப் புடையது. பிறர் செய்த தவப் பயனைச் சிலர் அனுபவித்தலு முண்டு. அவ்வாறாயின் அதனை அனுபவிப்பானுக்குச் சிறப்பொன்று மில்லை மேலும் சிலர் தவப் பயனை அனுபவிக்கலாம். அத் தவம் முடிந்த பிறகு அவதியில் விழுவது திண்ணம். ஆனால் இராவணன் தவம். அவன் வாணாள் முடியவிருந்து அவனுக் குதவிற்று. இக் கருத்துக்க ளெல்லா மடங்க ' முயன்று உடைய பெருந்தவம் ' என்று குறிப்பிடுகிறார் ஆசிரியர். வரம் பெற்றிருப்பினும், அவ் வரத்தைத் தந்தாரினும் மேம்பட்டா ரிடத்து அவ் வரம் பயனின்றாய் முடியும். அது கருதியே வரந் தந்தவன் ' முதல்வன் ' என்றார். அவன்றானும் புதிதாய்த்

தந்த வர மன்று. நன்கு பயின்று பார்த்துப் பயனுடையது என்று காணுமாறு 'முன்னரே' தந்தது என்று கூறுவார்போல 'முன்னாள்' என்றார். இராமன் கையில் மாண்ட அவனுக்கு 'வரம்தான் பொய்த்து விட்டதோ?' என்று ஐயுறுவாரைத் தெளிவிப்பதற்காகவே, கொல்லப் படுதல் பற்றி வரத்தில் ஒன்று மில்லை, வெல்லப்படக் கூடாது என்பதே வரம்' என்றும் கூறினார். அவன் பிறரிடஞ் சரணடைந்து வெல்லப்படவில்லை. தான் எடுத்த காரியம் சரியோ, தவறோ? அதற்காக உயிரை விட்டதால், கொள்கையில் வெற்றியே கொண்டானாகலின், 'வெலப்படாய்' எனக் கொடுத்த வரமும் உண்மை யாயிற்று. அவன் கொண்ட வெற்றிக ளெல்லாம் வரத்தான் விளைந்தவை யல்ல; அவன் புய பலத்தால் விளைந்தவையே என்பார் 'உலகனைத்தும் செருக் கடந்த புயவலி' என்றுங் கூறினார்.

இவ்வளவு அருமைப்பாடுகளும அமைந்த இராவணன் ஊழ் வலியால் ஒரு பெருந் தவறு செய்தான்; பிறன் மனை நயத்தலாகிய சிறு தொழில் செய்தான். அதன் பயனாக மானம் இழந்து, அரியணை இழந்து உயிரும் இழந்தான் ; தன்னோடு சேர்ந்தா ரனைவரையும இறக்குமாறு செய்தான்; ஒரு பெரிய அவல நாடகம் நடக்குமாறு செய்துவிட்டான்; பெருந் தவறு செய்த காரணத்தால் பெருந் தீங்கை அடைந்தான். இவ்வொரு தவற்றிற்காக அவனை வீணன் என்று தள்ளலாகாது. படிப்பவர் மனத்தில் அவன்பால் மட்டற்ற மதிப்பே தோன்றுகிறது. நன்மைக்கும் தீமைக்கும் ஒரு பெரும் போராட்டம் நடந்தது. அவன்பால் முழுதுமே தீமை இல்லை. முழுதும் நன்மையாக விருந்த இராவணன் மனத்தில் சிறு தீமை புகுந்து அம் முழு நன்மையையும் தனக் கடிமைப் படுத்தி விட்டது. பண்பாடுகளால்

நிரம்பிய அப் பெரு மனம் சிறிது சிறிதாகப் பிடி இழந்து இறுதியில் பெருங் குழியில் விழுகிறது. இதுவே அவலத்தின் சிகரம். இந் நிலையைச் சற்று விரிவாகக் காண்பதே நூலின் நோக்கமாகும்.



## தீயினை நயந்தான்

இராவணனோடு உடன் தோன்றியவன் கும்பகருணன்; உடன் பிறந்தே சொல்லும் வியாதி போன்றவனல்லன்; செஞ்சோற்றுக் கடன் கழிப்பதற்காகத் தகாதது என்று தன் மனம் கூறிய செயலைக் கூடச் செய்தான். அவன் கோழையல்லன்; இராவணனோடு ஒத்த வன்மை யுடையவன். ஆகாயத்தை யழிக்கும் மேன்மையும், கடலே யனைய கண்களும் உடையனும் அவன். அவன் தம்பி வீடணனே அவனைக் குறித்துக் கூறுகையில் "மண்ணினை அளந்து நின்ற மா லென வளர்ந்து நின்றான்" என்று கூறுவானேயாகில் அவன் பெருமை நம்மால் அளவிடற் கரியதா மன்றோ!

இவ் வரிய வீரன் முதன் முதலில் மந்திரப் படலத்தில் காட்சி யளிக்கிறான். கேவலம், குரங்கு ஒன்று ஊரைச் சுட்டுச் சூறை யாடிவிட்ட தென்று உள மருகி நிற்கின்றான் இராவணன்; சிறந்த வீரனுக்குத் தகாததாகிய 'தன் னிரக்கம்' (Self Pity) கொள்ளுகிறான்; தன்னாட்சி சிதைந்து போனதாக நினைந்து வருந்துகிறான் இந் நிலையில் கும்பகருணன் தமையனைக் காண்கிறான் 'மூவரும் அஞ்சத்தக்க போரினைச் செய்கின்றவனும், வெள்ளியங் கிரியினை விடையின் பாகனோடு அள்ளி விண் தொட எடுத்த ஆற்றலோனும் ஆகிய நீயா இங்ஙனம் வருந்துகிறாய்?' என்று கேட்கிறான். இராவணனை நோக்கி

அவன் கூறும் வார்த்தைகளினாலேயே தமையன்மாட்டுக் கும்பன் கொண்டுள்ள மதிப்பும், அன்பும் வெளிப்படு கின்றன. அவன் கூறும் முதற் கருத்தைக் காண்க;

" நீஅயன் முதற்குலம் இதற்(கு) ஒருவன் நின்றாய்
ஆயிரம் மறைப்பொருள் உணர்ந்(து) அறி(வு) அமைந்தாய்
தீயினை நயப்புறுதல் செய்தவினை செய்தாய்
ஏயின உறத்தகைய இத்துணைய வேயோ "

(மந். படலம் — 48).

இவ்வொரு பாடலிலேயே கும்பகருணனையும் இராவண னையும் முழு வடிவத்தோடு காண முடிகிறது. இரா வணனை எத்தகையவன் என்று கும்பன் கருதுகிறான்? அறிவுடைய ஒருவன் பழிச் செயல் செய்ய முற்படுகை யில் அதனால் விளையும் பயனை யன்றோ முன்னர்க் கருது வான். பெரியோர்களைப் பற்றிச் சொல்லும் பொழுது " பழியெனின் உலகுடன் பெறினும் கொள்ளலர் ' என் றன்றோ புறநானூறு கூறுகிறது. மேலும், தம்மால் விரும்பப்படுகிற பொருளிடத்து உயிரனைய காதல் உடையவ ராயினும் அப் பொருளைப் பெறுவதால் பழி யேற்படு மெனில் சான்றோர் அப் பழிக் கஞ்சிப் பொருளை விடுவரே தவிரப் பழியொடு வரும் அப் பொருளை விரும்ப மாட்டார். இக் கருத்தையே அகநானூற்றில் ஒரு பாடலில் காண்கிறோம். "கழியக் காதல ராயினும் சான்றோர் பழியோடு வரூஉம் இன்பம் வெஃகார்." எனவே, கும்பகருணன் தன் அண்ணன் பெற்ற பழியை நினைந்தே வருந்துகிறான். அப் பழியும் அவனளவில் நிற்பதல்லவே! புலத்தியன் மரபிற் றோன்றியமையின் அக் குடி முழுதிற்கு மன்றோ பெரும் பழி சூழ்ந்து விட் டான்! சாதாரணக் குடியிற் பிறந்தவனே இத் தகைய தவற்றைச் செய்யின் உலகம் பழிக்கும். நான் முகன் முதலாக வருகின்ற உயர் குடியிற் பிறந்த ஒருவன்

செய்யின் அக் குற்றம் மிகப் பெரிதாக வன்றோ மதிக்கப் பெறும்!

"குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து"

(குறள் 657)

எனவே, இராவணன் செய்த இக்குற்றம் மிகப் பெரியது என்பதைக் கும்பன் நன்கு எடுத்துக் காட்டுகிறான். அம்மட்டோ?

அடுத்தபடியாக, இராவணனது கல்வி யறிவைப் புகழுகிறான் கும்பன். சாமவேதம் பாடும் இராவணனது கல்வி எத் தகையது? மிகப் பரந்தும் ஆழ்ந்தும் உள்ளது, ஆயிரம் மறைப் பொருளைக் கண்டது. கேவலம், மறையை அப்படியே உருத் தள்ளி ஒப்பிப்பவன் அல்லன் இராவணன். மறையின் பொருளையும் நன்கறிந்தவன் அவன்; ஏனையோர்போல மிகுதியும் கற்று, கற்றதை வெறும் ஏட்டுக் கல்வியாகக் கொண்டிருப்பவனல்லனே! எனவே, மறைப் பொருள் 'அறிந்து' என்று கவிஞன் கூறுமல் வேண்டுமென்றே பிறிதொரு சொல்லைப் பயன் படுத்துகிறான். அறிதல், தெரிதல், விளங்கிக் கொள்ளுதல், உணர்தல் என்ற சொற்களை நாம் இன்று ஒரே கருத்தில் பயன்படுத்தினும் அவை வெவ் வேறான பொருட் சிறப்புடையவை. 'அறிதல்' அறிவு மாத்திரையாய் நின்று அடங்குவது. அறிவால் அறிந்த ஒன்றை வாழ்க்கையில், நடைமுறையில், கொணர வேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை. ஆனால் 'உணர்தல்' அத் தகைய தன்று. அறிவால் அறிந்து, மனத்தால் விரும்பப்படும் ஒன்று, சிந்தையில் சென்று தங்கும் பொழுதே 'உணர்தல்' தன்மையில் அடங்குகிறது. எனவே ஒரு பொருளை அறிதலுக்கும் உணர்தலுக்கும் கடலத்தனை வேற்றுமை உண்டு. கவிஞனே இவ்

வேற்றுமை நயந் தெரிந்து சொற்களைப் பயன் படுத்த வேண்டும். இதனை நன்குணர்ந்த கம்பநாடன் இராவணன் கற்றது வெறும் ஏட்டுக் கல்வி யன்று என்று கூறுகிறான். அவன் கல்வி வாழ்க்கையோடு ஒன்றியது என்று சொல்லுகிறான். மறை, பொருளோடு அறியப்பட்டு அது வாழ்க்கையில் இரண் டறக் கலக்கும் பொழுது 'உணர்தல்' தன்மையைக் கிட்டுகிறது. இதனாலேயே "ஆயிரம் மறைப் பொருள் உணர்ந்து அறிவு அமைந்தாய்' என்று கும்பன சொல்கிறான். கல்வியின் பயன் இதுவே யாகுமாதலின் இஃ தில்வழிக் கல்வி பய னற்றதாய் முடியும். இங்ஙனம் வாழ்க்கையில் ஒன்றுது நிற்கும் கல்வி மனிதனுக்கு நன்மை செய்வ தின் றெனினும் தீமை செய்தே தீரும். வீணுன தருக்குக் கொள்ளவும் ஆராயாது வினை செய்யவும், தொட்டதி லெல்லாம் ஐயங் கொள்ளவும் செய்யுமாகலின் அக் கல்வி வேண்டா மென்று கூறவந்த தாயுமான அடிகள் "கற்றார்களினும் கல்லாத பேர்களே மிக நல்லவர்கள்' என்று கூறிப் போந்தார், அங்ஙனம் கூறுவதின் கருத்தையும் பின் னடியிற் கூறிவிடுகிறார்; 'கற்றும் அறி வில்லாத என் கன்மத்தை என் சொல்லுவேன்' எனவே, கல்வியின் முடிந்த பயன் வாழ்க்கைக்குப் பயன்படுவதாயும், வாழ்க்கையில் ஒன்றக் கூடுவதாயும் இருக்கவேண்டும் என்பதும் ஒரு கலை. இக் கருத்தை உள்ளடக்கியே 'உணர்ந்து அறிவு அமைந்தான்,' என்று கூறப்படுகிறது. அறிவு அமைதலுக்கு உணர்தல் இன்றியமையாத தாகலின் அது முன்னர்க் கூறப்பட்டது. இச் சொல்லுக்கு இதுவே பொருள் என்பது பின்வரும் சான்றால் வலியுறுத்தப்படும் :

பாண்டவர் சூதாட்டத்தைப் பாடிவருகிறார் நம் காலக் கவிஞராகிய பாரதியார். எல்லாவற்றையும் வைத்துத் தருமன் இழந்துவிட்டான். இறுதியாக நாட்

டையும் வைத் திழந்து விட்டான். இதனைப் பாடுகிற கவி ஞனுக்கு, இச் செயல் தீராத வருத்தத்தை உண்டாக்கு கிறது உடனே இக் காரியத்தைச் செய்த தருமனைக் கவிஞன் தன் கற்பனைக் கண்ணில் பார்க்கிறான். "ஆகா! தருமனா இக் காரியஞ் செய்தான்? கல்வி கேள்வி களிற் சிறந்த தருமனா இக் காரியஞ் செய்தான்? தான் வைத்துக் காக்க வேண்டிய அடைக்கலப் பொருளாகிய நாட்டை, மக்கள் வாழுகிற நாட்டை, ஆடு மாடுகளையும் உயி ரில்லாப் பொருள்களையும் பணயம் வைத்து ஆடு வதுபோல ஆடிவிட்டானே! என் செய்வது!' இவ் விதம் நினைந்தவுடன் கற்பனை யூற்றுத் திறக்கிறது. கவிஞன் பாடுகிறான்:

"கோயிற்பூசை செய்வோர் —சிலையைக்
கொண்டு விற்றல் போலும்
வாயில் காத்து நிற்போன்—வீட்டை
வைத்(து) இழத்தல் போலும்
ஆயிரங்க ளான நீதி
அவை உணர்ந்த தருமன்
தேயம் வைத்திழந் தான்—சிச்சீ
சிறியர் செய்கை செய்தான்."

இவ்விடத்தில் 'உணர்ந்த' என்ற இச் சொல்லின் பொருள் நன்கு விளங்குதல் காண்க. நீதி அறிதல் மாத்திரையாய் நிற்பதற்கு ஏற்பட்டதன்று; உணர்தற் கும், உணர்ந்து நடப்பதற்கும் அன்றோ ஏற்பட்டது? இதனை நன் குணர்ந்த கவிஞன் நீதி உணர்ந்த தருமனா இங்ஙனம் செய்தான் என்று வருந்துகிறான். நிற்க.

இராவணனுடைய கல்வி எத் தகையது என ஒரே அடியில் கும்பகருணன் கூறிவிடுகிறான்: "ஆயிர மாயிரமான மறைகளையும், மறைகளின் பொருள்களையும் நன்கு உணர்ந்தான்; உணர்ந்த வளவோடு நில்லாமல்

வாழ்க்கையில் அவற்றைப் பயன்படுத்தி அறிவு அமைதியான நிலையை அடைந்தான். தெளிவை அடைந்தான்."

அங்ஙனம் இல்லாக்கால் வள்ளுவப் பெருமான்,

'ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்'' —குறள் 834

என்று கூறியாங்குப் பேதையாக வன்றோ அவன் ஆகி விடுவான்? இவ் வொரு அடியாலேயே இராவணன் சிறப்பும், அச் சிறப்பை நன்குணர்ந்த அவன் அருமைத் தம்பியின் சிறப்பும் நன்கறியக் கிடக்கின்றன. இவ்வளவு அறிவுபடைத்தவனாகலின் கும்பன் அவனை நோக்கிமேற் கூறியவாறு கூறுகிறான். "உனக்கு ஏற்படும் பழியை நீ சட்டை செய்யவில்லை யாயினும் குலத்திற்கு வரும் பழியைக் கூடவா மறந்து விட்டாய்?' என்ற முறையில் அவன் பேச்சு அமைந்திருத்தல் அறிக. மேலும் அவன் கூறுகிற ஒன்பது பாடல்களுள் ஏறத் தாழப் பாடல் தோறும் குலப்பெருமையும், புகழும் பேசப்படு கின்றன. இங்ஙனம் எடுத்துக் கூறுவதாலேயே இராவணன் இவை இரண்டையும் பெரிதும் மதிக்கின்றவன் என்பது பெறப்படுகிறதன்றோ! "பாவியர் உறும் பழி இதிற் பிரிதும் உண்டோ", "பொன்னடி தொழத் தொழ மறுத்தல் புகழ் போலாம்", இங்ஙனம் கூறுவதோடு அமையாமல், "என்று, பிறன் மனைவியை விரும்பிச் சிறை வைத்தாயோ, அன்றே அரக்கர், புகழும் மாய்ந்தது" என்றும் கூறுகிறான். சற்று நின்று ஆராய வேண்டும் இடம்;

"என்(று)ஒருவன் இல்லுறை தவத்தியை இரங்காய்
வன்றொழிலி னய்மறை துறந்துசிறை வைத்தாய்
அன்றொழிவ தாயின அரக்கர்புக ழைய
புன்றொழிலி னூர்இசை பொறுத்தல்புல மைத்தோ"

(மந். படலம். 51)

நேர் நின்று போர் செய்து பகைவனை வென்று அவன் மனைவி மக்களைச் சிறைப்பிடித்து வைத்தல் உண்டு. ஆனால், ஒருவன் மனைவியைத், தவறான எண்ணத்துடன் கொணர்ந்து சிறை வைத்தல் அறிவுடையவன் செய்கின்ற செய லன்று. எனவே, தவறு நடந்தவிடம் சிறை வைத்தலிலில்லை. சிறை வைக்கப்பட்ட பொருளிடத்துக் கொண்ட தவறான விருப்பமே, என்பதை நன்கு அறிவுறுத்துவான் வேண்டி முதற் பாட்டில் "வேறொரு குலத்தோன் தேவியை நயந்து சிறை வைத்தாய்' என்றுங் கூறுகிறான். இந் நயப்பே அழிவுக்கு காரணம் என்றுங் கூறுகிறான். விருப்பம் ஏற்பட்ட அப்பொழுதே அரக்கர் புகழ் அழிவதாயிற்று என்றுங் கூறுகிறான். ஏன் எனில்,

"எளிதென இல்லிறப்பான் எய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி

—குறள் 145

என்று ஆசிரியர் கூறிப் போந்தா ரன்றோ!

அண்ணன் புகழ்மேற் கொண்ட காதலை, நன்கு அறிந்த கும்பகருணன், மீண்டும மீண்டும் அதனையே சுட்டிக் காட்டுகிறான். தருக்க முறைப்படியும், தவறு செய்தவன் புகழை அடைதல் இயலாத காரியம் என்பதை எடுத்துக் காட்டுகிறான்.

அண்ணன் செய்த செயல் குலத்திற்கே இழிதகைமை தேடிற் றென்ற வருத்தம் கும்பகருணனுக்கு எல்லையற்று இருந்தது. மீண்டும் மீண்டும் அதனையே குறிக்கின்றான். "சிட்டர் செயல் செய்திலை குலச்சிறுமை செய்தான்".

இங்ஙனம் பழியை எடுத்துக் கூறினான் பிறகு குலத்திற்கே தீங்கும் பழியும் விளையும் என்று எடுத்

தும் காட்டுகிறான். ஒரு வேளை இராவணன் நிலைமை மாறிப் புகழையும் சட்டை செய்யாது இருந்து விடலாமல்லவா? மேலும், குடிக்கு வருகின்ற பழியைக்கூடச் சட்டை செய்யா திருந்துவிடலாம். காரணம், மனித மனம் பன்னெடுங் காலம் ஒன்றைப் பற்றி நிற்பதில்லை. எல்லையற்ற புகழைப் பெற்று விட்டமையின் இனிப் புகழுக்கு இடமில்லையாதலின் பழிவரினும் வருக என்று நினைத்து விடலாமல்லவா? எனவே, இறுதியாக வேறு ஒரு கருத்தைக் கொண்டு வருகிறான். இதுவும் இராவணனை நன்கு தெரிந்து கொண்டமையின் அவன் செய்கிற இறுதி உபாயமாகும். எள்ளி நகையாடும் முகமாக, ஒவ்வாத இரு பொருள்களைச் சேர்த்துச் சொல்கிறான். இராவணன், மானத்தோடு வாழவேண்டுமென்று பெரிதும் விழைகிறவன் என்று அறிகிறோம். மானம் இழந்து உயிர் வாழ்வதை எந்த வீரனும் விரும்பான். ஏன்? சாதாரண மனிதனும் அதனை மதியான். ஆகவே மானம் இழந்து நீ வாழ விரும்புகிறாயா என்ற முறையிற் கேட்கிறான. மானம் இப்பொழுது இழக்க என்ன நேர்ந்து விட்டது என்ற கேள்வியைத் தமையன் கேளாமலே இவன் விடை தந்து விடுகிறான். "பேசுவது மானம், இடை பேணுவது காமம்" என்று அவன் கூறுமுகத்தான் இவை இரண்டும் ஒன்றோடொன்று விரோதமானவை என்றும் ஒன்றுள்ள விடத்தில் மற்றொன்று இரா தென்றும் அறிவிக்கிறான். இன்றும் பழமொழி யளவில் இது வழங்கக் காண்கிறோம். "ஆசை வெட்கம் அறியாது" என்ற பழமொழிப் பொருளே மேற் பாடலின் பொருளாகும்.

இந் நிலையிலும், இராவணன் தன மனம் மாறியதாகத்தெரிய வில்லை. உடனே தனது போக்கை மாற்றிக் கொண்ட கும்பகருணன் போர் செய்தலே தக்கது

என்று முடிபு கூறிவிட்டான். "மட்டவிழ் மலர்க்குழலி னாளையினி மன்னை விட்டிடுது மேல்எளிய மாதும் அவர் வெல்லப் பட்டிடுது மேல்அதுவும் நன்று பழி யன்றால்' எனவே தமையன் மனம் மாறாதது கண்ட தம்பி கூடுமானவரை, பழி வராமல் தடுக்க முயல்கிறான். இராவணனும் இக் கருத்தை ஏற்றுக் கொள்கிறான். கும்பகருணனது முடிபை ஏற்றுக் கொள்வதால் அவன் முற் கூறிய நியாயங்களனைத்தையும் இராவணன் ஏற் றுக் கொண்டான் என்ற கருத்தன்று. பழி யளவிற்கு இராவணன் அஞ்சினான் என்ற கருத்தை யாரும் மறுப்பதற்கில்லை. சீதையின்மாட்டு எவ்வளவு காமங் கொண்டிருந்தானோ, அவ்வளவு புகழ்மாட்டுங் காதல் கொண்டிருந்தான் அவன். இறுதியாகத் தனது எண்ணம் நிறைவேறாது என்று கண்ட பின்னருங்கூட அவன் போர் செய்து மாய்தலே தக்கதும் புகழும் ஆகும் என்று நினைக்கிறான் எனவே அவனது சீரிய பண்பில் ஐயப் படுவதற் கொன்றும் இல்லை.

இனி இறுதியாகப் போர் மூண்டு விடுகிறது. கும்பகருணனை எழுப்பிக்கொண்டு போர்க் கோலம் பூணு கிறார்கள். மீண்டும் கும்பன் தன் அண்ணனிடம் முறை யிடுகிறான். ஆனால் இப்பொழுது பேசுகிற கும்பன் மந்திரப் படலத்தில்கண்ட கும்பகருணன் அல்லன் எதிர் பாராத முறையில் போர் மூண்டுவிட்டது. இப்பொழுது அதைத் தடுக்க அவன் முயல்கிறான்; தடுத்தாவது பழி வராமற் காக்கவே முயல்கிறான்;

'சானகி துயர் இலாம தவிர்ந்தது இல்லையோ
வானமும் வையமும் வளர்ந்த வான புகழ் போனதோ'

என்றே வருந்துகிறான்; மீண்டும் தமையனை நோக்கு கிறான்; தமையன் செய்த ஒன்றுக்கு மேற்பட்ட தவறு கள் நினைவுக்கு வருகின்றன. தற்பொழுது இராவணன்

செய்த பெருந் தவறு உலகந் தோன்றிய நாளிலிருந்து பெருவீரர்கள் செய்த தவறுதான். அத் தகைய தவற்றி ஞல் எத்தனையோ சாம்ராச்சியங்கள் அழிந் தொழிந்தன. அப் பெருந் தவற்றை இராவணனும் செய்துவிட்டான்; ஆய்ந்தோய்ந்து பாராது செய்துவிட்டான்; இப் பொழுது கூடக் கூடுமாயின் அதிலிருந்து விடுதலை பெற லாம்; ஆனல் வெளி வராவிடின் குல முழுதும் ஒருங் கழிந்துவிடுமே என்று அஞ்சுகிறன். அப் பெருந் தவறு தான் யாது? பகைவன் வலி எத் தகையது என் றறியாது போரை வலிவில் வரவழைத்துக் கொண்டமையே. போர் முறை தெரிந்த வீரஞே இராவணன்? வலியறிதல் என்ற துறையையே அவன் கற்க வில்லையா?

"வினைவலியுந் தன்வலியும் மாற்றான் வலியும்
துணை வலியுந் தூக்கிச் செயல்"

—(குறள்: 471)

என்ற கருத்தை அறவே மறந்துவிட்டான் வாலிபால் தோற்றமையும், கார்த்த வீரியன் பால் தோற்றமையும் மறந்து விட்டானே? அத் தகைய வாலியைக் கொன்ற அம்பு இராமன்மாட்டு இன்னும் இருக்கின்றதே! காற்றின் உதவியால் கடலைக் கடந்த குரங்கு இன்னும் அவன்பால் உள்ளதே. மாற்றான் வலியை இராவணன் ஆணவத்தால் நன்கு தெரிந்து கொள்ள வில்லை. கும்ப கருணன் அதனை எடுத்துக் கூறுகிறன்.

"காலினிற் கருங்கடல் கடந்த காற்றது
போலவன் குரங்குள சீதை போகிலள்
வாலியை உரங்கிழித் தேக வல்லன
கோலுள யாருளேம் குறையுண் டாகுமே?"

—(கு. வதை: 87)

பகைவன் பலத்தை நன்கு அறியாத பெருங் குற்றம் இழைத்துவிட்டான் இராவணன். அம் மட்டோ?

துணை வலியும் ஆராய வேண்டாமா? "கொடுத்தனை இந்திரற்குக் குலமும் கொற்றமும்" என்றமையான் இனி அவர்கள் துணை இல்லை என்பதை எடுத்துக் காட்டினான்.

அஃது ஒருபுற மிருக்க, தன் வலியையாவது ஆராய்ந் தானா இராவணன்? வெற்றிமேல் வெற்றி பெற்றார் செய்யுந் தவற்றையே யன்றோ இவனும் செய்து விட்டான்! இதுவரைத் தோல்வியென்பதையே காணாமை யின் தன் வாழ் நாளில் தோல்வி என்பதே இல்லை என் றன்றோ ஒரு தவறான முடிபுக்கு வந்துவிட்டான்!

நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந்(து) ஊக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும்.

—(குறள்: 476)

உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முறிந்தார் பலர்

—குறள்: 473

போர் வீரனுக்கு வேண்டப்படுவதாகிய இவ் விரு பண் புகளையும் மறந்துவிட்டான் தக்க சமயத்தில் அவ னுக்கு இதனை எடுத்துக் காட்டவேண்டாமா? இதுவே கும்பகருணன் இப்பொழுது செய்கிற செயல்;

"அண்ணா! உன் வலிமைக்கும் எல்லை யுண்டு. அதன் மேற் செல்வாயேயாயின் உயிர்க் கிறுதி ஆகிவிடும்" என்று சொல்வானாய்,

"கல்லலாம் உலகினை வரம்பு கட்டவும்
சொல்லலாம பெருவலி இராமன் தோள்களை
வெல்லலாம் என்பதும் சீதை மேனியைப்
புல்லலாம் என்பதும் போலுமால் ஐய"

—(கு. வதை: 81)

என்றும்

"கெடுத்தனை நின் பெருங் கிளையும் நின்னையும்"—(ஷை 83)

என்றும் எடுத்துக்கூறினன். இவற்றி லெல்லாம் இராவணன் அறிவு பெறவில்லை தன்பா லுள்ள நம்பிக்கையால் கும்பனை இழித்துப் பேசி மனம் வருந்துமாறு கூறினன்; இறுதியாகக் கும்பகருணன் மீண்டும் கூறலுற்றான்: இராவணன் கொண்ட செருக்கிற்கும் அவன் இப்பொழுது செய்யும் தவற்றிற்கும் காரணம் அவன் தனது பலத்தின் பேரிலும், இந்திரன் பகைஞனா இந்திரசித்தன் வன்மையின் மாட்டுங் கொண்டுள்ள நம்பிக்கை தானே! அதனையும் தகர்க்கிறன் கும்பன். இந்திரசித்தன்மேல் இராவணன் கொண்டுள்ள நம்பிக்கை தான் எவ்வளவு? ஆம். அவ் வளவிற்கும் தகுதியானவன் தான் மைந்தன். ஆனாலும் என்ன? பகைவரை நன் குணரவில்லை. இவனைக் கொல்வதற்காகவே இலக்குவன் காத்துக் கொண்டிருக்கிறனே! இராவணன் அதனை அறிந்தானில்லை. எனவே தம்பி ஆணையிட்டுக் கூறுகிறன்: "இந்திரன் பகைஞனும் இராமன் தம்பி கை மந்திர வலியினல் மடிதல் வாய்மையால் ஒருவேளை அவ்வாறு நேர்ந்தாலும் நேரலாம். இருப்பினும் என்ன? தன் மேல் தான் கொண்டுள்ள நம்பிக்கையைத் தகர்க்க முடியாதே! எனவே அதற்கும் விடையாக 'என்னை வென்(று) உளரெனில் இலங்கை காவல, நின்னை வென்(று) உயருதல் உண்மை' என்றும் கூறிவிட்டான். என்ன? இவ்வளவு கூறியும் அவ் விராவணன் கேட்கவில்லையே! சம பலம் உடையவனும், அண்ணன் மாட்டுத் தீராத காதல் உடையவனும், சிறந்த போர் வீரனும் ஆகிய தம்பியே இங்ஙனம் கூறிய பிறகும் ஒருவன் கேட்கவில்லை. அதினுமகற்றறிவும், கேள்வி யறிவும் உடையவனும். சிறந்த கலையறிவு படைத்தவனும் ஆகிய இராவணனே கேட்கவில்லை என்றால் இதனை என்னென்று கூறுவது? அவனது அறிவு வேலை செய்ய

மறுத்து விடுகிறதா? அல்லது, சிதைமாட்டுக் கொண்ட காதல் அவ்வளவு வன்மை யுடையதா? இவ் வினாவிற்கு விடை தர நம்மால் இயலாது. இத் தகைய சந்தருப்பங் களிற்றான் விதியின் விளையாட்டு நடைபெறுவதாகப் பெரியோர் கூறுவர். கும்பகருணனும் அதனையே கூறு கிறான்:

"வென்(று) இவண் வருவன் என் (று) உரைக்கிலேன் விதி
நின்றது பிடர்பிடித்(து) உந்த நின்றது"

விதியின் விளையாட்டே தவிர, இது வேறு அன்று. இறுதியாகக் கும்பகருணன் போருக்குப் புறப்பட்டு விட்டான்; நிச்சயமாக அழியப் போகிறோம் என்று தெரிந்தும் சுத்த வீரனைப் போலச் சாவை வரவேற்கத் துணிந்து புறப்பட்டு விட்டான். செல்லும்பொழுது இறுதியாக அண்ணனிடம் ஒரு வார்த்தை கூறுகிறான்:

"இற்றைநாள் வரைமுதல் யான்முன் செய்தன
குற்றமும் உளவெனிற் பொறுத்தி கொற்றவ!
அற்றதால், முகத்தினில் விழித்தல் ஆரிய!
பெற்றனன் விடை —(கு. வ : 97)

இத் தகைய அரும் பண்பாடு படைத்த தம்பியை அகங் கார வடிவினனாகிய இராவணன் என்ன கூறிக் கோபிக் கிறான்? அவனுடைய பெருமை எங்கே? இராவணன் சிறுமை எங்கே? அண்ணன் வாழவேண்டும் என்ற கருத் தோடு நல்லவற்றைச் சொல்ல அதற்கு இலங்கையர் கோன் இறுக்கும் விடையைக் காண்க:

"மானுடர் இருவரை வணங்கி மற்றும்அக்
கூனுடைக் குரங்கையும் கும்பிட்டு உய்தொழில்
ஊனுடை உம்பிக்கும் உனக்கு மேகடன்
யானது முடிக்கிலேன் எழுதி போதியால்." —(கு.வ. 92)

என்ன கொடுமை! இராவணன்தான் பேசுகிறானா? வீட ணனையும் கும்பகருணனையும் ஒன்றாக்கி விட்டானே!

துரோகம் என்பதைக் கனவிலும் கருதாத கும்பகருண னுக்கு இதுவா வெகுமதி? நன்று! நன்று! மதியிழந் தான் இலங்கை மன்னன்; இதுவரை நடந்த போரில் நேரிட்ட அழிவு காரணமாக அறிவு மாழ்கி விட்டான். தனனைத் தான் காத்து அறிவை ஒருவழிப் படுத்தும் தன்மையை இழந்துவிட்டுத்தான் பேசி இருக்க வேண்டும. இன்றேல் "இறங்கிய கண் முகிழ்த்து இர வும் எல்லியும் உறங்குதி போய்" என்று மனம் உளையு மாறு கூறுவாரோ? இலங்கை வேந்தன் அவசரத் தில் அமைதியை இழக்கும் பண்புடையான் என்று நினைக்க வேண்டி இருக்கிறது. தன் பிழைக்குத் தானே வருந்துகிருன் இல்லாவிடின் கும்பன் 'பிழை பொறுக்க; சென்று வருகிறேன்' எனறு கூறி விட்டுச் சென்றவுடன் ஏன் கண்ணீர் பெருக்க வேண்டும்?

> "அவ்வழி இராவணன் அனைத்து நாட்டமும்
> செவ்வழிக் குருதிநீ ரொடும் தேக்கினுன்". —(கு. வ. 90)

இன்னும் முற்றிலும் மனத்தைக் கல்லாக்கிக் கொள்ள வில்லை. காரியம் சாதிக்க வேண்டும் என்ற ஒரே முடிபால் சிறிது அவசரப்பட்டுச் சில சொற்கள் கூறிவிட்டானே தவிரத் தம்பி என்ற அன்பு இன்னும் நீங்க வில்லை.

தன் முன்னவன் எதிரே நின்று, இவ்வளவு அற வுரைகள் எடுத்துக் கூறிப் போரை நிறுத்துமாறு வற் புறுத்திய கும்பகருணன், வீடணனைக் களத்தில் கண்ட வுடன் மாறி விடுகிருன். அண்ணன்மாட்டு அவன் கொண்டுள்ள ஆருக் காதலை வெளியிடும் சந்தருப்பம் அப்பொழுதன்ருே வாய்க்கிறது? 'வீடணு! உம்பரும், பிறரும் போற்ற ஒருவன் மூ வுலகை ஆண்டு, தம்பியர் இன்றி மாண்டு கிடப்பனே தமையன் மண் மேல்?' என்று கூறுகையிற்ருன் அத்தகைய அன்பு வெளிப்படுகிறது

கைகளிரண்டும் அறுபட்டுக் களத்தில் கிடக்கையிற் ருன், தான் எவ்வளவு தூரம் இராவணனை அறிந் திருக்கிருன் என்பதை வெளிப்படுத்துகிருன். யாவருந் தொலைதல் உறுதி என்பது பெறப்பட்டுவிட்டது. வீட ணனைவது மிஞ்சவேண்டும என்ற அவாக் கொண்டான்; அவனைக் காப்பாற்றவேண்டும் என்று இராமனிடம் கூறு முகமாக மீண்டும் அண்ணனை நினைக்கிருன். உண்மை யாகவே இராமன் போரில் வெற்றிபெறத் துணையாக நின்றவன் வீடணன். இவன் தனக்கு உட்பகையாக இருக்கிருன் என்பதை இராவணன் நன் கறிவான். வெற்றியை விரும்பும் அவன் இவனைப் போன்ற உட் பகையைச் சகித்துக் கொண்டிருத்தல் இயலா தன்ருே! எனவே இவனைக் காணிற் கொல்வான்.

"தம்பிஎன நினைந் (து) இரங்கித் தவிரான்அத் தகவில்லான்
நம்பி இவன் தன்னைக்காணில் கொல்லும் இறை நல்காறல்."

—(கு. வ: 358)

இங்குத்தான் முதன் முறையாக இராவணனைக் கும்பன் 'தகவிலான்' என்று கூறுகிருன். இதுவரை எத்தனையோ அறவுரைகள் எடுத்துக் கூறியும் அவற்றைக் கேட்கும் மதி அவன்பா லில்லை: தன்னையும தன் குலத்தையும் அழித்துக் கொள்ள முடிவு செய்துவிட்டான், அருமந்த குமரனையும் பலியிடத் தீர்மானித்துவிட்டான்; ஒழிந் தார் எல்லார்க்கும் பிதிர்க்கடன் இயற்றவாவது ஒருவன் வேண்டாமா? எத்துணைத் தவறு செய்யினும் உடன் பிறந் தார்மாட்டு நீங்காத காதலுடையவன் கும்பகருணன், இராவணன், வீடணன் என்ற இருவரும் இரு வேறு முறை களில் தவறு செய்கின்றனர். ஆனாலும் தவற்றை விட்டு அவர்கள்பால் அன்பு செலுத்தும் தன்மையுடையான் கும்பகருணன். ஆனால் இராவணன் அன்பு அவ்வளவு உயர்ந்த தன்று. அன்புடையனுயினும் தன் காரியத்

திற்கு அவர்கள் குறுக்கே நிற்கிறார்கள் எனக் கண்டால் அதனைப் பொறுக்கமாட்டான். இத்துணை அன்புடைய கும்பகருணனையே மனம் உளையுமாறு பேசிவிட்டானல்லவா? இன்னும் உயிரினும் இனிய மேகநாதனைக் கூட அவ்வாறே பேசுகிறானே! ஏன்? தன் கருத்துக்கு மாறாக அறவுரை கூறினமைக்கே அவ்வளவு கடிந்து கொள்வானாகில் முழுப் பகைவன்பால் சென்று சேர்ந்து கொண்டு, அண்ணனுக்குப் பகையாகச் சூழ்ச்சியும் செய்கிற வீடணனைக் கண்டால் சும்மா விடுவானோ! அங்ஙனம் அவனை விடாமற் கொல்லினும் இராவணனைப் பெருந் தவறு செய்தான் என்று கூற வியலாதே! அத் தகைய நிலை நேராதிருக்கவே கும்பகருணன் இராமனிடம் வரம் வேண்டுகிறான்.

எனவே, கும்பகருணன் கண்டும் பேசியும், பழகிய இராவணன் எத் தகையவன், அவன் குண நலங்கள் எத் தகையன, என்பதைக் கண்டோம். இனி அடுத்து அருமை மைந்தனாகிய மேகநாதன் பழகிய இராவணன் எத் தகையவன் என்று காண்போம்.

---

## தூலஞ் செய்த பாவத்தாலே கொடும்பழி தேடிக்கொண்டான்

"வில்லாளரை எண்ணில் விரற்குமுன் னிற்கும் வீரன்"; இதுவே கம்பநாடன் இந்திரசித்தனைக் கூறும் சிறந்த முறை. இந்திரசித்தன் சிறந்த வீரன்; ஆனால், தந்தைக்கு ஏற்ற மகன்; தந்தையை ஒத்த வீரம், வலிமை, திடம் முதலியவற்றையுடையவன்; மேலும் தந்தையின் குணங்கள் பலவற்றையுங் கொண்டவன். அவனது அகங்காரம் தந்தைக்குச் சற்றுங் குறைந்ததன்று. தந்தை செய்த பெருந் தவற்றையே அவனுஞ் செய்

தான். அஃதாவது பகைவரது வன்மையைக் குறைத்து நினைக்கும் தவறாகும். இத் தவற்றை அவன் விரைவில் உணர்ந்தானாயினும் அதனைப் போக்கிக்கொள்ள வகை யில்லாது போயிற்று.

மந்திரப் படலத்தில் இவனும் காட்சி யளிக்கிறான். பகைவர்களைப் பற்றி ஒருவருக்கும் ஆண்டு ஒன்றுந் தெரியாது. வீடணன் ஒருவனே தெரிந்தவன். அவன் தெரிந்துகொண்டிருக்க வேண்டிய இன்றியமையாமையும் இருந்தது. ஏனையோர் அனைவரும், சேனைத் தலைவர் முதல் மேகநாதன் ஈறாக, இராம இலக்குவர்களைக் குறைத்தே மதித்தனர். அளவுக்கு விஞ்சியதும், துன்பத்தை விளைக்க வல்லதுமான தன் னம்பிக்கையால் இத் தவற்றைச் செய்தார்கள். இதுவரை வெற்றியைத் தவிர வேறொன்றும் காணாதவர்க ளாகலின் தங்களைப் பற்றி மிகுதியாக நினைத்துக் கொண்டது இயற்கையே. அறிவு முதிர்ந்த, அனுபவ மிகுந்த சேனாபதிகளும் இன்றும் இத் தவற்றைச் செய்கின்றனர். நம் கண்முன் நடந்த இரண்டாம் உலகப் போரில் இரஷ்யர்களின் வன்மையைக் குறைத்துக் கணக்கிட்ட ஜர்மானியர் பட்ட பாட்டை நாம் அறிவோம். எனவே பகைவனைக் குறைத்து மதித்தலினும் தவறு வேறு ஒன்றும் இல்லை. இந்திரசித்தன் மந்திரப் படலத்தில் கூறுகிறான்:

"யானை இலர் தேர்புரவி யாதுமிலர் எவும்
தானைஇலர் நின்றதவம் ஒன்றுமிலர் தார்ஓர்
கூனன்முது கின்சிறு குரங்குகொடு வெல்வார்
ஆனவரு மானுடர்நம் மாண்மையினி தன்றே!"

—(மந். பட. 63.)

இதனைச் செவி மடுத்த தந்தை இவனது கருத்துத் தவறானது என்று இடித்துக் கூறினானோ? அதுதான் இல்லை.

"பீலிபெய் சாகாடும் அச் (சு) இறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்"

—(குறள் : 475.)

என்ற குறட் கருத்து அவ் வீரர்கட்குத் தோன்றாதது பெரு வியப்பே!

தந்தைமாட்டும், உடன் பிறந்தார்மாட்டும் எல்லையற்ற காதல் உடையனாக விருந்தான் மேகநாதன்; அவ்வன்பின் மிகுதியால் சில சந்தருப்பங்களில் எல்லையற்றும் சென்றிருக்கிறான். அதிகாயன் என்ற அறிய தம்பி இலக்குவன் அம்பால் உயிர் நீத்தான் என்ற செய்தியைத் தந்தையே மைந்தனும் மேகநாதனுக்குக் கூறினான். அந்நிலையில் மேகநாதன் யாது கூறுகிறான்? வருந்தி நிற்கும் தந்தையை மேலும் பழிக்கின்றான்:

"கொன்றார் அவரோ? கொலைசூழ்க என நீ கொடுத்தாய்".

இம்மட்டோடு நிறுத்தினானா? சாம வேதம் பாடிய தந்தையை, 'ஆயிர மறைப்பொருள் உணர்ந்து அறிவமைந்தான்' என்று கும்பகருணனால் புகழப்பட்ட தந்தையை, 'அறிவற்றவனே' என்றும் இழித்துரைக்கிறான். அக்ஷய குமரன் அழிந்தமையை இப்பொழுது மீட்டும் நினைத்துக் கொண்ட இந்திரசித்தன் அவனை ஆராயாது போருக் கனுப்பின தந்தையை ஏசுகிறான்:

"அக்கப் பெயரோனை நிலத்தொ(டு)அரைத் துளானை
விக்கற் பொருதாதுவன் என்றுவிளம்பி விட்டாய்
புக்கத் தலையெய்த நினைந்திலை புந்தியில்லாய்
மக்கள் துணையற்றனை யிற்றதுன் வாழ்க்கைமன்னோ'

—(நாக. படலம், 8.)

இவ்வளவு தூரம் பேசிய மைந்தனைத் தந்தை ஒன்றும் தண்டித்தானில்லை. அதுவே இராவணன் மாட்டுக் காணப்படுகிற பெருந் தன்மை. மைந்தன் இழித்துரைத்

தலில் அவன் தன் கருத்தைச் செலுத்தவில்லை. அங்ஙனம் கூறக் காரணமாயிருந்த அவன் சோதர அன்பை நினைந்து வாளா இருந்துவிட்டான் போலும்!

அடுத்தபடியாகத் தந்தையும் மைந்தனும் சந்திக்கின்ற நிலை, மேகநாதன் நாக பாசத்தால் இலக்குவன் உள்ளிட்ட அனைவரையும் அழித்து மீண்டு வந்த நிலையாகும். போரில் ஏற்பட்ட களைப்பால் மேகநாதன் தனது அரண்மனை வந்து இளைப்பாறுகிறான். இதற்குள் கருடனது வரவால் நாக பாச மயக்கத்திலிருந்து வானர சேனையும் இலக்குவனும் விடுபட்டனர். உயிர் பெற்றெழுந்த வானர சேனை செய்த ஆரவாரம் இராவணன் மனத்தைக் குழப்பிவிட்டது. உடனே எழுந்து அவன் இந்திரசித்தன் அரண்மனைக்கு வந்துவிட்டான். அருமை மைந்தன் தன் தந்தையை அந்நேரத்தில் கண்டு, எழுந்து அடி வணங்கல் ஆற்றாறுய், இரு கையாலும் வணங்கிப் பிறகு, போரைப் பற்றிய தனது கருத்தைத் தெரிவிக்கிறான்: "இன்னும் யான் அப் போர்க் களமாயையினின்றும் நீங்கவில்லை; இந்திரன் திருமால் முதலியவர்களோடு போர் செய்யும்பொழுதுங்கூட நொந்திலன்; இனையது ஒன்றும் நுவன்றிலென்; மனிசன்; நோன்மை, மந்திரம் அனைய தோளாய்! வரம்புடைத்தன்று மன்னே" என்று அவன் கூறினான் இலக்குவன் தன்மை இத் தகையது. அவனே அழிந்துவிட்டான். இனி எஞ்சி இருக்கும் இராமனை வென்று போரில் வெற்றி காணலாம் என்று சொல்வதற்கில்லை. போரின் முடிவிலேயே அதனை அறிய முடியும்" என்றுகூறி முடித்தான்.

இந் நிலையில் இலக்குவன் முதலானவர் எழுந்த செய்தியையும், தான் இலக்குவன் வில்லின் நாணொலியைக் காதாற் கேட்டமையையும் இராவணன் கூறினன்

இந்திரசித்தன் அதனை நம்ப மறுத்து 'இஃது' உண்மையோ? உண்மையாயின் 'தெய்வஞ் சிறிதன்றோ'? என்று கூறினான். இவ்வளவில் போர்க்களஞ் சென்ற ஒற்றர்கள் மீண்டு வந்து நடந்தவற்றைக் கூறினர். அது கேட்ட இந்திரசித்தன் ஒன்றுமே கூறவில்லை; வாய் பேச வியலாது நின்றுவிட்டான். எதிரே நிற்கும் இராவணனும் இராவணனைப் பேசவில்லை. ஒரு சாதாரண மனிதன் தன் செயல் ஒடுங்கிய நிலையில் எவ்வாறு பேசுவானோ அவ்வாறே பேசினான். இராவணன் பேச்சைவிட மேகநாதன் அமைதியே சிறந்தது. தான் சிறிதும் எதிர்பாராத முறையில் திடீரென்று நிகழ்ந்த இச் செயலால் மேகநாதன் பேச் சற்று விட்டான். சிறந்த வீரனாதலின் அது குறித்துப் புலம்ப வில்லை. தான் பெரிதென மதித்த படைக்கலம் பழுதடைந்தமையான், பகைவர்மாட்டுக் கொண்டிருந்த மதிப்பே உயர்ந்தது. ஆனால் இராவணன் கூறிய சொற்கள் அவனுக்கே மதிப்பைத் தருவனவாக வில்லை.

தூதுவன் மீண்டு வந்து கருடனது உதவியால் நாக பாசம் வன்மை இழந்தது என்ற உண்மையை இருவரும் இருக்கும் பொழுதுதான் கூறினன். ஆனால் இராவணன் யாது கூறுகிறான்? இன்னும் தன் பகைவர் எத் தகையவர் என்று அவன் அறிந்து கொள்ளவில்லை. அதனை அறிந்துகொள்ள முயலவுமில்லை. மேகநாதன் எய்த நாக பாசத்தை நீக்கக் கலுழன் வந்தது இராம இலக்குவரது தவம் முதலிய வலிவால் என்று உணரவில்லை. அறிவுடையவன் அங்ஙன மன்றோ நினைத்திருக்க வேண்டும். கலுழன் தன்னையும், தன் மதிப்பையும் சட்டை செய்யாது இலக்குவன் உதவிக்கு வரவேண்டுமே யானால் இலக்குவன் எத் தகையவனாக இருக்கவேண்டும் என்று நினைக்கவில்லை. அதற்குப் பதிலாகக் கலுழனை இழித்துப்

பேசுகிறான், வன்மை யற்ற ஒருவன், எய்தவன் இருக்க அம்பை நோவது போல் இராவணன் கலுழனை இழித்துப் பேசுகிறான். அங்ஙனர் பேசுகையிலும் வெறுப்போடு கலந்த நகைச் சுவை இருக்கப் பேசுகிறான்;

"ஏற்றநந் தடந்தோள் ஆற்றல் என்மகன் எய்த பாசம
காற்றிடைக் கழித்துத் தீர்ந்தான் கலுழனும் காண்மின் காண்மின்
வார்த்தை ஈதாயின் நன்றால் இராவணன் வாழ்ந்த வாழ்க்கை
மூத்தது கொள்கை போலாம் என்னுடை முயற்சி எல்லாம்

—(நாக. பட. 296)

இப் பாடலில் இராவணன் வழக்கமாகப் பேசும் பெருமிதத்திற்குப் பதிலாக ஆழமான அவலச் சுவை இருப்பதைக் காணலாம். மேகநாதன்மாட்டு அவன் அளவற்ற நம்பிக்கை கொண்டிருந்தான். அவ் வரிய வீரனது சிறந்த படைக்கலம் பயனற்றுப் போயினமையாலும், மேகநாதனே பகைவர்களது வன்மையைப் பற்றிப் பேசிய பேச்சுக்களாலும் ஒரு சிறிது போரின் முடிவைப் பற்றி இராவணன் கொண்டிருந்த நம்பிக்கை தளர்ந்து விட்டது. அத் தளர்ச்சி இன்னும் முற்றிலும் வெளிப்படவில்லை. அறிவுடைய ஒருவன் தன் னுணர்ச்சிகளை அடக்கி ஆளுவதுபோல இவனும் தனது ஆழ்ந்த வருத்தத்தை மறைத்துக் "கழித்துத் தீர்த்தான் கலுழனும் காண்மின் காண்மின்" என்று கூறி ஓரளவு அவ் வருத்தத்தை நகையாக மாற்றிவிடுகிறான்; அடுத்துச் சிறிது இந் நிலையிலிருந்து தாழ்ந்து விடுகிறான். திருமாலை யான் துரத்திய பொழுதும், அவன்

"மண்டிலந் திரிந்தபோதும் மறிகடன் மறைந்தபோதும்
கண்டிலன் போலுஞ்சொற்ற கலுழன் அன்(று)என்னை கண்ணால

—(நாக. பட 297)

என்று இவ்வாறு கூறிக் கலுழனை எள்ளுமுகமாகத் தனது மன நிலையை வெளிப்படுத்துகிறான்.

இனிப் பிரமாத்திரப் படலத்தில் தந்தையும் மைந்தனும் சந்திக்கின்றனர். போரில் தான் பட்ட பரிவபவமெல்லாங் கூறி மேகநாதன், இலக்குவன், பிரமாத்திரம் தொடுக்க முயன்றமையும், இராமன் அதனைத் தடுத்தமையுங் கூறி என்னினிச் செய்வதென்றான். இராவணன் திகைத்தான். இந் நிலை இராவணற்கு எய்தல் எளிதன்று. அத் திகைப்பு அவனது அறிவையும் மயக்கி விட்டதை அறிகிறோம். மேல் என்ன செய்யவேண்டும் என்று அறியாது தவித்தான் மன்னன். இதன் பிறகு பிரமாத்திரப் பிரயோகத்தால் இராமன் நீங்க அனைவரும் மாள்கின்றனர். மீண்டும் தந்தையைக் கண்டு தனயன் தன் வெற்றியைப் புகன்றான். இப் பொழுது இராவணன் தனிப்பட்ட காட்சி நல்குகிறான். இத் துணை அரும்பெருஞ் செயலைச் செய்த மைந்தனைத் தழுவினானில்லை; அவன் செயற்கு மகிழ்ந்தானில்லை; இதற்கு மாறாக வருத்தமே கொண்டான். அவன் வருத்தமெலாம் ஒரு வினா வடிவாக வெளிப்பட்டது :

"இறந்திலன் கொல் அவ்விரா மனென்று இராவணன்
இசைத்தான்".

இந் நிலையில் தந்தையைக்களிப்பூட்ட வேண்டித் தனயன் சந்தருப்பத்திற் கேற்ற விடை யொன்று கூறினான். "அவன் எங்கோ மறைந்தும்டான். அன்றேல் தம்பியும் நண்பரும் பட்டு வீயப்பேர்த்துக் கொண்டு வாளா இருந்திருப்பானோ?" என்று கூறினான். இவ்விடையைச் சிறந்ததாக எடுத்துக் கொண்டு அமைதியடைந்தானிராவணன் என்றால், அவன் மனநிலை அடைந்த தாழ்மையை யார் எடுத்துக் கூறமுடியும்? எளிய அறிவுடைய ஒருவனும் இக் காரணம் பொருத்த மற்றது என்பதை அறிதல் கூடும். ஆனால் நோய் முற்றி நம்பிக்கை யிழந்த பிறகு யார் என்ன கூறினாலும் இதில் உண்மையிருக்கலாம், உயிரும்

பிழைக்கலாம் என்ற மகிழுதல் உயிரியற்கை. அம் முறையிலேயே இராவணன் வெற்றியில் நம்பிக்கை இழந்து நிற்கும் இப்பொழுது இக் காரணத்தையும் நம் பும்நிலைமை அடைந்து விட்டான்.

இராவணன் இந் நிலையை அடைந்து விட்டான் என்பதற்கு அவன் அடுத்துச் சொல்லும் சொற்களும் எடுத்துக் காட்டாகும். தூதுவர் களத்தினின்று மீண்டு வந்து எல்லாரும் பட்ட திறத்தையும் இராகவன் தன் தம்பியின் உடலத்தைத் தாங்கி அழும் திறத்தையும் எடுத்துக் கூறினர். இந் நிலையில் வீரமுடைய எவனும் செய்யத் துணியாத செயலை இராவணன் செய்கிருன். அவனுக்கே இது நடைபெறக் கூடியதா வென்ற ஐயம் தோன்று கிறது. "பொய்யார் தூதர் என்பதனுல் பொங்கி எழுந்த உவகையனாய்" அவன் காட்சியளிக்கிருன். இதுவரைச் செய்யப்பட்டது போர். இரு தரப்பினரும் பற்பல வழிகளைக் கையாண்டு வெற்றிபெற முயன்றனர். இராவணன் கருத்துப்படி பகைவர் சிந்தினர்; வெற்றி கிட்டியது. ஆனலும் அவன் மனத்தில் அமைதி இல்லை. பழி வாங்குதல் என்ற தாழ்ந்த குணம் தலைகாட்டு கிறது. தன்னுல் விரும்பப் படுகிற காதலி வருத்த மடைய எவனும் சகியான். அங்ஙனம் அவள் வருந்து வதைக் காணக் கூடச் சகியாத ஒருவன் அவளுக்கு வருத்தத்தைத் தானே உண்டாக்குகிருன் என்ருல் இது நம்பற்குரியதோ? அவ்வாறு ஒருவன் செய்வானுயின் அவனது காதல் சிறந்த தன்று. அது கீழ்த்தரமான காம வெறி என்றே கொள்ளவேண்டும். பிறன் மனை யென்பதொருபுற மிருக்க அவள் மேலாவது உண்மைக் காதல் கொண்டிருந்தனா இராவணன். அவன் செய்த செயல்கள் இல்லை என்று முரசறைகின்றன. மிகத் தாழ்ந்த வெறியே கொண்டிருந்தான் என்ற முடிவுக்கே

வரவேண்டி இருக்கிறது எவ்வளவு பகைவர்களாயி னும், தன்னோடு ஒத்த வன்மையுடையார் அழிந்தாராக, ஒருவரு மற்ற களத்தில் தலையன் தம்பியின் உடலைத் தழுவிக் கொண்டு அழுகிறானாக, அக் காட்சியை ஒரு பெண்ணைச் சென்று காணுமாறு ஏவுகிறவன் எவ்வளவு தாழ்ந்த மனப் பான்மையுடையனாக இருத்தல் வேண் டும்? அதிலும் காண வேண்டியவளின் கொழுநன் அழுகிறவனாகவும், மைத்துனன் இறந்தவனாகவும் இருக்க, அதனைச் சென்று அவன் காணவேண்டு மென்று ஏவு வது மிக விழிந்த செயலே. அம் மட்டோ? அவளும் விரோதியாகவே இருப்பின் வெறுப்பால் விளைந்தது என் றேனும் கூறலாம். அவளை விரும்புகின்றதாகக் கூறிக் கொள்ளும் ஒருவன் இது செய்யத் துணியின் அவன் மன நிலை எவ்வளவு பழுது பட்டிருக்க வேண்டும்? தன் னாலேயே இவ்வளவு வீரருமமாய்ந்தனர் என்ற எண் ணம் அவள் மனத்தில் உதித்தால் எத்துணை வருத்தம் உறுவாள்? அஃதொரு புறமிருக்க, இந் நினைவால் இறந் தவர்கள்மீது அன்பு மிகுமே தவிர அவர்கள அழிவுக் குக் காரணமானவன்மீது அவளுக்கு மன மாறுதல் ஏற்படும் என்று நினைத்த இலங்கையர் கோன் அறிவை என் னென்பது? அவன் கலங்கி விட்டான் என்பதற்கும், வெறுப்புக்கும், பகைமைக்கும் மனத்தில் இடந் தந்து விட்டான் என்பதற்கும் வேறு என்ன சான்று வேண்டும்?

இந்திரசித்தன் தன் தந்தைபாற் கொண்டுள்ள அன்பும், இராவணன் தன் தனயன்பாற் கொண்டுள்ள அன்பும் மிகச் சிறந்தவாகும். இருவரும் ஒருவரை ஒருவர் காணு வழியே அவை வெளிப்படுந் தன்மையுடையன. உண்மையன்பின் திறம் அஃதேயன்றோ!

நிகும்பலை யாகம் வீணானமையும், தான் விட்ட படைக் கலங்கள் அனைத்தும் பயனற்றுப் போனமையும் கண்டு, இவற்றிற் கெல்லாம் காரணம் தன் சிற்றப்பனே என மேகநாதன் நினைத்தான். உடனே தன் தந்தையின் நினைவு எழுகிறது.

தந்தையை ஏமாற்றிவிட்டான் சிறிய தந்தை என அவன் உன்னுகிறான்; அச் செயலின் சிறுமையை எண்ணி வருந்துகிறான். எள்ளலோடு கூடிய நகை பிறக்கிறது. எதிரே காணப்படுகிறான் வீடணன். வீடணன் சென்றது அரசைக் கருதியே என்பதைத் தான் நன்கறிவானாகலின், மனம் மறுகி அரக்கர் அனைவரும் மாய்ந்த பின்றை "ஆருளர் அரக்கர் நிற்பர் அரசு வீற் றிருக்க ஐயா" என்று கேட்கிறான். உடனே தன் தந்தையின் பெருமை நினைவுக்கு வருகிறது.

"முந்தைநாள் உலகந் தந்த முந்தையோர் முதற்கட் கெல்லாம்
தந்தையார் தந்தை யாரைச் செருவிடைச் சாயத் தள்ளிக்
கந்தனார் தந்தை யாரைக் கயிலையோ(டு) ஒருகைக் கொண்ட
எந்தையார் அரசுசெய்வ(து) இப்பெரும் பலங்கொண் டேயோ"?

—(நிகும். பட. 165)

"மன்னிரக் கடிமை யாய்நீ இராவணன் செல்வ மாள்வாய்
இனியுனக் கென்னே மானம் எங்களோ(டு) அடங்கிற் றன்றே."

—( ,, 166)

தன் தந்தை இறப்பது தவறாது என்ற எண்ணம் முன்னமே இந்திரசித்தற்குத் தோன்றிவிட்டது. தந்தை வேண்டுமானால் தன் தவற்றைத் திருத்திக் கொள்ள லாமே தவிர, அவனுக்கு விரோதமாகத் தான் ஒன்றும்

செய்தலாகாது என்னும் உறுதி பூண்டவனாகலின் மீண்டும் வீடணனை அவன் நோக்குகிறான்; நோக்குந்தோறும், தவறு செய்தவனாகிய தன் தந்தையின் பெருமையையும், வீடணன் சிறுமையையும் ஒப்பு நோக்குகிறான். அறங் காரணமாகத் தவறு செய்த தமையனை விட்டுத் தம்பி பிரிந்ததைக்கூட மேகநாதன் பாராட்டவில்லை. ஆனால், தன் குலம் முழுவதற்கும் தீங்கு செய்த பகைவர் யாராயினுஞ் சரி, அவர்களோடு சேர்ந்துகொண்டு, தன் குலத்தையே அழிக்க வழிதேடிய தகைமையை அவனால் பொறுக்க கூடவில்லை. 'அண்ணன் தவற்றை வெறுத்தாயின், இன்றுதானா அண்ணன் தவறு செய்ய முனைந்தான்? தேவரைச் சிறையிட்ட காலந்தொட்டே அண்ணனிற் பிரிந்திருக்கலாமே? ஒரு வேளை தற்பொழுதே பிரியினும் தனியே நின்றிருக்கலாமே? அறமுடையார் பக்கம் வெற்றி தானே சென்று எய்துமாறு இருந்திருக்கலாமே? அவ்வாறெல்லாஞ் செய்யாது இராவணன் குலத்தின் தீராப் பகைவரோடு சேர்ந்து, அவன் குலம் அழிவதற்கு வேண்டிய வழிகள், உபாயங்கள் அனைத்தையும் கூறி, அவன் குலம் வேர் அறுமாறு செய்தது எவ் வறத்தைக் கருதியோ" என்று கேட்கிறான் மேகநாதன். எங்கள் குலத்தையெல்லாம்,

> "கொல்வித்துந் தோன்றிநின்ற கூற்றினர் குலத்தை யெல்லாம்
> வெல்வித்தும் வாழும் வாழ்வுன் பெருமையே விழுமிதன்றே",
>
> —(நிகும். பட. 167)

என்று கூறி, இன்னும் வீடணன் நிலை எத் தகையதாயிற்று என வருந்துகிறான். தந்தை இறக்கும்பொழுது தானிருந்து பார்த்தறிகில்லை. ஆதலால், 'என் செயத் துணிந்தாய், சிறிய தந்தையே!' என வினவுகிறான்.

"எழுதியோர் அணிந்த திண்தோள் இராவணன் இராம னம்பால்
புழுதியே பாய லாகப் புரண்டநாள் புரண்டு மேல்வீழ்ந்(து)
அழுதியோ நீயுங்கூட ஆர்த்தியோ இவனைவாழ்த்தித்
தொழுதியோ யாதோ செய்யத் துணிந்தனை விசயத்
தோளாய்."

—(நிகும். பட. 168)

'விசயத்தோளாய்' என்ற சொல்லில்தான் எத்துணை எள்ளற் குறிப்பை வைத்துப் பேசுகிறான்! இறுதியாகத் தான் மடியினும் தந்தைக்குக் கேடு வராமற் காக்கச் சிற்றப்பனையே ஒழித்து விடலாமா வென நினைக்கிறான். ஆனாலும் அவன் குலம் பழியை வெறுப்பதாகலின், அச் செயல் செய்ய இலேசில் மனந் துணியவில்லை.

"வானிடைப் புகுதி யன்றே யான்பழி மறுக்கில்"

—(,, 169)

என்று கூறி முடித்திட்டான்.

இத் துணைத் தூரம் உண்மையறிந்த இந்திரசித்தன், மேற்கூறிய செயல் நடந்த சில நேரத்திற் கெல்லாம் தந்தையிடஞ் சென்று போரை நிறுத்த வேண்டுகிறான். அங்கும் அவன் தந்தைபாற் கொண்ட அன்பும், மதிப்புமே வெளியாகின்றன. அம்பிட்டுத் துன்னங் கொண்ட புண்ணுடை நெஞ்சோடும், உடலோடும் தந்தை முன் காட்சி யளிக்கிறான் வீரன். தந்தை மனம் நீராய் உருகுகிறது. "ஐயனே! நீ வேள்வியைமுடிக்கவில்லை, என்பதை உன்னைக் காணும் போதே அறிகிறேன்;

"........அழிவில் யாக்கை
நடுங்கினை போலச் சாலத் தளர்ந்தனை கலுழன் நன்னப்
படங்குறை அரவம் ஒத்தாய் யுற்றது பகர்தி"

(இந். வதை. 2)

என்று உசாவினான்.

தந்தையே! உன் தம்பியாகிய வீடணன் சூழ்ச்சியால், இளையோன் வேள்வியை அழித்துத் தாழ்விலாப் படைகள் மூன்றையும் பயனற்றவையாக ஆக்கி விட்டான். யான் விட்ட மூன்று படைகளும் இலக்குவனை வலஞ் செய்து போவனவானால் அவனை யாரென்று மதிப்பது?

"குலஞ்செய்த பாவத்தாலே கொடும்பழி தேடிக்கொண்டோம்" என்று கூறினான் மேலும்! "உலகம் அழியு மென்று அஞ்சிப் பிரமாத்திரத்தை அவர்கள் பயன்படுத்தவில்லை யாதலால் உயிர் பிழைத்து நின்பால் வந்தேன்' என்றான; உடனே தந்தை என்ன நினைப்பானோ என வருந்தினான்; எனவே தான் வந்த கருத்து முழுமையும் விரைவாகக் கூறிவிட்டான். முதலாவதாகத் தன்னைக் கோழை யென்று தந்தை எங்கே நினைத்து விடுவானோ வென்று மறுகி,

"ஆதலான் அஞ்சி னேன்என்(று) அருளலை ஆசை தான்அச்
சீதைபால் விடுதி யாயில் அனையவர் சீற்றந் தீர்வர்
போதலும் புரிவர் செய்த தீமையும் பொறுப்பர் உன்மேல்
காதலால் உரைத்தேன் என்றான் உலகெலாம் கலக்கி வென்றான்

(இ.வ. 6)

இத் தகைய அறவுரையை இராவணனுக் கீந்தவர் மூவர். மூவரும், அவன் செய்த தவற்றை நன்கு அறிவர். மூவரும்,குலத்துக்கு வரும் பழியை உணர்ந்தவர். மூவரும், புகழையே பெரிதும் விரும்புபவர். மூவரும், இராவணன் நலத்தில் கருத்துடையவர். ஆனாலும், என்ன வேற்றுமை! இருவர் மேற்கொண்ட வழி ஒன்று. ஒருவர் மேற்கொண்ட வழி ஒன்று. கும்பகருணனும், மைந்தன் மேகநாதனும் மேற்கூறிய அனைத்தையும் அறிவர். ஆனால் இறுதியாக, மேற்கொண்ட கடமையை நிறைவேற்ற வேண்டும் என்ற ஒரே எண்ணமே அவர்களை உந்திற்று.

"கருத்திலா இறைவன்தீமை கருதினால் அதனைக்காத்துத்
திருத்திலா மாகில் நன்று திருத்துதல் தீராதாயின்
பொருத்துறு பொருள்உண் டாமோபொருத்தொழிற் குரியராகி
ஒருத்தரின் முன்னஞ்சாதல் உண்டவர்க் குரியதம்மா"

இங்ஙனம் கூறினவன் கும்பன். இறுதியாக அவனும் இராவணனுக்கு வேண்டுமான அளவு நீதி வழங்கினான். வெற்றி யில்லை என்பதைப் பலவழியிலும் எடுத்துக் காட்டினான். ஆனால், தமையன் தன் வழியிலிருந்து நீங்கு வதாயில்லை, என்றால் முடிவென்ன? முன்னஞ் சாதலே உறுதி எனத் துணிந்து சென்றான் கும்பன். மந்திரா லோசனை நடக்கும் பொழுதே உண்மை உணர்ந்தான் கும்பகருணன். ஆனால் தானே பொருது தோற்கும்வரை மேகநாதனுக் குண்மை விளங்கவில்லை. ஒருவாறு உண்மை தெரிந்ததும் மிக்க மனத் துணிவோடு தந்தைபாற் சென்று உண்மையைக் கூறுகிறான். ஒரு வேளை இதனைக் கேட்பவர், மேகநாதன் போருக்கஞ்சி இங்ஙனம் செய் தானோ வென்று தவறாக நினைத்து விடுவார்களே என்று நினைந்த ஆசிரியர் "உலகெலாங் கலக்கி வென்றான்" என்று அவனுக்கு அடைமொழி தருகின்றார். இப்பொழுது தந்தைபாற் கொண்ட காதலால் இச் செயலை மேற் கொண்டான் மைந்தன். இதனைக் கேட்ட இராவணன் மயங்கி, அகங்கார வடிவினனாய் விடை யிறுத்தான். மைந்தன் மேற்கொண்ட பாசத்தினும் கோபமே விஞ் சியது; வெறுப்பே மிகுந்தது. "நீ சென்று இளைப் பாறுக. யான் சென்று தருகின்றேன் வெற்றி" என்று புறப்பட்டான.

இந் நிலையில், மைந்தன் தன்மை,கண்டு வியக்கத் தக்க தாய் விடுகிறது. தவறுடையவன் என்று கண்ட விடத் தும், தந்தை மாட்டுக் கொண்ட காதல் வெளிப் படுகிறது. எழுந்த இராவணனை வணங்கி, "எந்தாய்! பொறுத்தி!

கோபம் தணிக! யானே போருக்குச் செல்கிறேன். யான் "கழிந்தனன் என்ற பின்னர் நல்லவாக் காண்' என்று கூறிப் புறப்பட்டு விட்டான். வேண்டுமென் றிரந்தவர் அனைவர்க்கும் தானம் வழங்கிப் புறப்பட்டுப் போகிறான். கொடியோன் அவனைக் கடைக் கண்ணால் நோக்கி நோக்கி இருகணீர் கலுழப் போகிறான். வீரர் அனைவரும் அவனுக்குத் துணையாகப் புறப்பட்டனர். ஆனால் வீரன்

''வலங்கொடு தொடர்ந்தார் தம்மை மன்னனைக் காமின் யாதும்
கலங்கலிர் இனிமேற்சென்று மனிசரைக் கடப்பல் ''

(இந்திர. வதை. 16)

என்று கூறிச் சென்றுவிட்டான்."

இது வரைக் கூறியவற்றான், இந்திர சித்தன் கண்ட இலங்கை வேந்தன் பண்புகள், எத் தகைய வெனபதும், அவன் சுற்றத்தார் மாட்டு அன்பு பூண்டவன் என்பதும், கொண்டது விடாத கொடியன் என்பதும், தன் கருத்து முற்றுப்பெற எதனையும் செய்யத் தயங்கான் என்பதும் மனத்தளர்வை அடிக்கடி பொறுகிறான் என்பதும் வெளிப்படுகிற உண்மைகளாகும்.



# இந்திரப் பெரும்பதம் இழந்தான்

இலங்கை வேந்தன் உடன்பிறந்தான் விடணன் என்பது யாவரும் அறிந்ததே. மந்திரப் படலத்தில் இராவணனுக்கு உறுதி கூறிய சிலருள் இவனும் ஒருவன். ஆனால், மற்றை யோரினும் மாறுபட்ட முறையில் இவனது உறுதி மொழி இருக்கிறது.

வீடணன் இராவணனைப் பற்றிக் கொண்ட கருத்துக்கள் பல விடங்களிலும் கூறப்படினும், சிறப்பாக

இலங்கை கேள்விப் படலத்திலேயே கூறப்படுகிறது. இராமனுக்கு இராவணன்திறத்தை எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ள பகுதியாகும் இது. 'மூவரிற் பெற்ற வரத் தொடும் உயர்ந்தான்' என்று வீடணன் தமையனைக் குறிக்கிறான்; மேலும் வெள்ளியம் பெருந்தடங்கிரியை வேரொடும் வாங்கி, உலகெலாம் அஞ்ச, அள்ளி விண் தொட எடுத்தனன் என்றுங் கூறுகிறான். இன்னும் திசையானைகளின் கொம்புகள் மார்பிற் பட்டு அழுந்த அவற்றை ஒடித்து உள்ளேயே இற்ற கொம்புகள் இருக் குமாறு செய்தவன் என்றுங் கூறப்படுகிறான். கால கேயரை இராவணன் வென்றபின்னர், இலங்கை வேந் தன் என்ற ஒலியைக் கேட்ட அளவிலேயே தானவர் தேவியர் கர்ப்பமுங் கலங்குவர். அளகாபுரியில் ஒளித் துக் கொண்டு வாழ்ந்த குபேரன், திரண்ட தனது செல் வத்தையும் ஏனைய போகங்களையுந் துறந்து ஓடிப்போ னான். எல்லாருடைய உயிரையும் வௌவுவதால் அறக் கடவுள் என்று பெயர் பெற்ற இயமனும் தன் வலியடங் கினான் என்னில் வேறு கூறுவதென்னுளது? இருளைப் போக்குதற் குரியவன் என்று எல்லாராலும் போற்றப் படுகிற அருணனும் இலங்கையின் வனப்பைக் கண்டா னில்லை; வருணனும் கடல் நீருள் மறைந்தமையின் இரா வணனிடம் சிக்காது பிழைத்தான். இவ்வாறு தமைய னது பெருமையை எடுத்துக் கூறிவந்த வீடணன் இறுதியாக ஒன்று கூறினான். 'அண்ணலே! என்ன கூறப்போகிறேன்? மலைகள் அழியினும் அழியாத தோள்வலியையுடைய இராவணன் இன்றழியினும், நாளை அழியினும், சிலகாலஞ் சென்றழியினும், உன்னை யல்லால் பிறரால் அழிக்கப் படான்' என்று கூறுகிறான்.

"என்றுலப்புறச் சொல்லுகேன் இராவணன் என்னும்
குன்றுலப்பினும் உலப்பிலாத் தோளினுள் கொற்றம்
இன்றுலப்பினும் நாளையே உலப்பினுஞ் சிலநாள்
சென்றுலப்பினும் நினைக்கன்றிப் பிறர்க்கென்றுந் தீரான்"

—(இல. கே. 60)

இவ்வொரு பாடலில், ஏறத்தாழ இராவணன் பெருமை முழுதும் கூறப்படுகிறது. குன்றுலப்பினும் உலப் பிலாத் தோளினுன் என்று கூறுவதால் அவனது புய வலிமை கூறப்படுகிறது. நினைக் கன்றிப் பிறர்க் கென்றுந் தீரான் என்று கூறுவதால் புயவலிமட்டுமில்லாமல், தவவலியும் உடையான் என்பதும் அறியக்கிடக்கிறது. இராவணன் இத் தகைய வலி படைத்தவன் என்பதைக் கூறச் சிலருக்கே உரிமை உண்டு. அவருள் முக்கியமானவன் வீடணன். அவனும் இதனை இப் பொழுது கூறுவது சாலச் சிறந்தது. இராவணனிடம் இருக்கும் பொழுது இதனைக் கூறி இருப்பின், அது வெறும் புகழ்ச்சியாய் முடிந்திருக்கும். எனவே, அவனை விட்டுப் பிரிந்த பின்னர்க் கூறியதே சிறப்புடையது. மேலும் இராவணனுக்கு விரோதியும், பகைவனும் ஆன இராமனிடம் சேர்ந்த பிறகு இதனைக் கூறியது, அதுவும், அவ்விராமனிடம் நேரே கூறியது, சாலச் சிறந்தது. இதனால் இராவணன்மாட்டு வீடணன் கொண்டிருந்த அச்சம் வெளியாகிறது. இங்ஙனம் விவரமாக இராவணனைப் பற்றி வீடணன் கூறுவதற்கு ஒரு காரணமும் உண்டு. வீடணன் நல்ல அரசியல் ஞானமும் வருவ துணரும் ஆற்றலும் உடையவன்; தமையனிடத்தில் ஒரு பெருங் குறையைக் கண்டான். பகைவனை உள்ளபடி மதியாது அவனது ஆற்றலைக் குறைத்து மதிக்கும் குறையே அது. அதனைப் பன்முறை வீடணன் எடுத்துக் கூறியும் இராவணன் பொருட்படுத்தவில்லை. அதனால் வீடணன் அதே தவற்றை

இராமன் செய்துவிடக் கூடாது என்று கருதி மீண்டும் மீண்டும் இராவணன் பெருமையை வற்புறுத்துகிறான். வீடணன் தன் தலையை வைத்துப் பந்தயம் ஆடிவிட்டான். இனி ஒரு வேளை இராமன் தோற்பானாயின், அத் தோல்வியால், இராமன் அடையும் நஷ்டத்தைவிட வீடணனே அதிகத் துன்பம் அடைகிறவன். இராமன் தோற்பின், சீதையை மட்டிலும் இழப்பான். ஆனால் அவனோடு சேர்ந்த வீடணனோ வெனில், உயிர், குடி முதலிய அனைத்தையும் இழக்க நேரிடும். எனவே இராமன் வெற்றியில், அவனை விட அதிகம் கவலை காட்டுபவனாக வீடணன் ஆகிவிடுகிறான். இதுவே அவனுடைய ஆத்திரத்திற்கு அடிப்படைக் காரணம். இராவணனைப் பற்றி இங்ஙனம் பலபடியாகப் புகழுவதற்கும் காரணம் இதுவே. அவனை வெறுத்துத் தன்பால் அடைக்கலம் என்று வந்து விட்ட வீடணனே இங்ஙனம் இராவணனைப் பற்றிக் கூறுவானாயின், இராகவன் தன் பகைவனை நன்கு அறிந்து கொள்ள இயலும் அல்லவா ? அங்ஙனம் அறிந்துகொண்டமையின் ஒரு வேளை எங்கே அச்சத்தால் போரை நிறுத்தி விடுவானோ என்று நினைத்துப் போலும் உடனேயே வேறு ஒரு கருத்தையும் வீடணன் கூறிவிடுகிறான். அனுமனுடைய திறமையையும், அவன் இலங்கையில் செய்த அருஞ் செயலையும் இராகவன் முன்னமே அறிந்திருப்பினும் மீண்டும் அதனை வீடணன் கூறுகிறான். தனது துணை வலியையும் இராமன் உணர்ந்து மனத்துள் தைரியங் கொள்ளவேண்டும் எனபதற்காகவே இக் கருத்து மீண்டுங் கூறப்படுகிறது.

அடுத்து நாம் வீடணனைக் காண்டற்குரிய இடம் இராவணன் மந்திரப் படலமாகும். வானரம் இலங்கையை எரியூட்டிச் சென்ற பின்னர் இராவணன்

மந்திராலோசனை சபை கூட்டுகிருன். பகையைப் பற்றி அவரவர் கருத்தை அவரவர் தாராளமாக வெளியிடும் நேரம் அது. அந் நேரத்தில் வீடணனும் தன் கருத்தை வெளியிடுகிருன்.

ஏனையோர் கூற்றினும் வீடணன் கூற்று மாறு பட்டிருப்பதற் கேற்பவே அவன் சொற்களும் மாறு பட்டுள்ளன. ஏனையோர் அவை யடக்கம் ஒன்றுமில்லாது கூறத் தொடங்க, வீடணன்மட்டும் பெரிய தொரு அவையடக்கத்துடன் தொடங்குகிருன். எந்தை நீ, எம்முனீ, தவ வந்தனைத் தெய்வம் நீ, மற்றும் முற்றும் நீ, என்று தொடங்கி, தான் மாறுபட்டுக் கூறவேண்டியதன் இன்றியமையாமையைக் கூறுகிருன். "இந்திரப் பெரும் பதம் இழக்கின்ருய் என நொந்தனன் ஆகலின் நுவல்வ(து) ஆயினேன்" என்றதால் இராவணன் செல்வத்தை வீடணன் பெரிதும் மதித்தான் என்பது தெற்றெனை விளங்கும். ஒருவாறு தமையன் மாட்டு அன்பும் கொண்டிருந்தானென்பதும் நன்கு விளங்குகிறது. இம்மட்டோடு தன் கருத்தை வெளியிடத் தொடங்காது, தான் தகுதியற்றவன் என்றும், அவ்வாருயினும் தனது உரையைத் தள்ளாது கேட்க வேண்டுமென்றும் கூறுகிருன்.

"கற்றுறு மாட்சியென் கண் இன்(று) ஆயினும்
முற்றுறக் கேட்டபின் முனிதி மொய்ம்பினேய்"

எனவே, தனது சொற்கள் இராவணனுக்குச் சினத்தை உண்டாக்கு மென்பதை வீடணன் நன்கு அறிந்திருந்தான் என்பது இதனுல் வெளியாகிறது. இதற்குக் காரணம் எதுவாயிருக்கும் என்று ஆராயவேண்டும். அப்படியாக இராவணன் வெறுக்கும் சொற்கள் ஒன்றையும் வீடணன் கூறிவிடவில்லை கும்பகருணன் இதைவிட

மிக்க கடுமையான வார்த்தைகளைக் கூறி இருக்கிறான்; சினமே வடிவான இராவணனை நோக்கி யாரும் பொறுக்க வியலாத முறையில் ஏசி இருக்கிறான். அதில் இராவணன் சினமடைந்ததாகத் தெரியவில்லை. இவை யனைத்தையும் கேட்டுக் கொண்டிருந்த வீடணன், அதனைவிடக் கடுமையாகத் தான் கூறவேண்டியது ஒன்றும் இல்லை என்று அறிந்திருந்தும், 'முனியற்க' என்று கூறுவது விந்தையே! ஒருவேளை தனது உட் கருத்தை இராவணன் அறிந்து கொள்வான் என்ற அச்சத்தால் முன்னெச்சரிக்கையாக இச்சொற்கள் தோன்றி இருக்கலாமோ என்று நினைக்க வேண்டி இருக்கிறது.

இது ஒருபுறம் நிற்க, வீடணன் கூறிய சொற் களையே எடுத்து ஆராய்வோம்:

இலங்கை மாநகரம் வானரத்தால் வெந்தது என்று கூறுதல் தவறுடையது. சானகியின் கற்புத் தீயினா லேயே அஃது அழிந்தது என்றும், உலகிடை யாருக்கும் வீழ்ச்சியென்பது மண், பெண் என்ற இரண்டில் ஒன்றாலேயே நேர்ந்துளது என்றுங் கூறினான். இதன் பிறகு நல்ல முறையில் சில காரணங்கள் எடுத்துக் கூறுகிறான். அவற்றையும், அதற்கு இராவணன் கூறும் விடையையும் விருப்பு வெறுப்பின்றி ஆய வேண்டும். அதற்கு விடைகூறும் வகையில், இராவண னது பண்பாட்டில் ஒரு பகுதியையும் காண்கிறோம்:

"நீ தவஞ்செய்து வரங்கள் பெற்ற காலத்தில், பலராலும், பலவற்றாலும் தோல்வி எய்தலாகாது என்று வேண்டிப் பெற்றனையாயினும், மனிதர் களால் அழிவு நேரக்கூடாது என வரம் வேண் டிற்றிலை. அவர்கள்மாட்டு, எவ்வாறு இம் பொழுது வெற்றி கிட்டும்? இதற்குச் சான்றும்

வேண்டுமெனில், கார்த்த வீரியார்ச்சுனனிடம் நீ தோல்வி எய்தியதே சாலும்." (1)

"கயிலை மலையை நீ தூக்கிய பொழுது, நந்தி தேவர் தந்த சாபத்தால், விலங்கொன்று உன்னை வெல்லும் என்பதை அறிவோம். அதற்குச் சான்றாக வாலியினிடத்து நீ தோற்றமையை அறிவோம்". (2)

"முன்னர் வேதவதிபால் நீ தகாது செய்து, அதன் பயனாய் அவள் தீக் குளிக்கையில், 'மறுபிறப்பில் உனது அழிவுக்குக் காரணமாவேன்' என்று கூறி இறந்தாள். அவளே இப்பொழுது சீதையாகத் தோன்றினாள்." (3)

இம் மூன்று காரணங்களும் விடணன் எடுத்துக் காட்டியவை. இன்னும் அவன் கூறியன வருமாறு:

மேலும், இப்பொழுது நினது பகைவராய்த் தோன்றி நிற்பவரையும் நீ நன்கு அறிய வேண்டும். இவர்களோ முனிவரும், அமரரும், முழுதுணர்ந்தவர்களும், முற்றும் மற்றும் நினைவதற்கரியவராவர். அவர் தம் வினையினால் மனிதராய் எளிநின் இங்குத் தோன்றி நின்றார்; கோசிகன், நான்முகன், இறைவன் முதலானோர் தந்த படைக்கலங்களை ஏந்தி நிற்பவர்; திருமாலது அரிய வில்லையும், இறைவன் திரிபுரம் எரித்த அம்பையும், குறுமுனியாகிய அகத்தியர் தரப் பெற்று நின்றார். அவர்களை நீ மதியாது விடினும், அவர்கள் படைக்கலங்களைப் பற்றி வீரனாகிய நீ அறிந்திருக்க வேண்டும். அவர்களது அம்பறாத் தூணியிலுள்ள பகழிகள் உலகையே நக்கி அழிக்கும் பாம்பு போன்றவை; ஆலகால விடத்தை ஒத்த விடத்தைக் கக்குபவை; நல்லோர்க்கு அழிவு செய்யும் தீயோரை அழித்து

அவரை இரையாகக் கொள்வதன்றி வேறு உணவு பெருதவை.

அவ் வம்புகளின் சக்தியை நீ அறிய வேண்டுமாயின் அதிக முயற்சியின்றி அறியலாம். தேவ அசுரர்களால் கடைய இயலாத பாற்கடலைக் கடைந்த வாலியின மார்பைப் பிளந்தவை அவ் வம்புகள்தாம். அம் மட்டோ? உலகையே வளைத்துக் கவித் திருந்த மரா மரங்கள் அழிந்ததும் அவ் வம்புகளாற்ருன். விராதன், கரன் முதலியோர், மலைகளை ஒத்த சிரங்கள் கீழே உருண்டமையும் இவற்ருல்தாம். இவற்றை யெல் லாம் கண்ட பிறகு, அவர்கட்குப் பகைவர் என்று இனித் தோன்றுகிறவர் விண்ணையே அடைவர் என்ப தும் கூறவேண்டுமோ? இவ்வாறு பகைவரைப் பற்றி அறியவேண்டிய கருத்துக்களை யெல்லாம் எடுத்து அழ காகக் கூறினன். இதுவரைக் கூறிய சொற்கள் அனைத் தும் இராவண னிடத்துள்ள நல்ல அறிவிற்கும், விவகார ஞானத்திற்கும், வீர உணர்ச்சிக்கும் இலக்காகக் கூறப் பட்டவை. முன்னர்க் காட்டிய மூன்று காரணங் களும் அறிவுடைய எவனும் ஆராய்வதற் குரியவை. அடுத்து வந்த வரலாற்றுப் பகுதி, போர் செய்கிற ஒவ் வொருவனும், பகைவனை நன்கு அறிந்திருக்க வேண்டும், என்ற சாதாரணப் போர் முறைத் தந்திரத்தை அடிப் படையாகக் கொண்டெழுந்தது.

இது வரைக் கூறியவற்ருன் இராவணன் மனத்தில் ஆராய்ச்சி பிறக்க வில்லை என்பதைத் தன் கூர்த்த மதி யால் நன்குணர்ந்த வீடணன் தனது விவகாரத்தை மாற்றுகிருன்; பகைவனைப் பற்றியே ஓயாது கூறி இராவணன் வெறுப்புக்கு ஆளாகாது அவனது கருணைக்கு முறையிடுபவன் போல் சிலவற்றைக் கூறப் புகுகிருன்.

அண்ணு! இது வரை நம் சரணங்களை யன்றி வேறு புகல் காணுதிருந்த அமரர்கள் இப்பொழுது மாறிவிட்டார்கள். சனகியாகிய நஞ்சைத் தின்றவர்கள் உய்வ தரிது என நன் குணர்ந்த அவர்கள், நம் பாலுள்ள அச்சம் நீங்கினர். இதனை நன்குணர்ந்த நம் அரக்கர்களும் அதனை உன்பால் கூறின், நீ கோபிப்பாய் என்ற காரணத்தால் உன்பால் கூருது இருந்துவிட்டனர். தேவர் முதலியோர் அச்சந் தீர்ந்த தோடு மட்டும் நிற்கவில்லை; அடிக்கடி இலங்கையை வந்து கண்டுவிட்டுஞ் செல்கின்றனர். இவர்கள் செயல் மட்டோடு, இது நின்றுவிட வில்லை. நமது உணவை உண்டு வளர்ந்த, நன்றி யறிவுடைய குதிரைகளும் யானைகளும், கோட்டையினுள் புகும்பொழுது தம் இடக் காலை முன் வைத்துப் புகுகின்றன. இவையனைத்தையும் ஆராய்ந்து பார்த்து ஒரு முடிபுக்கு வருகிறேன். அதனையும் கூறி விடுகிறேன் என்று கூறத் தொடங்கினுன்:

"இசையும் செல்வமும் உயர் குலத்(து) இயற்கையும் எஞ்ச
வசையும் கீழ்மையும் மீக்கொளக் கிளையொடும் முடியாது
அசைவில் கற்பின அவ் அணங்கைவிட்(டு) அருளுதி
இதன் மேல்
விசையம் இல்லெனச் சொல்லினன் அறிஞரின் மிக்கான்"

—(மங். பட. 99).

இதனைக் கேட்டனன் இராவணன். "கேட்ட ஆண்டகை கரத்தொடு கரதலம் கிடைப்பப் பூட்டி வாய் தொறும் பிறைக்குலம் வெண்ணிலாப் பொழிய" கீழ்க் கண்டவாறு கூறத் தொடங்கினன்:

'எனக்கு ஏதோ உறுதிகள் கூறுகிறேன் என்று தொடங்கி இறுதியாக அறிவிலிகள் கூறுஞ் சொற்களையே கூறினுய். அற்ப மனிதர்கள் வெல்வர் என்று நீ

கூறியது அவர்மாட்டு நீ கொண்ட அச்சத்திலா அன்றி அன்பு காரணமாகவா? கூறுவாயாக. அன்பு காரணமாக இங்ஙனம் கூறினையா வென்று இராவணன் கேட்டது சிந்திக்கற்பாலது. இவ்வாறு அவன் மனத்தி லேனும் நினைக்கக் காரண மென்ன? ஏனையோரிடம் காணாத சில புதுமைகளை வீடணன் மாட்டுக் கண்டமை யாலேயே இராவணன் அவனிடம் ஐயங் கொண்டுள் ளான் என்று நினைக்க வேண்டி இருக்கிறது.

இனி, அடுத்து வரும் பகுதிகளில் வீடணன் விவ காரம ஒவ்வொன்றிற்கும் விரிவான முறையில் விடை யளிக்கிறான் இலங்கை வேந்தன்: "மானிடரை வெல்ல வரங் கொள்ள வில்லை என்று கூறினாய். என் வாழ் நாளிற் செய்த செயற் கருஞ் செயல் அனைத்திற்கும் யான் வரங் கொண்டதுண்டோ? திசையானைகளை வென் றதும், கயிலையை எடுத்ததும் எப் பெரிய வரத்தால் ஆயின என்று சற்று நினைத்துப் பார். மேலும் விரும் பியோ, விரும்பாமலோ பயனற்ற சொற்கள் பேசினை. வானோர் படைக்கலந் தந்த பெருமையைப் பலபடியாகக் கூறினாய். இதுவரை அவை என்னை என் செய்த? யான் ஒருபுறம் இருக்க, என்னோடு ஒரு வயிற்றுப் பிறந்த உன்னை விட மானிடர் வலியராந் தன்மையும் உண்டோ? கூறுக. நீ போற்றிப் பேசுந் தேவர்கள் ஒரு முறையாவது என் பால் பொருது வெற்றி என்பதைக் கண்டார்களோ அவ்வா றிருக்க என்னையும் கிளையையும் இப்பொழுது அவர்கள் வெல்வர் என்று என்ன நியாயங் கொண்டு கூறினை? கேவலம் வர பலத்தால் யான் இதுவரை வெற்றி கண்டேன் என்று நீ நினைத்து விட்டாய். அவ்வாறாயின் தேவர்கட்குத் தலைவரான அம் மூவரை யும் வென்றது யாரிடம் பெற்ற வரத்தால் என்று கூறுவையோ?"

இரண்டாவதாக, 'விலங்கால் ஊறு நேரும் எனக் கூறினே. அச் சாபமும் நந்தி தேவர் தந்தது என்று கூறினே. அவர் மட்டுமா? தேவர் முதல் சித்தர் வரை நம்மைச் சபியாதவர் யார்? இதுவரை அவர்கள் சாபங்கள் நம்மை என்ன செய்தன? வாலி பாற் றோற்றமையை எடுத்துக் காட்டினாய். நன்று. அரங்கிலாடும் பெருமானிடம் அவன் பெற்றிருந்த வரத்தை யான் அறியேன். அவன் எதிரே போர் செய்யச் சென்றால் அம் மூவருங் கூடத் தம் வலியில் பாதியை இழப்பரே இதனை நன்கு அறிந்தவனும், உன்னால் இன்று போற்றப்படுகிற வனும் ஆகிய இராமனே அவனை மறைந்து நின்று அல்லவோ கொன்றான்! மேலும். ஓர் ஒப்பற்ற வலியுடைய வாலிபால் யான் தோற்றதைக் கொண்டு, உலகிடை வாழும் குரங்குகள் எல்லாம் என்னை வெல்லும் என்பது என்ன நியாயங் கொண்டு கூறுகிறாய்? உன்னால் புகழப்படும் இராமன் வலிமையை நீ அறியாய் போலும்! ஏற்கெனவே முறிந்திருந்த சிவபெருமானது வில்லை முறித்து, ஓட்டையாகிவிட்ட மராமரத்துள் அம்பைச் செலுத்தி, கேவலம் கூனியினது சூழ்ச்சியால், பெறவேண்டிய ஆட்சியை இழந்து, வனத்தை அடைந்து, எனது சூழ்ச்சியால் மனைவியையும் இழந்து, இன்னும் உயிர் பெரிது என்று கருதி, அதனை விடாது சுமக்கும் கேவலம் மனிதனாகிய அவனது வலிமையை உன்னையன்றி யார் மதிக்க முடியும்?'' என்று கூறினான்.

இதிலிருந்து இராவணனைப் பற்றி நாம் அறிவதொன்றுளது. இராகவனைப் பற்றிய முழுத் தகவலையும இராவணன் அறிந்திருந்தான் என்பது வெளியாகிறது. இவற்றை அறிந்திருந்தும் பகைவனை எளிமையாக மதித்துவிடுகிறான். தன் செயல் ஒவ்வொன்றையும் பெரிதாகவே மதிக்கும் இராவணன் தன் பகைவன்

செய்த அரிய, செயல்களைக் குறைத்து மதிப்பது வியப்பே. சிவனது வில்லை உடைத்ததும், மரா மரத்துள் அம்போட்டியதும் செயற் கருஞ் செயல்களேயாம். எனி னும் இராவணனது அலட்சிய மனப்பான்மையால் இவை சாதாரணச் செயல்க ளாகின்றன. ஒருவன் செய்த அருஞ் செயல் அதனைக் காணுவோனது மனப்பான் மைக்கு ஏற்பப் பெரிதாகவும், சிறிதாகவும், சிறப் புடையதாகவும், சிறப்பில்லாத தாகவும், கருதப்படும் என்பது நாமறிந்த ஒன்றே. ஏனையோர் கண்டு வியக் கும் ஒரு காரியத்தை இராவணன் எளிமையானதாக மதிக்கிறான். தந்தை சொல்லைத் தலைமேற் கொண்டு கானம் ஏகிய பெருமையைக், கூனி சூழ்ச்சியால் அரசை இழந்தான் என்று கூறுகிறான். தானே விட்டுக் கொடுத்த அரசியலை, இழந்தான் என்று கூறுதல் வியப்புடையதே. மேலும் தான் சீதையை வஞ்சகமாக எடுத்துக் கொண்டு வந்துங்கூட, இராகவன் மனைவியை இழந்தான், என்று கூறுதல் இன்னும் வியப்பே!

இலக்கியத்தில் இத்தகைய மற்றொரு இடம் காண் டற்குரியது. கண்ணபிரானைப் பற்றி இருவர் கூறு கின்றனர். அவனது ஒரே பண்பில் இருவரும் ஈடுபடு கின்றனர். வெண்ணெய் திருடி உண்ணும் அவனது பண்பில் ஈடுபட்ட வில்லிபுத்தூரார் "அளைகமழ் பவள வாயனை" என்று புகழ்ந்து போற்றுகிறார். ஆனால் இதே பண்பில் மற்றொருவன் ஈடுபடுகிறான். அவனே துரியோ தனன். ஆனால் அவன் அதில் ஈடுபடுகிற நோமும் கால மும் வேறு. மைத்துனக் கேண்மை பற்றி, அருச்சுனன் உயிரைக் காப்பான் வேண்டி, மாயன் மாயத்தால் பகல வனை மறைத்து விடுகிறான். அதன் பயன் நாமறிந்த ஒன்றே. இதனைக் கண்டு ஆற்றாத துரியோதனன் கண்ணனைப் பழிக்கிறான். எவ்வாறு? முன்பு வில்லியாற்

போற்றப்பட்ட அதே பண்பு இப்பொழுது துரியோதன னால் இகழப் படுகிறது.

> "முடை யெடுத்த நவநீதம் தொட்(டு) உண்டு கட்(டு) உண்டு முதனுறைகக்
> குடை யெடுத்து மழைதடுத்தும் வஞ்சனைக்(கு) ஓர் கொள் கலமாம் கொடியபாவி
> படை யெடுத்து வினைசெய்யேன் எனப்புகன்ற மொழிதப்பிப் பகைத்த போரில்
> இடை யெடுத்த நேமியினால் வெயில் மறைத்தான் இன்னம் இவன் என்செய்யானே"

நாற்றம் எடுத்த வெண்ணெயைத் திருடி உண்டு உதை பட்டவன் என்பது முதலடியின் பொருள். இதுவும் உண்மையே! திருடி உண்பவன் நாற்ற மில்லாத நவநீத மாக உண்ண வேண்டு மென்றால் எங்குக் கிடைக்கும்? எனவே துரியன் கூறுவதும் உண்மைதானே? இதி லிருந்து ஓர் உண்மை புலப்படுகிறது. நடைபெற்ற ஒரே செயலைக் காணும் இருவர் தத்தம் மனோ நிலைக்கு ஏற்ப அதன் பொருளை விரிப்பர். ஒருவாறு இருவர் கூற்றிலும் உண்மை இருத்தல் கூடும் எனினும், நடுநிலை காண்போர் உண்மையை ஆராய்ந்து முடிவு கட்டவேண்டும்.

இராவணன், இராகவனைப் பற்றி இவ்வளவு அறிந் திருந்தும் அவனை மதியாமற் போனதற்குக் காரணம் அவன் கொண்டிருந்த தன்னம்பிக்கையே யாகும். இப் பண்பு உயர்வுடைய தாயினும் எல்லையற்றுப் போகுந் தருவாயில் தன்னை மேற்கொண்டானுக்குத் தீங்கையே இழைக்கிறது. வீரச் செயல் என்பது என்ன என்பதை நன்க றிந்திருந்த இராவணன் அறிவையும், அது மயக்கி விட்டது. கண்டதும் கேட்டதுமான உண்மைகளைத் திரித்து உணருமாறு செய்து விட்டது. ஏனையார்பால்

நன்மையே விளக்கும் 'தன்னம்பிக்கை' என்ற இந் நற் பண்பு இராவணன் தீமைக்குத் துணை செய்கிறது. ஒரு வேளை சீதைபால் இராவணன் காமங் கொள்ளாது இருந்திருப்பின் இராமன்பாற் கண்ட இச் செயல்களைப் பாராட்டி இருப்பான். இப்பொழுது அவன் மனம் கெட்டு விட்டதாகலின், இப் பண்பே, தீமைக்கு மேலும் மேலும் தூபம்போடுகிறது.

இனி இறுதியாக வீடணனை கண்ட இலங்கை வேந்தனை; இராவணன் இறந்த பின்னர்க் காண்கிறோம். இராவணன் இறந்து மண்மேல் கிடக்கையில் இராமன் அவனை நெருங்கிக் காண்கிறான். இராவணன் முதுகிற் புண்பட்டுக் கிடப்பதைக் காண்கிறான். உடனே தனது வீரத்தைத் தானே பழித்துக் கொள்கிறான். "போர்ப் புறங்கொடுத்தோர் பொன்ற ஆண்தொழிலோரில் பெற்ற வெற்றியும் அவத்தம்" என்று கூறிவிட்டான், இதனைக் கேட்ட வீடணனுக்கு வருத்தம் எல்லை கடந்து விட்டது. அண்ணன் அழிவுக்கு வழிதேடினவனாயினும், இந் நிலையில் அவனுக்கு வரும் பழியை விரும்ப வில்லை. வேறு யாராவது இங்ஙனம் கூறி இருப்பின் என்ன செய்திருப்பானோ அறியோம். ஆனால் தனக்கு இலங்கைச் செல்வத்தையே அளித்த இராமன் இங்ஙனம் கூறினதால் என்ன செய்வது? ஒன்றும் சொல்லாமலும் இருக்க முடியவில்லை. எனவே 'அருவிக்கண்ணன், வெவ்வுயிர்ப் போடும் நீண்ட விம்மலன், வெதும்பும் நெஞ்சினன்' ஆகிய வீடணன் "செவ்வியில் தொடர்ந்த அல்ல செப்பலை செல்வ!" என்று கூறினான். பொருளும் சிறப்பும் அற்ற சொற்களைச் சொல்ல வேண்டாம் அண்ணலே! என்பதே அதன் கருத்து. இங்ஙனம் கூறியவுடன் அண்ணனது பெருமை வீடணனுக்கு நினைவிற்கு வருகிறது. அவன் வாழ்வையும், மாட்சியையும்,

வீழ்ச்சி யடைந்தமைக்குக் காரணத்தையும் நினைந்து பார்க்கிறான். இராகவனை நோக்கி உடன் கூறுகிறான். 'ஐயனே! கார்த்தவீரியனும், வாலியும் இராவணனை வென்றது அவர்கள் சொந்த வன்மையா லல்ல. தேவர்கள் சாபத்தால் விளைந்த பயனே யாகும் அது. இனி, இப்பொழுது அவன் வீழ்ச்சி யடைந்ததற்கும் தக்கதொரு காரணம் உண்டு. 'தாயினும் தொழத் தக்காள் மேல் தங்கியகாதற் றன்மை நோயும், நின் முனிவுமே'' அக் காரணங்களாகும். பிறர் மனை நயந்தான் அடைந்த பேதைமைக்கு ஏற்பப் பொறையே வடிவான நீயுங் கோப முற்றனை. ஆகலின அவன் அழிவு நெருங்கியது. அன்றேல் வெல்லுவார் ஒருவரு மிலர். மேலும் அவன் திக்கயங்களை வென்ற காலத்தில் அவற்றின் கொம்புகளை மார்பில் ஏற்று ஒடித்தான். மீண்டும் அவைகளைக் களைந்து எறியாமல் மார்புக்கு அணிகலமாகக் கொண்டிருந்தான். தற்பொழுது மாருதி குத்திய குத்துக்களாலும், நீ எய்த அம்புகளாலும் அவை உருவிச் சென்று முதுகின் வழிப்போயின. அதுவே அவனது முதுகில் புண் உண்டாதற்குக் காரணமாகும' என்றுரைத்தான். மேலும் ''வெவ்விடம் ஈசன் தன்னை விழுங்கினும், பறவை வேந்தை, அவ்விட நாகம் எல்லாம் அணுகினும்'' இவனைப் பகைவர் படைக்கலம் அணுக மாட்டா. அம்மட்டோ? உலகம் முதலியவற்றைக் காக்குந் தொழில் பூண்ட திருமால் முதலிய பல்லோரும்' 'என்று யாம் இடுக்கண் தீர்வ(து) என்கிறார் இவன் இன்று உன்னால் பொன்றினான் என்ற போதும் புலப்படார் பொய் சொல் என்பார்' என்று கூறி அழுகிறான் வீடணன்.

மேலும் சில கூறப் புகுகிறான் வீடணன். அண்ணனது வன்மையை நினைக்கிறான். ''அண்ணவோ,

அசுரர்கள் தம் பிரளயமே அமரர் கூற்றே" என்று கூறத் தொடங்கிய அவன், தனது சொல்லைத் தமையன் தட்டியதை உடன் நினைந்து கொள்கிறான். தன்பால் மிகவும் வெகுண்டு இலங்கை வேந்தன் "இஞ்சிமாநகர் இடமுடைத்து, அஞ்சல், அஞ்சல்" என்று கூறியதை நினைந்து "ஆசை பழி யென்றேன், எனை முனிந்த முனிவு ஆறித் தேறினையோ" என்று வருந்துகிறான். 'அண்ணா! நீயாண்டு சென்றாய்? வீரர்கள் புகும் சுவர்க்கம அடைந் தனையா? அன்றி உனது பாட்டனும் பிரமன் உறையும் நாடு ஏகினையா? பிறை சூடும் பெருமானிடம் சேர்ந் தனையா? உனது உயிரை அஞ்சாது கொண்டு சென்றவர் யார்?' இங்ஙனம் கூறி வருந்தும் வீடணனுக்குச் சிறிது சலன மதியும் தலைக்காட்டி விடுகிறது. எத்தகைய தன்மை வாய்ந்த ஒருவனும், இத்தகைய ஒரு நிலையில் கீழ்க்கண்டவாறு கூறமாட்டான்.

"ஆர் அரு உன் உயிரை அஞ்சாதே கொண்(டு) அகன்றார்
அதெலாம் நிற்க
மாரனார் வலியாட்டந் தவிர்ந்தாரே குளிர்ந்தானே மதியம்
என்பான்"

—(இராவணன் வதைப்படலம்; 224)

காமவேள் இராவணனைத் துன்புறுத்தியதையும், சீதைபாற் கொண்ட காமத் தீயால் வெம்பிய இராவணன் மதியம் சுடுகிறது என்று கூறியதையும், இப்பொழுது நினைந்து கொண்டு கூறுதல், இறந்தவனை எள்ளும் முறை யில் அமைந்துளது இது ஒரு பெரிய தவறே யாகும். சுத்த வீரன் ஒருவனும் செய்யாத செயலை வீடணன் மேற் கொள்கிறான். இம்மட்டோடு அவ் வெள்ளல் குறிப்பு நிற்க வில்லை. "நல்லாரும், தீயாரும், நரகத்தார், துறக்கத்தார், நம்பீ! நம்மோடு, எல்லாரும் பகைஞரே

யார் முகத்தே விழிக்கின்றாய் எளியை ஆனாய்'' என்றும் கூறுகிறான். இறந்தவனை, இறுதிவரை விற் போர் விளைத்துத், தான் தனி யாண்மை நிறுத்திப் பொன்றிய தலைவனை, எளியை ஆனாய் என்று கூறுதல் அறிவுடைமை ஆகாது. இதைவிட ஒன்றும் கூறுகிறான்.

> ''சீர்மகளைத் திருமகளைந் தேவர்க்கும் தெரிவரிய தெய்வக் கற்பின்
> பேர்மகளைத் தழுவுவான் உயிர் கொடுத்துப் பழிகொண்ட பித்தா''

சீதையைத் தழுவுவான் வேண்டி உயிரையுங் கொடுத்து நீங்காத பழியினைப் பெற்றுக் கொண்ட பைத்தியக்காரா என்று கூறுகிறான். ஒருவேளை இராவணன் புகழ் முழுதும் மங்கிப் பிறன் மனை நயந்தமையால் பழி சூழ்ந்து விட்டதே என்ற கருத்தால், 'பைத்தியக்காரா' என்று, அன்பு மிகுதியினாலும், கூறி இருக்கலாம். இதனை நீக்கி விட்டாலும் முன்னர்க் கூறிய இரண்டும் எள்ளல் குறிப்பில் தோன்றியவைதான் என்பதில் ஐயமில்லை. எனவே இராவணன் மாட்டு வீடணன் கொண்டிருந்த அன்பு கலப்பற்றது, தூய்மையானது என்று சொல்வதற்கில்லை. அவன் குடும்பமே இராவணன்பால் நிறைந்த அன்பு கொண்டிருந்தது என்று கூற முடியாது. திரிசடையை நாம் அறிவோம். பெரிய தந்தையின் உப்பைத் தின்று கொண்டே அவனது வீழ்ச்சியை விரும்பினவள் அவள். நிற்க, வீடணன் இந்த நிலையில் இராவணனைப் பற்றிக் கூறிய இவ்விரு குறிப்புக்களும் மிகவும் தாழ்ந்த மனப் பான்மையைக் காட்டுபவை. முழு விரோதியாகியவனும், இராவணனைத் தன் பகைமை காரணமாக, இழித்துப் பேச உரிமை உள்ளவனுமாகிய இராகவனே இங் ஙனம் கூறவில்லை. அங்ஙனம் கூறாததுமட்டுமன்று,

இறந்த பிறகு அவன் மாட்டும், அவனது வீரத்திடத்தும் ஐயங் கொள்வது தவறு என்றன்றோ கூறுகிறான் அவ் வீரன்.

"........ வீடணு நக்க (து) அன்றால்
என்னதோ இறந்துளார் மேல் அயிர்த்தனன்"

இங்ஙனம் ஒரு சுத்த வீரன் கூறுவதைக் கேட்ட பிறகும் வீடணன் மேற்கூறியவாறு கூறுவானேயாகில் அவனது அன்பை என்ன கூறுவது. இராவணனிடத்து அச்சத்தையே மிகுதியாகக் கொண்டிருந்தான் வீடணன் என்று நினைக்கவேண்டி இருக்கிறது. மந்திரத்திலேயே தமது கருத்தை ஏனையோரெல்லாம் அஞ்சாது கூறப், பெரிய முகவுரையுடன் இவன் தொடங்குகையிலேயே, இவனுடைய மனக்கருத்து ஒருவாறாகப் புலனாகிறது. இராவணனிடம் ஏனையோர் கொண்டிருந்தது போலப் பயன் கருதாத அன்பைக் கொண்டிருந்தவனன்று வீடணன். இத் தகைய அவனே இராவணனது ஆற்றலைப் புகழுகிறான் என்றால், அதிலும் தன்னால் போற்றப் படும் இராகவன் முன்பாகவே புகழுகிறான் என்றால், அதிலிருந்து இலங்கை வேந்தன் மாட்சியை நாம் அறிய முடிகிறது.

---

## நாளை வா எனப்பட்டான்

நற் பண்புகள் பலவற்றிற்கும உறைவிடமான இராகவன் சிறந்த வீரன். கேசவன் என்ற சொல்லைக் கம்பன் பல விடங்களிலும் வேண்டுமென்றே பயன் படுத்துகிறான். வீரம் ஒன்று மட்டும் அல்லாமல் நற் பண்புகள் பலவும் உடைய இராமன் தன் பகைவனை

எல்லை மீறி ஏசுகின்ற இடம் கம்பன் பாடிய இராமாயணத்தில் இல்லை. அவன் பெரிதும் நேசிக்கின்ற சுக்கிரீவன் இராவணன் மேல் பாய்ந்து விட்டான், தானை காண் படலத்தில். நீண்ட நேரம் ஆகியும் குரங்கினத் தலைவன் மீண்டா னில்லை. அவனுடைய வருகையைப் பற்றியே இராமன் ஐயுறவு கொள்ளும் நேரத்தில் சுக்கிரீவன் மீண்டு விட்டான். வெறுங் கையோடு வரவில்லை. இராவணன் மணி முடியைக் கவர்ந்து வந்து விட்டான். ஆனால், இராமன் அவன் அவசரப்பட்டுச் செய்த காரியம் அடாதது என்று எடுத்துக் கூறுகிறான். அந் நிலையில் இராமன் மனம் எவ்வாறு இருந்தது என்று ஆசிரியனே கூறுகிறான். சுக்கிரீவனுக்கு ஏதேனும் ஊறு நேர்ந் திருக்குமே யாயின் இராமன் வந்த காரியம் என்ன ஆகி இருக்கும்? அந் நிலையிலும் இராமன் இராவணனைப் பற்றித் தவறாக ஒன்றுங் கூற வில்லை; 'கருணை இல்லான்' என்ற சொல்லால் மட்டுங் கூறுகிறான். எனவே இராமன் மனம் இருந்த அமைதியான நிலை இதிலிருந்து விளங்குகிற தன்றோ !

வாலி மைந்தனும் அங்கதனைத் தூதாக அனுப்புகிறான் அயோத்தி வேந்தன். அங்கதனும் இராவணனிடஞ் சென்று வேண்டுமளவு ஏசுகிறான். "பாவியை, அமருக்கு அஞ்சி அரண் புக்குப் பதுங்கினானை, தேவியை விடுக' 'என்று என்னைக் கூறுமாறு சொல்லி அனுப்பினான்', என்று அங்கதன் கூறுகிறானே தவிர இராகவன் அவ்வாறு கூறியதாகக் கவி பாடவில்லை. காரணம் அவ்விதம் இராமன் கூறவியலாமையே யாம். தன் மனைவியை இழந்து நிற்கும் வருத்தத்தால் இங்ஙனம் கூற இராமனுக்கு உரிமை உண்டேனும், அவ்வாறு கூறி இருப்பின் அவன் இராமனாக ஆக மாட்டான்.

முதற் போர் புரி படலத்தில்தான், இராம இராவணர்கள் நேரே சந்திக்கின்றனர். அமரரும் அஞ்சத் தக்க அருஞ சமர் நடந்தது. இறுதியில் இராமன் பல கணைகளால் இராவணன் தேர், வில் முதலியவற்றை அழித்து, அவனது மணி மகுடத்தையும் தரையில் உருட்டி விட்டான். முடியும் வில்லும் இழந்த இலங்கையர்கோன் நிலை, இரங்கத் தக்கதாகவே உளது. 'அமர் பொருமேல், வெல்லும் அத்தனை அல்லது தோற்றிலா விறலோன்'' ஆகிய இராவணன் நாணித் தலை குனிந்து பகைவன் முன் நிற்கின்றான். அவனை நோக்கி இராமன் பேசத் தொடங்குகிறான். ''இன்று அவிந்தது போலும் உன் தீமை'' என்று ஆரம்பித்து, முதன் முறையாக இராவணனைப் 'பாவீ!' என்று விளிக்கிறான. அங்ஙனம் அழைப்பதன் காரணமும் உடன் கூறப் படுகிறது.

''அறத்தினல் அன்றி அமரர்க்கும் அருஞ்சமம் கடத்தல்
மறத்தினல் அரி(து) என்பது மனத்திடை வலித்தி '

என்று கூறினன். நன்கு கல்வி கேள்விகளிற் சிறந்தவனை இருந்தும் கிளையொடும் அழிய முற்பட்டது வருந்தத் தக்கதே என்றான். மேலும் கூறத் தொடங்கின வனாகி ''சீதையை விட்டு, உன் தம்பியாம் விடணனைப் பட்டத்தில் வைத்து அவனுக்கு ஏவல் செய்ய முற்படு வாயேல், உன்னை விட்டு விடுகிறேன் ' என்றான்.

ஆனல் இதற்கு விடை ஒன்றும் இராவணன் கூற வில்லை. எனவே போரை மீண்டுஞ் செய்தலிலேயே அவனுக்கு விருப்பம் இருக்கிற தென்பதை நன்கு கண்டான் இராகவன். உடனே அவனை இழித்துப் பேசிய நிலை மாறி விடுகிறது. ஒரு சம வலி யுடைய பகைவனுக்குத் தர வேண்டிய மரியாதை தந்து பேசுகிறான்.

"அல்லை யாம்எனில் ஆரமர் ஆற்(று)எனுந் தோற்றம்
வல்லை யாம்எனில் உனக்குள வலியெலாங் கொண்டு
நில் ஐயா!............

—(முதற் போர். படலம்: 255)

உனக்கு உள்ள படைக்கலம் அனைத்தையுங் கொண்டு நில் ஐயனே' என்று கூறுகிறான். எனவே ஒரு சிறந்த வீரனைக் கண்டவுடன் மற்றொரு வீரன் அவன்பால் ஈடுபடும் நிலைக்கு இஃது ஒரு சிறந்த உதாரணமாகும். முதன் முதலில் இராகவன் பாவி என்று இராவணனைப் பழித்தமை, மன நூல் கருத்துப்படிப் பொருந்துவதே யாகும். தனது துன்பங்கட்கெல்லாம் காரணனை ஒருவனை நேரே கண்ட பொழுது, எத்துணைச் சிறந்த பண்புகள் உடைய ஒருவனுக்கும் மன அமைதி கெடுதல் இயற்கை. அம் முறையில் அமைதி கெட்டு, இராகவன், பாவி என்று விளித்தான். ஆனால் இதற்குள் தன்னைக் கட்டுப் படுத்தித் தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு விட்டான். மேலும் தான் உயிர்ப் பிச்சை தருகிறேன் என்று கூறியதையும், இராவணன் சட்டை செய்யவில்லை என்பதையும், இராமன் நன்கு கண்டு கொண்டான்; எனவே அவனிடம் கொண்டுள்ள மதிப்பும் உயர்ந்து விடுகிறது. இவை இரண்டுஞ் சேரவே பேச்சு முறையும் மாறி விடுகிறது. இதனை அடுத்து வரும் பாடல் இக் கருத்தை நன்கு வலி உறுத்துகிறது. "ஆள் ஐயா!" இச் சொற்களால் மீண்டும் இராகவன் இராவணனை விளிக்கிறான். எனவே இராகவன் மனம் சாந்த நிலையை அடைந்து விட்டமை அறிகிறோம். இந் நிலையில் இராமன் தன் மனைவியைக் கவர்ந்து சென்ற கள்வனைத் தன் எதிரே காண வில்லை. அதற்கு எதிராகப் போர் வீரன் ஒருவனை, தன்னோடு பகைமை பூண்டுள்ள ஒருவனையே, காண்கிறான். பகை வீரன்

ஒருவனுக்குத் தர வேண்டிய அனைத்து மதிப்பையுந் தந்து அவனை விளிக்கிறான்.

இறுதியாக இராமனும் இராவணனும் போர்க் களத்தில் சந்திக்கின்றனர். நீண்ட நேரம் போர் நடை பெற்றது. இறுதியில் இராவணன இராமன் அம்பால் துன்பமடைந்து தேரில் சாய்ந்து விடுகிறான். அந் நிலையில் இராமன் சாரதியாகிய மாதலி இராவணனைக் கொல்லுமாறு இராமனைத் தூண்டுகிறான். ஆனால் இராகவன் மறுத்து விடுகிறான். மனைவியைக் கவர்ந்து சென்றவன் என்ற காழ்ப்பு மட்டிலும் இராமனுக்கு இருந்திருக்குமாயின், இச் சந்தருப்பத்தைப் பயன்படுத்தி இருக்கலாம். ஆனால் தான் போர் புரிவது ஒரு சிறந்த வீரனோடாகும் என்பதை அறிந்த இராமன் அந்த சந்தருப்பத்தைப் பயன்படுத்த மறுத்து விட்டான். "படை துறந்து மயங்கிய பண்பினான் மேல் நடை துறந்து உயிர் கோடல் நீதியன்று" என்று கூறிவிட்டான். இறுதியில் இராவணன் இறந்தே விட்டான். அவன் வீழ்ந்த நிலையைக் காண வருகிறான் இராகவன். இராமன் மன நிலையை ஆசிரியன் நன்கு எடுத்துக் கூறுகிறான்.

> "போரிடை மீண்(டு) ஒருவருக்கும் புறங்கொடாப் போர் வீரன்
> பொருது வீழ்ந்த
> சீரியையே மனம் உவப்ப உருமுற்றுந் திருவாளன் தெரியக்
> கண்டான்"
>
> —(இரா. வதை படலம்: 203)

மனத்தில் காழ்ப்பு ஒன்றும் இல்லாமலும், பகைவன் வீரத்தை உவந்தமையின், இறந்த அவன்பால் மகிழ்ச்சியுங் கொண்டு கண்டானும் இராமன். இராவணன் மார்பிற் குத்தி யிருந்த யானைக் கொம்புகள் புறத்தே

பிடுங்கிச் சென்ற தழும்பைக் கண்ட இராமன் அவன் புறங் கொடுத்தான் போலும் என்று தவருக எண்ணி மனம் வருந்துகிருன் அக் கருத்துத் தவருனது என்பதை வீடணன் எடுத்து மொழிய, மனக் கவலை நீங்கி விட்டான் இராமன். அம் மட்டோடு அமையவில்லை. சுத்த வீரனுகிய இராவணன் மேல் தான் கொண்ட ஐயத்திற்காக வருந்துகிருன்.

"...... .. வீடறு நக்க(து) அன்ருல்
என்னதோ இறந்துளார மேல் அயிர்த்தனன்"

இங்ஙனம் கூறுவதால் இராமன் மன நிலையை ஒருவாறு ஊகிக்க இயலுகிறது. இதுவரை போர் செய்த முறையிலேயே இராவணனைப் பற்றி நன்கு அறிந்திருக்க வேண்டி இருக்க, அதனை விட்டு அவன் மேல் ஐயங் கொண்டதற்காகத் தன் மேல் தானே தவறு கூறிக் கொள்கிருன்.

எனவே இராகவன் கண்ட இராவணன் எத்தகையவன் என்று கண்டோம். இனி இலக்குவன் கண்ட இராவணனைக் காண்போமாக.



## வழி அலா வழி மேற் செல்வான்

இராவணன் மேல் அதிக வெறுப்புக் கொள்ள உரிமை உடையவன் இராகவனுயினும், அவனைக் காட்டிலும் இராவணனை மிகுதியாக வெறுத்தவன் இலக்குவனே யாவான். அதன் காரணம் இளையோன் இராமன் மாட்டுக் கொண்டிருந்த அன்பே யாகும். சீதையைக் காணுது வனத்தில் இராம இலக்குவர் இருவரும் தேர்க் கால் சென்ற வழி தேடி வருகின்றனர். பல குறிகளைக்

கண்டு போர் நிகழ்ந்திருக்கும் என்று ஊகிக்கின்றனர். பல குண்டலங்களும், மணிக் கொடிகளும் கிடைத்தலால், சடாயுவோடு பொருதார் பலர் போலும் என்று கூறுகிறான் இராமன். ஆனால் பெண்ணைக் கவர்ந்து செல்லப் பலர் வருதல் இயலாதென்பதை உணர்ந்த இலக்குவன்,

“பொருது தாதையை இத்தனை நெறிக் கொடு போனான்
ஒருவனே அவன் இராவணனும் என உரைத்தான்”

—(சடாயு-உ. நீத்த. படலம் : 178)

ஏறத்தாழ இத் தருணத்திலிருந்தே இளையவன் இராவணனைப் பற்றி அறிந்து கொள்கிறான்.

இலங்கையில் வந்து தங்கிய பின்னரும் இராமன் இராவணனுக்குத் தூது அனுப்ப வேண்டும் என்று முடிபு செய்து கொண்டு தம்பியின் கருத்தறியக் கேட்கிறான். உடனே இலக்குவன் சீற்றமே ஒரு வடிவாக எடுக்கிறான். இவன் கூறும் சொற்களிலிருந்தே இராவணனைப் பற்றி இலக்குவன் கொண்டுள்ள கருத்து வெளியாகிறது. ‘தேவர்கட்கும் முனிவர்கட்கும் இடுக்கண் செய்தான். இந்திரனைச் சிறையிட்டான். தேவியைக் கவர்ந்து சென்றான். என்றால் விரும்பப் படும் உன்னைத் துயர்க் கடலுள் ஆழச் செய்தான். நமது சிறப்பபாகிய சடாயுவைக் கொன்றுள்ளான். இத்தகைய ஒருவனைக் கொல்லாது விடின் அதனைவிடத் தவறு வேறில்லை’. இங்ஙனம் கூறி முடிக்கிறான் இலக்குவன். எனவே இராவணனைப் பற்றி மிகத் தாழ்வான கருத்துக் கொண்டிருந்திருக்கிறான் என்று அறிகிறோம். பெரும் பலம் உடையவனாயினும் தவறான வழியிற் செல்கிறான் இராவணன் என்பதைக் கூற ‘வழி அலா வழி மேற் செல்வான்’ என்று இலக்குவன் கூறுவது அனைவரும் ஒப்புக் கொள்ள வேண்டியதே.

முதற் போர் புரி படலத்தில் இவர்கள் இருவருஞ் சந்திப்பதைக் காண்கிறோம். முதன் முதலாக இராவணன் இலக்குவனின் வில் நாணொலியைக் கேட்கிறான். சிறந்த இயந்திரப் பயிற்சி உடையான், இயந்திரம் ஓடுகையில் உண்டாக்கும் ஒலியைக் கொண்டே, அதன் தன்மையையும் வன்மையையும் அறுதி யிட்டுக் கூறி விடுவான். அங்ஙனமே இலக்குவன் நாண் எறிந்த ஒலி கேட்டு அரக்கர் தலைவன் "ஏற்றினன் மகுடம் என்னே இவன் ஒரு மனிசன் என்று". எனவே இலக்குவன் வன்மையை இராவணன் நன்கு அறிந்துள்ளான் என்பதும் நன்கு புலப்படுகிறது. ஆனால் இராவணன் மேல் தனியான தொரு பகைமை கொண்டுள்ளான் இளையோன. சீதையைத் தான் காத்துக்கொண்டு இருந்தமையின் அவளுக்கு நேர்ந்த தீங்கால் தான் அவமானம் செய்யப்பட்டதாகவே நினைக்கிறான். எனவே இராவணனை நேரே கண்டதும் அவன், "காக்கின்ற என் நெடுங் காவலின் வலி நீங்கிய கள்வா!" என்று விளிக்கிறான். இத் தகைய மனநிலை யுடைய அவன் இராவணனை நன்கு அறுதியிடுதல் இயலாத காரியமாகும்.

போர் நடக்கையில் பல சந்தருப்பங்களில் இராவணன் அம்பால் இலக்குவன் துன்ப மடைகிறான். இராவணன் அம்பால் இளையோன் மனக் கலக்கம் அடைய வில்லை எனினும், அவனை வியவாது இருக்க இயல வில்லை.

# வௌற்கு அரியான்

அனுமன் இராவணன் மேல் விருப்பு வெறுப்பற்ற கருத்துக் கொண்டவனன்று. மனைவியை விட்டு வருந்தி நிற்கும் சுக்ரீவனுக்கு அடிமை பூண்டு வாழும் சொல்லின் செல்வன், அதே நிலையிலுள்ள இராமன் மேல் பல காரணத்தாற் காதல் கொண்டவன். முதன் முறையாக இராகவனைக் கண்டவுடனேயே, அவன் துணை கொண்டு தன் தலைவன் பகைவனாகிய வாலியை ஒழிக்க முடிபு செய்து கொண்டான். அங்ஙனமே தன் கருத்தை முடித்தும் கொண்டான். அந் நிலையில் இராமன் மாட்டு நன்றியும் அன்புங் கொண்டுள்ள அவனுக்கு, இராவணன் பால் பகைமை தோன்றுதல் இயல்பு. அடுத்தபடியாக இராவணனைப் பற்றி அவன் அறிவது சம்பாதியாகிய கழுகின் தலைவனாலாகும். சம்பாதியும் இராவணனைப் பற்றித் தீயவன் என்ற கருத்தையே தந்தான். எனவே இலங்கை வேந்தனை நடுவு நிலை பிறழாது ஆராயும் சந்தருப்பம் அனுமனுக்கு இல்லை. ஆனாலும் தானும் அஞ்சத் தக்க வலிமை கொண்டவன் இராவணன் என்பதை மட்டும் நன்கு அறிந்துள்ளான். சம்பாதியும் இக் கருத்தை வலியுறுத்தி உள்ளான். இம் மனோ நிலையோடு இலங்கையிற் குதித்தான் காற்றின் மைந்தன்.

இலங்கை முழுவதையும், தன்னைப் பிறர் காணா வகை சுற்றித் திரிந்த அனுமன் இறுதியாக இராவணன் கோயிலை யடைந்தான. இராவணன் காம நோயுற்றுப் பொய் உறக்கம் உறங்குகிறான். திசை யானைகள் தந் தங்கள் அழுத்தப் பெற்ற மார்பினையும், பகைவர் மணி முடி படலால் தழும்பு பெற்ற கால்களையும் கண்டான். இந்திரசித்தனைக் கண்ட பொழுது, அவனது வீரத்தைப்

புகழ்ந்த அனுமன் இராவணன் வீரத்தில் இப்பொழுது ஈடுபட வில்லை. மனத்தில் நிறைந்துள்ள பகைமை முற்றுகிறது. மேலும் 'வெவ் வமர் தொடங்கின் என் ஆய் முடியும்' என்று முன்னமே நினைந்தவனாகலின், இப்பொழுதே, இராவணனை, உறங்கும் பொழுதே கொன்றுவிடலாமா என நினைக்கிறான். "வாள் ஆற்ற கண்ணுளை வஞ்சித்தான் தலை பத்தும் தகர்த்து என்றன், ஆள் ஆற்றல் காட்டேனல், அடியேனாய் முடியேனே" என்றும் கூறுகிறான். உறங்குகின்றவனோடு பொருதல் தகாது என்ற எண்ணம் ஏனோ? கலையெலாம் கற்ற அனுமனுக்குத் தோன்ற வில்லை. பின்னரும் அவன் நினைத்ததைச் செய்யவில்லை; காரணம் அறம் கருதியன்று; 'நேமியான் பணியன்று' என்று நினைத்ததாலே' ஆகும். ஆனால் 'பிணிவீட்டுப் படலத்'தில் இராவணன் எதிரே நிறுத்தப்படுகிறான் அனுமன் அப்பொழுது அவன் 'உறங்குகின்ற போது உயிர் உண்டல் குற்றமென்று ஒழிந்தேன்,' என்று கூறுவதாகக் கவிஞன் பாடுகிறான். இக் கருத்தை முன்னர்க் கூறாது இப்பொழுது கூறுவதால் ஆசிரியர், மாருதி மன நிலையைத் தெரிக்கிறார். சிறந்த வீரனாகையால் தன் வலியும் மாற்றான் வலியும் தூக்கிப் பார்க்கிறான் அனுமன். நல்ல தோர் முடிபுக்கே வருகிறான். "என்னையும் வெலற்(கு) அரி(து) இவனுக்கு ஈண்(டு) இவன் தன்னையும் வெலற்(கு) அரி(து) எனச் சுத் தாக்கினால்,

அன்னவே காலங்கள் கழியும் ஆதலான்
துன்னருஞ் செருத் தொழில் தொடங்கல் தூயதோ."

—(பிணி. படலம் : 62)

இதுவே அனுமன் கொண்ட முடிவு. அனுமன் போர்த் திறத்தை, அருமந்த மைந்தனும் அட்சய குமாரனைப் பலியிட்டு, அதன் பயனால் அறிந்த

இராவணன் ஒரு வீரனுக் குரிய மரியாதையோடு வினவு கிறான். "மூவருள் ஒருவனோ, மாதன் திசைக் கோனோ, யாரையோ நீ!' என்று கேட்கிறான். கேட்டவன் யார் என்றால் 'வேரொடும் அமரர்தம் புகழ் விழுங்கினான்' என்று ஆசிரியரே கூறுகிறார். இந் நிலையில் தூதன் போல் நடிப்பதே தக்கது, என்று முடிபு செய்துள்ள அனுமன் கூறத் தொடங்குகிறான்; பல வகையாலும் இராவணனுக்கு அறவுரை வழங்குகிறான்; உனது எல்லையற்ற வரம் முதலியவற்றை "நீட்டிய பகழி ஒன்றால் முதலொடு நீக்க நின்ற ஐய இராமன் தூதுவன் யான்" என்று கூறுகிறான்; மேலும் வாலி யைக் கொன்றவன் தூதுவன் என்று சொல்லிய வுடன் இராவணன், 'குலப் பகைவனோடு உறவா பூண்டுளீர்?' என்று எள்ளி நகையாடுகிறான். அந் நிலையைப் பயன் படுத்திக் கொள்ள வேண்டும் என்று நினைத்த இரா வணன் சில கூறத் தொடங்குமுன், அவன் மனோ நிலை யைத் தான் பயன் படுத்திக் கொள்ள வேண்டும் என்று நினைந்து, அனுமன் சில பன்னினான்: 'ஐயனே! கேட்பா யாக! காமச் செருக்கினால் திறந் திரும்பியவர் யாவர் பிழைத்தார்? காமத்தால் இறந்தார், களிவண் டுறை தாமத் தாரினர் எண்ணினுஞ் சால்வரோ? நீயோ புக ழைப் பெரிதும் விரும்புகிறாய்! இச் செயல் புகழ்ன்பாற் படுமோ? ஆராய்க!

"இச்சைத் தன்மை யினில்பிறர் இல்லினை
புச்சி நாளும் நகையுற நாண் இலன
பச்சை மேனி புலர்ந்து பழிபடும்
கொச்சை ஆண்மையும் சீர்மையிற் கூடுமோ?"

—(பிணி: படலம்: 99)

இங்ஙனம் நல் லுபதேசஞ் செய்த அனுமன், இறுதி யில், 'நீ உயிர் பெற்று வாழ வேண்டுமே யாயின், சீதை

யைத் தருக' எனக் கூறினன். இறுதி வார்த்தைகள் இராவணற்குக் கோபம் ஊட்டி விட்டன. 'இதனை எனக்குச் சொல்ல ஒரு குரங்கு வந்தது, மிகவும் நன்று!" என்று கூறிச் சிரித்து, 'உனது உபதேசம் ஒருபுறம் நிற்க! தூது வந்த நீ ஏன் என் படைஞரைக் கொன்றாய்?' என்றனன் இராவணன்.

இச் சந்திப்பிலிருந்தே, அனுமன், இராவணன் படை வலிமையையும், மதி வலியையும் நன்கு அறிந்து கொள்கிறான். அனுமன் வேண்டுமெனறே சில குறிப்புக்கள் தந்தான். வாலிபாற் றோற்றவன் இராவணன் என்பது யாவரும் அறிந்த தொன்றே! எனவே அத் தகைய வாலியை 'அடு கணை ஒன்றாலே கொன்றான் இராமன்' என்று கூறினல், இராமன் வலிமையை இராவணன் அறிதல் கூடும் என்று நினைந்தான் அனுமன். அங்ஙனம் அவன் நினைந்திருப்பின் பிழைபட்டான். அவனுக்கு முன்னரே, விடணனும், கும்பகருணனும் இதனைக் கூறிவிட் டிருந்தனர். எனவே, அனுமன் இதனைக் கூறியும் இராவணன் அச் சொற்களைச் சட்டை செய்யவே இல்லை.

---

## இடிக்குநர் இல்லான்

இராவணன் பகைவராயுள்ளார் அனைவரிலும், மிகுதியும் அவன்பால் வெறுப்புக் கொண்டவள் சீதையே யாவள். முதன் முதலாகச் சீதை இராவணனை வனத்தில் சந்திக்கிருள். துறவுக் கோலம் பூண்ட அவனை இன்னானென்று அறியாது உரை யாட ஆரம்பித்துவிட்டாள். அவளால் ஆசனந் தரப்பட்டு, அதில் அமர்ந்த இராவணன் அவளை யாரென்று வினவுகிருன். அக் கேள்வியால் தம்மை முன்பின் அறியாதவர் அப் பெரி

யார், என நினைந்து, சீதை விடை கூறினாள். அதன் பின்னர் அவன் யாரென்று சீதை வினவ, துறவி வேடம் பூண்ட இராவணன் நாண மற்றுத் தன் பெருமைகளைப் பலபடியாக விரிக்கின்றான். மேலும் தான் வேறு ஒருவன்போல் நடித்து அத் தகைய இராவணன் ஊரிலிருந்து தான் வந்ததாகவும் கூறினான். உடனே சீதையின் மனோ நிலையை நாம் அறிய முடிகிறது. இராவணன் பெருமைகளைப் பற்றித் துறவி பலபடியாகக் கூறியும் சீதை அதனைக் காதில் வாங்கியதாகவே தெரியவில்லை. அம் மட்டோ டில்லை!

"சேதனை மன்னுயிர் தின்னுந் தீவினைப்
பாதக அரக்கர்தம் பதியில் வைகுதற்(கு)
ஏது என்?"

—(சடாயு. படலம்: 51)

என்று இவ்வாறெல்லாம் வார்த்தை யாடிய பிறகு சீதையைப் பெயர்த்துத் தேரில் வைத்துக் கொண்டு இராவணன் ஆகாய வழியே செல்கிறான். அந் நிலையில், 'நீ மானுடர் பாட்டு அஞ்சவில்லை எனில் தேரை நிறுத்தி அவருடன் பொரும்' என்று சீதை கூறவே, இராவணன் மானிடரோடு பொருதல் தனக் கிழிவென்று கூறிவிட்டான் உண்மையை ஆராயுமிடத்துக் கர தூடணர் பட்ட பாட்டை அறிந்த இராவணன் தன் செயல் முடியும் வரைப் போரை விரும்ப வில்லை. மேலும் தன் பெருமைகளைக் கேட்ட மாத்திரத்துத் தனக்கு இணங்காத பெண்ணே இருத்த லியலா தென்ற கருத்தில் ஊறியவன் என்று நினைய வேண்டி யுளது. அதனாலேயே சீதையின் வினாக்கட்குப் பொருத்த மற்ற விடை தருகிறான். மேலும் சீதையால் எள்ளி நகையாடவும் படுகிறான்.

"........ தங்குலப் பகைஞர் தம்பால்
போவது குற்றம் பொருவது நாணம் போலாம்
ஆவது கற்பினரை வஞ்சிக்கும் ஆற்றலேயாம்"

—(சடாயு. படலம் : 86)

இங்ஙனம் அவள் கூற இடந் தந்துவிட்டானாகலின் இராவணன்மேல் சீதைக்குச் சிறிதும் மதிப்பு இல்லாமற் போயிற்று. கர தூடணர் வதையால் ஒருவாறு அரக்கர் குலத்தைப் பற்றியே தாழ்ந்த கருத்துக் கொண்டிருந்த சீதைக்கு, இராவணனும் இங்ஙனம் கோழைச் செயல் செய்தது, மேலும் அவர்கள் மாட்டுத் தாழ்ந்த கருத்தையே உண்டாக்கிற்று. இறுதிவரைச் சீதையின் மனோநிலை இவ்வாறே இருக்கக் காண்கிறோம்.

இனி அடுத்துச் சீதையை அசோக வனத்தில் இராவணன் சந்திக்கிறான். பெண்கள் மனோ நிலையை முழுதும் அறியாதவனாக இராவணன் சீதையைக் காண வருகிறான். ஊர்வசி உடைவாளைத் தாங்கி வரவும், மேனகை அடைப்பந் தாங்கவும், செருப்பினைத் திலோத்தமை தூக்கி வரவும், அரம்பையர் குழாம் சூழ்ந்து வரவும் கங்குலும் பகல்படுமாறு தோன்றினான். இத் துணைப் பெண்மக்கள் உடன் வருதலைத் தனது பெருமையின் அறிகுறியாக இராவணன் நினைத்து அழைத்து வந்தான். சீதையைக் கண்டு நிற்கும் அவனையும், அவனைக் கண்டு நிற்கும் சீதையையும், ஆசிரியர் படம் பிடிக்கிறார். 'கூசி யாவி குலைவுறுவாள்' என்றும், 'ஆசையால் உயிர் ஆசழிவான்' என்றுங் கூறுகிறார். நின்றவன் கூசிக் கூசிப் பேசத் தொடங்கினான். அதனை ஆசிரியர், 'வெவ் விடத்தை அமிழ்தென வேண்டுவான்' என்று கூறுகிறார். பலபடியாகத் தன் கருத்தை எடுத்துக் கூறிய இலங்கை வேந்தனுக்குச் சீதை இறுக்கும் விடை ஆராயத் தக்கது: முதன முதலாகத் தன் கணவனது வன்மையை விரிவாகக்

கூறத் தொடங்குகிருள். இதுவும் அவளுடைய மனே நிலையை அறிவிக்கும் பகுதி யாகும். சாதாரணமாக உலகியலில் இத் தகைய தன்மையைத் காண்கிறோம். விவகாரத்தில் தளர்ச்சி யுற்றவர்கள் தங்கட்குச் சாதகமான ஒரிரு பகுதிகளை விடாமல் உரக்கக் கூறுந் தன்மை நாமறிந்த தொன்றே. சீதையின் தளர்ந்து வருந்திய மனத்திற்கு இராகவனைப் பற்றி நினைந்து கொள்ள வேண்டியது இன்றியமையாத தாகிறது. அந் நினைவும் உரக்கப் பேசி மனத்தை சமாதானப்படுத்திக் கொள்ள வேண்டியதாகிறது. தனக்குத் துணை, யாரும் இல்லாது அஞ்சி நிற்கும் அவளுக்குத், தானே உரக்கப் பேசும் இவ் வார்த்தைகளே ஆறுதல் தரக் கூடியனவாம். எனவே அவள் கூறத் தொடங்குகிருள்;

"மேருவை உருவல் வேண்டின் விண்பிளந்(து) அகல் வேண்டின்
ஈரேழு புவனம்யாவும் முற்றுவித் திடுதல் வேண்டின
ஆரியன் பகழிவல்ல(து) அறிந்திருந்(து) அறிவிலாதாய்
சீரிய அல்ல சொல்லித் தலைபத்துஞ் சிந்துவாயோ ?"

—(நிந்தனைப் படலம். 40)

இங்ஙனம் கூறத் தொடங்குவதால் இராவணன் வன்மையைத் தான் சிறிதும் மதிக்கவில்லை என்பதைக் கூறுவா ளாகிருள். இராவணனுடைய தற் பெருமையை நன்கு அறிந்துகொள்ளப் பல சந்தருப்பங்க ளிருந்தமையின், அவற்றை யெல்லாம் ஒன்றொன்றாய்க் கூறி, அவன் அழிவது உறுதி என்பதை எடுத்துக் காட்டுகிருள். இராவணனைக் காணும் போதும், அவன் பேச்சுக்களைக் கேட்கும் போதும் சீதைக்கு இராமன் நினைவே தோன்றுகிறது. அவனது வன்மையின் முன்னர், இராவணன் வலியற்றுப் போவதை நன்கு அறிபவ ளாகலின் அதனை எடுத்துக் கூறுகிருள். வெள்ளியங் கிரியினை எடுக்கவும் விடையின் பாகன் தன் கால் விரலால் அழுத்த, அதனுல்

பெருந் துன்பம் அடைந்தவன் இராவணன். அதனை எடுத்துக் கூறி, அத் தகையவன் வில்லை முறித்தவன் இராமன் என்றுங் கூறுகிறாள். இராவணனை வென்றவனாகிய கார்த்தவீரியனை வென்றவன் இராகவன் என்று இவ்வாறு வரிசையாக அவன் தோல்விகளையும் இராகவன் வெற்றிகளையும் அடுக்கிக் கொண்டே செல்கிறாள். இவை அனைத்தும் இராவணனுக்குத் தெரியாதவையல்ல. எனினும், சீதை இவற்றை எடுத்துக் காட்டுவதில் உள்ள நியாயம் என்ன என்று காணவேண்டும். பெரும்பாலும் ஆத்திரமுடையவர்கள் பேசுவதுபோலவே அமைந்துள்ளன அவளுடைய சொற்கள். தன் மனத்திற்குத் தைரியம் கூறும் முறையிலேயே அவள் பேசுகிறாள். இங்ஙனம் பேசிக்கொண்டே வந்த சீதை இறுதியில் அரியதொரு கருத்தையுங் கூறுகிறாள். ஒரு பெரிய மன்னன் வீட்டில் பிறந்து, மற்றொரு மன்னனை மணந்து வாழ்ந்த அவளுக்கு அரசனைப் பற்றிய பல இன்றியமையாத குறிப்புக்கள் தெரிந்தே இருக்கும். மன்னனுக்கு, மதியமைச்சர்கள் கண் போன்றவர்கள். அமைச்சரை வைத்து நடாத்தாத அரசியல் அழிந்தே தீரும். அவ்வமைச்சரும் எத் தகையவராக இருத்தல் வேண்டும்? பொதுமறை தந்த பெரியார்,

"இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானுங் கெடும்"

—(குறள் 448)

என்றல்லவோ கூறினார்! இத்தனை நாட்கள் அசோகவனத்தில் உறைந்த சீதை, இராவணனைப் பற்றியும் அவனது அரசியலைப் பற்றியும் அறிந்த உண்மைகள் பல. அவற்றுள் சிறந்தது அவன் அமைச்சரே இல்லாது ஆளுபவன் என்பதே யாம். பெயரளவில் உள்ள அமைச்சர்களும், இச்சகம் பேசி அவனது அழிவை நாடுபவர்

களாக உள்ளார்களே யன்றி, இடித்துப் பேசி அவனது வாழ்வைப் பெருக்குபவர் அல்லர். அரசியலறிந்த சீதைக்கு இது வியப்பை அளிக்கிறது. உடனே இராவணனை நோக்கி,

> "கடிக்கும்வல் அரவும் கேட்கும் மந்திரம், களிக்கின் றேயை
> அடுக்கும் ஈ(து) அடாதென்ற ஏதுவோ(டு) அறிவு காட்டி
> இடிக்குநர் இல்லை, உள்ளார் எண்ணிய(து) எண்ணி உன்னை
> முடிக்குநர் என்ற போது முடிவன்றி முடிவ துண்டோ?"
>
> —(நிந்தனை : 59)

என்று கூறினாள். அமைச்சராயுள்ளார் ஏது காட்டி அரசனை நல்வழிப் படுத்தவேண்டும். அவ்வாறு இல்லாமல் இருப்பது ஒருபுறமிருக்க, உள்ளவர்களும் அவன் கூறுவதையே சரியென்று கூறும் கயவர்களாக வன்றோ உள்ளனர்? இந் நிலையில் சீதை சொல்லுஞ் சொற்கள் அவள் மனத்தில் தோன்றிய இரக்கக் குறிப்பையே அறிவிக்கின்றன. இராவணனுடைய தவ வலியையும், படை வலியையும் அவள் காண்கிறாள். இத்துணை வலியும், பெருமையும் உடைய ஒருவனை அவள் கண்டதில்லை. இராமனிடம் இதனினும் மேம்பட்ட வலியைக் கண்டாளேனும், அரசனாக வுள்ள இராவணனைச் சுற்றியுள்ள சிறப்புக்களில் ஒரு சிறிதேனும் அயோத்தியில் இல்லை என்பதை அவள் அறிவாள். தன்னால் போற்றி வணங்கப்படும் தேவர்கள் இங்கு இராவணனுக்கு அடிமை பூண்டு ஏவல் செய்கின்றனர். எத்துணைத் தவம் புரிந்து இத்துணைச் சிறப்புக்களை அவன் பெற்றிருக்க வேண்டும் என்று நினைக்கிறாள் சீதை. இவை யனைத்தும் வீணாகின்றனவே என்று நினைந்தவுடன் இரக்கமே தோன்றுகிறது. அவ் விரக்கத் தாலேயே பலவாறு அவனை இடித்துக் கூறி அறிவுரை பகர்கின்றாள்.

இனி அவள் காட்டும் இரக்கத்திற்கு மற்றொரு காரணமும் உண்டு. இராவணன் தனது பெருமையைக் காட்டும் அளவில் நின்றிருப்பானேயாகில் சீதைக்கு அவன் மாட்டு அச்சமே நிகழ்ந்திருக்கும். அவன் அவ்வாறு செய்யாமல் தன் நிலையின் இழிந்த சொற்களை ஓயாது அவள் எதிரே சொல்லுகிறான். அவன் கூறுகிற சொற்களைக் கேட்டால் யாருக்குமே இரக்கம் தோன்றாமல் இராது.

"என்றுதான் அடியனேனுக்(கு) இரங்குவது இந்து வென்பான்
என்றுதான் இரவியோடு வேற்றுமை தெரிவ(து) என்பால்?"
—(மாயாசனகப் படலம். 9)

இங்ஙனம் தன் பெருமையையும், ஆண்மையையும் காற்றில் விட்டுவிட்டுப் பேசத் தொடங்கிய அவன் மிகத் தாழ்ந்த நிலையை அடைந்துவிடுகிறான். இராவணனா பேசுகிறான் என்று நாம் வியக்கிறோம். யார்க்கும் வணங்காத மணிமுடி தாழ்த்தி அவன் சீதைபால் அழுவது வெறுப்பையும், நகைப்பையும், சீற்றத்தையும் ஒருங்கே உண்டு பண்ணுகின்றது.

"வஞ்சனேன் எனக்கு நானே மாதரார் வடிவு கொண்ட
நஞ்சு தோய் அமுதமுண்பான் நச்சினேன் நாளும் தேய்ந்து
நெஞ்சுநேரான(து) உம்மை நினைப்பு விட்டு ஆவி நீக்க
அஞ்சினேன் அடியேன்உம் அடைக்கலம் அமுதின் வந்தீர்"

"தோற்பித்தீர் மதிக்கு மேனி சுடுவித்தீர் தென்றல் தூற்ற
வேர்ப்பித்தீர் வயிரத் தோளை மெலிவித்தீர் வேனில் வேளை
ஆர்ப்பித்தீர் என்னை இன்னல் அறிவித்தீர் அமரர் அச்சம்
தீர்ப்பித்தீர் இன்னம் என்னென் செய்வித்துத் தீர்தீர் அம்மா!"
—(மாயாசனகப் படலம். 11 & 12)

மனித இயல்பில் காமமும், காதலும் ஒரு பெரிய இடம் பெறுதல் உண்டு. ஆனால் அஃது அவனிடம் உள்ள

ஏனைய பண்புகள் அனைத்தையும் அமிழ்த்தி மேலெழுந்து ஆட்சி செய்ய விரும்பினால், அச் செயல் வெறுத்தற்குரியதே. தனது பெருமை யனைத்தையும், தவறான காமத்தின் முன் னிலையில் பலி இடும் இராவணனை நாம் இப்பொழுது போற்ற இயல வில்லை.

"தலையின் இழிந்த மயிர்அனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை"

—(குறள் : 964)

என்பது பொய்யாமொழி யன்றோ! இங்ஙனம் பேசும் ஒருவனை எந்தப் பெண்தான் பொறுக்க இயலும். சீதை அதனைப் பொருது அவனைப் பழித்தது இயல்பே யன்றோ! மேலும் பெண் தன்மையும், தாய்மையும் மிக்குடைமையின் அவளுக்குக் கோபத்தைக் காட்டிலும் இரக்கமே மிகுதியாகத் தோன்றிற்று.

இராவணனை முதலிற் கண்டபொழுது சீதை கொண்டிருந்த அச்சம் சிறிது சிறிதாக நீங்கிவிட்டது. அவன் தன்னைத் தொட்டுப் பலாத்காரமாக ஒன்றுஞ் செய்யான் என்பதை அறிந்த சீதை அவன்பாற் கொண்ட அச்சம் நீங்கினாள். இறுதிவரை அவன்மாட்டு இரக்கமும், அவன் கூறும் தவறான மொழிகளுக்கே அச்சமும் கொண்டிருந்தா ளென்று அறிய முடிகிறது.

———

# தன் இரக்கம்

" எற்(று)என்(று) இரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்(று)அன்ன செய்யாமை நன்று "

—(குறள் : 655)

" ஏன் இக்காரியத்தைச் செய்தோம் என்று பின்னர் இரங்கும்படியான வற்றைச் செய்யாமல் இரு. தவறிச் செய்த போதினும் இரங்காம லாவது இரு" என்று ஆணை யிடுகிறார் வள்ளுவர். இவ் வுரையைப் பின்பற்றுவது எல்லோராலும் இயலுவ தன்று. அநேகமாய் எல்லோ ரும், பின்னால் நினைந்து வருந்த நேரும் செயலைச் செய்யா மல் இருப்ப தில்லை. இதைப் போலவே, வருத்தப்படாம லும் இருப்ப தில்லை. "எத்தனை விதங்கள் தாம் கற்கினும் கேட்கினும் என் இதயமும் ஒடுங்க வில்லை" என்பதும் மெய் யுரையே யன்றோ?

மூ வுலகங்களையும் வென்று ஆண்ட இராவணனும் வள்ளுவர் வாய்மொழியைப் பின்பற்றி நடக்கும் ஆற்றல் பெற்றிருக்க வில்லை. சீதையை எடுத்துவந்த பொழுது அவன் ஆழ்ந்த சிந்தனை செய்ய வில்லை. தங்கையின் வருணனையில் மயங்கிச் சீதையின்மீது பேச முடியாப் பெருங் காதல் கொண்டுவிட்டான். மாமன் மாரீசன், பெருமைக்குப் பங்கம் விளைவிக்கத் தக்க செயல் என்று தடுத்துச் சொல்லியும் கேளாமல், சீதையை வஞ்சகத் தால் சிறைப்படுத்திக் கொண்டுவந்தான். பின்னர் அச் செயலின் விளைவாகத் துன்பத்தை அநுபவிக்க நேர்ந்த போது 'ஐயோ! இப்படி யெல்லாம் நிகழ்ந்தனவே!' என்று ஏங்கலானான்; வள்ளுவர் வழியின் அருமையை உலகத்தார்க்கு உணர்த்தவே இவ்வாறு செய்தானோ?

அநுமன் இலங்கையை எரித்ததோடு, அசோக வனத்தையும் அழித்துவிட்டுச் சென்றான். திக்கஜங்களின் கொம்புகளை மார்பில் தரித்தவன், தேவர்களை ஏவல்கொண்டவன், கயிலையை எடுக்கத் துணிந்தவன், ஆயிரம் மறைகளை அறிந் துணர்ந்தவன், அநுமன் செயல்களைக் கண்டு கலங்கிவிட்டான். அநுமனால் அழிந்த இலங்கையை முன்னிலும் பன் மடங்கு சிறப்புடையதாகச் செய்வித்த பின்பும், அவன் கலக்கம் நீங்க வில்லை. இனிச் செய்யவேண்டியது யாது என்பதைப் பற்றி ஆராயக் கூட்டிய மந்திரி சபையில் நடந்து விட்டவைகளையே திரும்பத் திரும்ப எடுத்துப் பேசலானான். அநுமனுடைய செயல்களின் விளைவுகள் கண்ணுக்குத் தோன்றுதவாறு மயன் இலங்கையைப் புதுப்பித்த பின்பும். இராவணன் மனக் கண்களுக்கு அழிந்த இலங்கையே தெரியலாயிற்று. இஃது அவன் மனம எவ்வளவு புண்பட்டிருக்கவேண்டும் என்பதையே நமக்கு வற்புறுத்துகிறது.

"சுட்டது குரங்(கு)எரி சூறை யாடிடக்
கெட்டது கொடிநகர் கிளையும் நண்பரும்
பட்டனர் பரிபவம் பரந்த(து) எங்கணும்
இட்ட(இவ்) அரியணை இருந்த(து) என்னுடல்

(மந்திரப் படலம் : 12)

"மற்றில தாயினும் மலைந்த வானரம்
இற்றில தாகிய(து) என்னும் வார்த்தையும்
பெற்றிலம்"

(ஷை : 14)

'குரங்கு நகரைச் சுட்டது; சுற்றமும் நண்பரும் இறந்தனர்; பழி பரந்தது; இவ்வளவுக்கும் என் னுடல் இவ் வரியணையில் இருந்ததே!' இராவணன் தன் உயிரை இங்குக் குறிப்பிடாதது கவனிக்கத் தக்கது. அஃது அவமா

னத்திற் கஞ்சி இறந் தொழிந்தது என்பது அவன் எண்ணம் போலும்! பழிக்குப் பயப்படும் இராவணன் அடுத்து, 'அநுமன் இறந்தொழிந்தான்' என்று கேட்கும் பாக்கியத்தையும் பெறவில்லையே என்று ஏங்குகின்றான். உயிருட னிருக்கும் குரங்கு, புதுப்பித்த இலங்கையையும் அழித்து விடும் அன்றோ? அதன் செயல்களைத் தடுக்கும் திறம் தனக் கில்லை என்பதை இன்னும் தெளிவாக அவன் உரைக்க முடியுமா? கயிலையை எடுக்கத் துணிந்த காலத்து இருந்த தைரியம் எங்குச் சென்றது? இராவணன், பழி வந்ததற்குத் தன் செயலே காரணம் என உணர்ந்ததே, இங்கு அவன் தைரிய மற்றவனாய் இருப்பதற்குக் காரணம். எத்துணை வல்லமை யுடையவனேயானாலும், தானே வருவித்துக் கொண்ட இன்னல்களை எதிர்க்கும் சக்தியை அவன் எப்படிப் பெற்றிருக்கக் கூடும்? 'இவன் இராவணன்தானா' என்று நாம ஐயப்படும்படி அவன் நடந்துகொள்வதி லிருந்தே குரங்கு செய்த இன்னல்களின் எல்லையை ஒருவாறு உணர முடிகிறது. இராவணனையே அதை விவரிக்கச் சொல்லுவோம்:

"ஊறுகின் றனகிணறு உதிரம் ஒண்ணகர்
ஆறுகின் றிலதனல் அகிலும் நாவியும்
கூறுமங் கையர்நறுங் கூந்த லின்கறு
நாறுகின் றதுநுகர்ந்(து) இருந்த நாமெலாம்"

(ஷை : 13)

எண்ணற்ற இராக்கதர்களைக் கொன்று குவித்துச் சென்றான் அநுமன். அவர்கள் உடம்பிலிருந்து வெளிப்பட்ட இரத்தம் ஆறாக ஓடிக் குளம், மடு, ஏரி முதலிய நீர் நிலைகளை யெல்லாம் இரத்த மய மாக்கிவிட்டது. இலங்கையில் குடிக்கத் தண்ணீர் கிடைக்கவில்லை. ஆகவே, இராவணன் கிணறுகளைத் தோண்டச்

செய்தான். ஆனால் பயன் பெறவில்லை. இராக்கதர் இரத்தம் பூமியில் ஊறித், தோண்டிய இடம் அனைத்திலும் இரத்தமாக ஊற்றுச் சுரக்கின்றது. தண்ணீரில்லாமல் மக்கள் எவ்வாறு காலஞ் செலுத்த முடியும்? அந்நம் ஆப: வேதம் (ஜலமே பிரதான உணவு). உண்டியில்லாமல் தவித்த இராவணன் தூக்கமில்லாமலும் தவித்தல் நேர்ந்தது. அநுமன் இலங்கையில் வைத்த தீ அவியாமல் இருக்கிறது. வீடுகள் எரிந்துவிழும் நகரத்தில் எவனுக்குத் தூக்கம் பிடிக்கும்? இத் துன்பங்களை மாற்றச் சற்று இன்பத்தைத் தரும் மெல்லியலாரோடு கலந்திருக்கலா மென்றாலோ, அவர்கள் கூந்தல் சுறு சுறு நாற்றம் வீசுகின்றன. இவ்வாறு உண்டி, உறக்கம், இன்பம் இம் மூன்றையும் இராவணனுக்கு இல்லாமற் செய்த அநுமனை, அவன் எவ்வாறு மறக்கக் கூடும்? அநுமன் உயிருடனிருக்கிறான் என்ற எண்ணமே அவன் மனத்தை ஆறுத லடையச் செய்யாம லிருக்கப் போதிய தன்றோ? ஆகவேதான், அவன், இலங்கையைப் புதுப்பித்த பின்பும், என்ன செய்யவேண்டும் என்று யோசிக்கச் சபை கூட்டியும், அநுமனையும் அவன் செயல்களையும் மறக்க முடியாதவனாகி, அவற்றையும், அவற்றால் அவ னடைந்த பழியையுமே பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறான்.

நமக்கு மட்டுமா? இராவணனைச் சேர்ந்தவர்க்கே அவனுடைய இந் நிலை கேலிக் கிட மாகிறது. தன் தீமையை நினைத்துத் தளர்ந்து பேசும் இராவணனை நோக்கிச் சேனாதிபதி, வள்ளுவரைப் போல் உபதேசம் செய்யத் தொடங்கிவிட்டான்.

“ வஞ்சனை மனிசரை இயற்றி வாள்நுதல்
பஞ்சன மெல்லடி மயிலைப் பற்றுதல்

அஞ்சினர் தொழில்என அறிவித் தேற்(று) அது
தஞ்சென உணர்ந்திலை உணரும் தன்மையோய் !

—(மந்திரப்படலம் : 16)

தாம் கெட்டிக்காரர் என்று காட்டிக்கொள்ள எதிரி இளைத்த சமயம் பார்த்துத் தாக்குவது மனிதப் பண்பு. இவ் வுபாயத்தை உயர்ந்தோர் கைக்கொள்ளுவ தில்லை. சேனாதிபதி இம் முறையயைக் கையாண்டது இராவணன்மீது வெற்றி கொள்வதற்கே அவன் விரும்பிய படியே, இராவணனும், அவன் கூற்றுக்களை ஏற்றுக் கொண்டவனைப் போல, இதை மறுத்துக் கூறும விரும்பாது அவன் தன் தீமையை நினைந்து எத் துணைத் தளர்ந்திருக்கிறான் என்பதையே வலியுறுத்துகிறது. இந் நிலையில் பிறர் கேலி செய்வதைப் பொருட் படுத்துவது பெரியோர்க்கு அழகன்று. இராவணன் சேனாதிபதியின் கூற்றுக்கு மறு மொழி கொடாதது, தவறு செய்தவனேயானாலும், அவன் தன் இயற்கை இடங் கொடாத ஒரு பிழையையே செய்தான் என்றும், அதன் தீமையை நாம் எடுத்துக் காட்டக் கூடிய அளவுக்கு, அவனே உணர்ந்திருந்தான் என்றும் காட்டுகின்றது.

சுக்கிரீவன் மணி முடியைக் கவர்ந்து சென்றபின் இராவணன் கொண்ட தோற்றம் மிகவும் இரங்கத்தக்கதாய் இருக்கின்றது. போரில் வெற்றியும், தோல்வியும் மாறிமாறி வருதல் இயற்கை வெற்றி கிடைக்கும் காலங்களில் மட்டற்ற மகிழ்ச்சியும், தோல்வியுறும் காலங்களில் எல்லையற்ற துன்பமும் அடைவது வீரர்க்கு உறுதி பயக்காது. இராவணன் இதை உணர்ந்தவன் அல்லன். அவன் வாழ்க்கையில் தோல்விகள் ஏற்படாமல் இல்லை. கார்த்த வீரிய னிடத்தும், வாலியினிடத்தும், அவன் படு தோல்வி யுற்றான். கயிலையை எடுக்கச் சென்று அவமானப்பட்டான். ஆனால்

இவைகளை அவன் தனக்கு நேர்ந்த அவமதிப்புக்களாகக் கருதவில்லை. 'கயிலையை எடுத்தவன்' என்று அவனே தன்னைப் பெருமையாகப் பேசிக்கொள்ளுகிறான் என்றால், தோல்விகளைத் தைரியத்துடன் ஏற்றுக்கொள்ளும் மனோதிடம் இராவணனிடத்தில் மிகுதியாக இருந்தது என்பதில் ஐயம் உண்டோ! இருப்பினும், இராவணன், அநுமன், சுக்ரீவன் இவ்விருவர் செயல்களையும் குறித்து மிக மிக வருந்துகிறான். இச் செயலின் காரணத்தை ஆராய, இராவணன் மாட்சி நமக்கு விளங்குகின்றது.

கார்த்தவீரியனிடத்திலும், வாலியினிடத்திலும் அவன் தோற்றது போருள் நேர்ந்த தோல்விகள். ஆகவே போர் வீரனாகிய இராவணன் அவைகளுக்குக் கலங்கவில்லை. கயிலையை எடுக்கச் சென்று கைகளை இழந்ததும் வருந்தத் தக்க தன்று. தேவர்களும், நான்முகனும் கூடக் கயிலையை எடுக்க முற்பட்டிருந்தால் அவன் கதியையே யடைந்திருப்பர். உண்மையில் எவரும் கயிலையை எடுக்க வேண்டும் என்ற எண்ணத்துக்கே இடம் கொடுத்திருக்க மாட்டார். இராவணன் எவரும் செய்யக் கூடாத—செய்ய நினைக்கக் கூடாத—செயலைச் செய்ய முன் வந்ததே அவன் பெருமைக்குச் சான்று. அங்ஙன மிருக்க, அவன் தோல்வி யடைந்தான் என்பது எவ்வாறு இரங்கத் தக்கதாகும்? ஆகவேதான், அவன் சிறிதும் கூச்சமின்றி, மிக்க பெருமிதத்துடன் தன்னைக் 'கயிலையை எடுத்தவன்' என்று தானே பாராட்டிக் கொள்ளுகிறான. அநுமன் இலங்கையை அழித்ததும், சுக்கிரீவன் மணி முடியைக் கவர்ந்து சென்றதும் அவர்களுடைய ஒப்பற்ற வலிமை காரணமாக அல்ல; இராவணனுக்கு அவற்றைத் தடுக்கும் திறம் இல்லாமையாலேயேயாம். தீங்கு தடுக்கும் திட மிலாதவனாய் இராவணன் மாறி விட்டதற்கு,

தீமையை வருவித்துக் கொண்டவன் தானே என்றுணர்ந்த அறிவே காரணம். இதை மிகவும் நன்முக உணர்ந்திருந்தமையால்தான், இராவணன் அநுமனை எதிர்க்கவோ, அல்லது சுக்ரீவனைத் தடுக்கவோ தான் முயற்சி யொன்றுஞ் செய்யாது வாளா இருந்தான். அவர்கள் செயல்களால் தனக்கு நேர்ந்த பழியின் எல்லையைப் பன்மடங்கு பெரிதாகக் கருதினான். அதை நினைத்து நினைத்து உருகினான். 'இட்ட இவ் வரியனை இருந்தது என் உடல்' என்று இராவணன் கூறியது, எவ்வளவு ஆழ்ந்த சிந்தனையோடு கூறப்பட்டது என இப்பொழுது உணர முடிகிறது.

வள்ளுவர் குறளின் இன்றியமையாமையை வற்புறுத்த விரும்பி நடந்து கொண்டவனைப் போலவே இராவணன் செயல் புரிந்திருக்கிறான். அவர் ஆணைக்கு நேர் மாறாக நடந்து கொண்டானே யானாலும் தன்னை உயர்ந்தவனாகவே காட்டிக் கொண்டிருக்கிறான். பின்னர் வருந்த நேரும் என்று சிந்தியாமல், ஒரு தீமையைச் செய்து விட்டான். அதன் பயனாக அழிவு நேரத் தலைப்பட்ட பொழுதும் அவன் வள்ளுவர் வழியைப் பின்பற்ற வில்லை. வாழ்க்கையை இன்ப முடையதாகக் கழிப்பதற்காக வள்ளுவர் வழி கூறினார். இராவணன் இன்பந் துய்ப்பதையா வாழ்க்கையின் இலட்சியமாகக் கொண்டிருந்தான்? உயர்ந்தோன் என்று உலகோரால் போற்றப்பட வேண்டும் என்பதன்றோ அவன் இலட்சியம்! காமம் காரணமாக நெறி யற்ற வழியே சென்று விட்டான். சுய மதிப்புக்குப் பங்கம் நேரிடாதபடிப், பின்னடையக் கூடாத அளவுக்குச் சென்று விட்டான். இனித் தன் நோக்கம் நிறைவேறுவதற்கு வேண்டியவற்றைச் செய்யினும், தன் போக்கை மாற்றிக் கொள்ளினும் பழியே வரும் என்றும் உணர்ந்தான். ஆகவேதான்,

பழியைத் தேடித் தந்த தன் நோக்கமாவது முற்றுப் பெறட்டும் என்று எண்ணி, அதற்கு ஆவன செய்வதில் விருப்பங் காட்டினன். 'பழி வந்து விட்டதே' என்ற எண்ணம் தோற்றுவித்த உரனின்மை காரணமாக அதையும் செம்மையாய்ச் செய்து முடிக்க முடியாமல் அவதிப்பட்டான். இல்லையேல் தன்னை ஏற்றுக் கொள்ளும்படி சீதையின் கால்களில் விழுந்து இறைஞ்சிய இராவணன், அவள் மறுத்ததைக் கண்டு, திராக்ஷை புளிக்கும் என்று வெறுத்துச் சென்ற நரியைப் போல, அவளைப் பழித்துக் கூறியது பொருந்தத மற்றதாகப் போய்விடும்.

அறிவினல் அவழி யடைந்த பெரியார்களுள் இராவணன் தலை சிறந்தவனாய்க் காட்சி யளிக்கிறன். தான் செய்தது தீமை என்றுணர்ந்தும் அதன் விளைவாக நிகழ்ந்த துன்பங்களைத் தடுக்க முன் வராமல், அவற்றை நினைத்து ஏங்குவதே அவனுடைய இக் குணக் கூறுபாட்டை வெளிப்படுத்துகிறது. 'வினையை விதைத்தவன் அதனையே அறுக்க வேண்டும்' என்பதை இராவணன் உணர்ந்தே செயலற்றவனய் இருந்தான். இவ்வாறு தன்னைத் தானே தண்டித்துக் கொள்ளும் பெருந்தகைமை பேரறிவாளருக்கே பொருந்தும். இப் பண்பையே 'தன் னிரக்கம்' என மேனுட்டார் கூறுகின்றனர். இராவணனுடைய இப் பண்பை நாம் நன்குணர வேண்டு மென்றே கவி விரும்பி யிருக்கிறர். அவன் சீதையை எடுத்துவரத் தீர்மானித்த பொழுது, ஒருவரையும் கலந் தாலோசிக்க வில்லை. தங்கையின் தூண்டுதலால் தான் செய்ய முற்பட்ட காரியத்தை, அதை முடிக்கத் தனக்கு உதவியாக இருக்க வேண்டிய தன் மாமன் மாரீசனிடம் மட்டுமே தெரிவிக்கிறன். உண்மை இங்ஙன மிருக்கச் சேனதிபதியைத், தான்

முன்னரேயே சீதையை எடுத்து வரவேண்டாம் என்று சொன்னதாகவும், அதைக் கேட்காமல் இராவணன் தீமையைத் தேடிக் கொண்டதாகவும கூற வைத்து, அவைகளை இராவணன் மறுத்துக் கூறாமலும் இருக்கும் படிக் கவி செய்திருப்பது அவனுடைய மேன்மையை நாம அறிய வேண்டு மென்றே. சேனைபதி தன்னை இவ்வாறு பழிப்பதற்குக் காரணம் இல்லை என்பதை உணர்ந்திருந்தவனே யானாலும், இராவணன் தான் செய்த பிழையையே அவன் சுட்டிக் கூறுகிறான் என்ற காரணத்தால் அவனை அடக்காமல் இருக்கிறான். இச் செயல் தன் பிழையின் பொறுப்பை ஏற்றுக் கொள்ள இராவணன் பின்னடைய வில்லை என்பதையே வற் புறுத்துகிறது.

இராவணனைப் போல் தன்னைத் தானே நொந்து கொள்ளும் இயல்புடைய மனிதர்கள் 'செயல் திறமை' உடையவர்களாய் இருக்கமாட்டார்கள். அவர்கள் காலம் முழுவதும் 'இப்படியாகிவிட்டதே' என்று ஏங்குவதிலேயே கழிந்து போகுமே யொழிய, இத் துன்பத்தைத் தவிர்க்க முயற்சி செய்குவோம் என்ற எண்ணம் எழ அவர்களுக்கு அவகாசம கிடைக்காது. இராவணன் பெருமையின் மாட்சியை நமக்கு அறி வுறுத்த அவனுடைய இப் பண்பை விளக்கினார். ஆனால் எதிர் பாராத முறையில் அவன் திற னின்மையையே குறிப்பிட்டுவிட்டார் என்று எண்ணத் தோன்றுகிற தல்லவா? இவ்வாறு நாம் இடர்ப்படுவோம் என்று கம்பர் கருதாம லில்லை. இராவணன் தன்னம்பிக்கை யுடையவன், செயல் புரிதலில் சமர்த்தன் என்பதையும் வற்புறுத்தி யிருக்கிறார். அவ னிடத்தில் நாம் கண்ட 'தன்னிரக்கம்' காரணமாக நாம் ஏற்றக் கூடிய 'திற

னின்மையைச்' சரிக்கட்ட அவனுடைய 'தன்னம்பிக்கை' எல்லையற்றது என எடுத்துக் காட்டுகிறார்.

எல்லையற்ற வர பலமும், தவ வன்மையும், உடல் வன்மையுமே அவன் தன்னம்பிக்கையின் அடித் தளங்கள். இவ் வடித் தளங்களைக் கொண்டு, 'தன்னம்பிக்கை' என்ற கோட்டையை அவன் மிகப் பலமாகக் கட்டி விட்டிருக்கிறான் என்பதைக் கம்பரே 'அமர் பொருமேல் வெல்லுமா அத்தனை யல்லது தோற்றிலா விறலோன்' எனக் குறிப்பிடுகிறார். இராவணனே இவ்வாறு சொல்லி யிருந்தால் நாம் அவன் கூற்றை முழுவதும் நம்ப மன மொப்ப மாட்டோம். அதை யறிந்தே ஆசிரியரே இதனைக் குறிப்பிடுகிறார். இதனால், பின்னர் இராவணன் தன்னுடைய குறைகளை யுணர முடியாத அளவுக்குத் தன்னம்பிக்கைக் கொண்டிருந்ததை அவர் எடுத்துக் காட்டுவதைப் பொருத்த முடையதே என நம்மால் ஏற்றுக் கொள்ள முடிகிறது.

எச் செயலையும் சிறப்பொடு செய்து முடிக்கத் 'தன்னம்பிக்கை' இன்றியமையாததே. நம்மால் கூடுமா கூடாதா என்ற ஐயத்தோடு செயலில் இறங்குபவன், மடியில் பூனையை வைத்துக் கொண்டு சகுனம் பார்ப்பவனையே ஒப்பான். அவனால் எதையும் செய்து முடிக்க முடியாமல் போய்விடும். இது எவ்வளவு உண்மையோ, அவ்வளவே 'தன்னம்பிக்கையின்' மிகுதியால் மனிதன் எடுத்த செயலைச் சரிவரச் செய்து முடிக்காமல் திகைப்பதும். இராவணன் பின்னர்க் குறிக்கப்பட்ட பிழையைச் செய்து மடிகிறான்.

போர் மூண்டால் தோல்வி நிச்சயம் என்று எவ்வளவோ ஏதுக்களை எடுத்துக் காட்டினான் வீடணன், ஆனால் இராவணன் தன்னிடத்துக் கொண்டிருந்த

எல்லை யற்ற நம்பிக்கை வீடணன் சொற்களில் பொதிந்து கிடந்த உண்மைகளை உணர முடியாமற் செய்து விட்டது. 'வாலியை வென்றவன் இராமன்' என வீடணன் காட்டியதற்கு இராவணன் சமாதானம் கூறுவதால் இதனை அறிகிறோம். 'அரங்கில் ஆடுவார்க்கு அன்பு பூண்டு உடை வரம் அறியேன்' என்பதே இராவணன் வாதம். தான் தோல்வி யுற்றதைக் கருதாமல், தோல்விக்குக் காரணமாக இருந்த வாலியின் வர பலத்தை இராவணன் குறிப்பிடுவதிலிருந்து, அவன் தன் வலிமை வாலியினுடைய வலிமைக்குக் குறைந்த தாகாது எனக் கருதுகிறான் என்பது விளக்கமடைகிறது. இக் கூற்று ஒப்புக் கொள்ளக் கூடியதே யானாலும், இஃது உண்மையில் மிகையே என்பதில் ஐயமில்லை. ஆனால், அவனைச் சிறந்த பலவானாகச் செய்த தற்குக் காரணமான வரங்களை அளித்தவனும், அவனால் பூசிக்கப் பெற்றவனுமாகிய சிவபெருமானே எதிர்த்தாலும் தான் வெற்றி பெறக் கூடும் என்று அவன் கருதியது அறிவுடைமை யாகாது. சிவபெருமான் வீற்றிருந்த கயிலையை எடுக்க முடியாமல் இடர்ப்பட்ட இராவணனே இவ்வாறு கூறினான் என்றால், அவன் 'தன்னம்பிக்கை அவனுடைய அறிவை அறவே மழுங்கச் செய்துவிட்டது என்பதன்றி வேறென்ன சொல்லக் கூடும்?

இராவணன் இவ்வளவு நிச்சயமாகத் தான் வெற்றியையே அடைய முடியும் என்று எண்ணியிருந்ததற்கு அவனுடைய வர பலங்களே காரணம். இதை நன்குணர்ந்திருந்த வீடணன், மானுடரை வெல்ல அவன் வரம் பெறவில்லை என எடுத்துக் காட்டினான். இராவணனுடைய தன்னம்பிக்கை இக் குறையையும் பொருட்படுத்த இசைய வில்லை. தேவர் முதலியோரைத் தோற்

கடிக்கப் பெற்ற வரத்தில், மானுடரையும் தோற்கடிக்கக்கூடிய தகுதி அடங்கி யிருப்பதாக அவன் கருதிவிட்டான்! தன்னுடைய குறைகளை, இராவணனை உணர வொட்டாமற் செய்த அவன் 'தன்னம்பிக்கை' மாற்றார் பெருமையையும், வலிமையும் உணர ஒட்டாமற் செய்துவிட்டது. தன்னைத் தோற்கடித்த 'வாலியை வென்றவன்' இராமன் என்று கருதவே அவனுக்கு விருப்பமில்லை. 'வாலியை மறைந்தல்லவா கொன்றான்' என்று எள்ளிப் பேசுகிறான், ஒரு குரங்கு செய்த அட்டூழியங்களுக்கு மனமொடிந்து வருந்தியவன்! சாரன, 'அண்ணலே! விண்ணின் மீனினைக் குறிப்பினும், வேலையின் மீனை எண்ணி நோக்கினும், அக்கடல் மணலினை யெல்லாம் கண்ணி நோக்கினும் காணகில' என வானரப்படையின் பரப்பை யுணர்த்தியதோடு, அப்படையிலுள்ளார் ஆற்றல்களை விவரமாக எடுத்துக் கூறியும், 'புனங்கொள் புன்தலைக் குரங்கினைப் புகழுதி போலாம்' எனச் சொல்லிச் 'சிறு நகை செய்தான்! பகைவர் வல்லமையை அநுமானத்தால் அறிய இராவணன் விரும்பவில்லை போலும் என அவன் கூற்றுக்களைப் பொருத்திக் காட்டலாம். ஆனால் முதற் போர் நிகழ்ந்த பின்பும் இராவணன் மாறவில்லையே!

முதல் நாட் போரிலேயே இராகவன் எத் தகையவன் என்று இராவணனுக்கு மிக நன்றாக விளங்கிவிட்டது. ஆயுதங்களை இழந்து நின்ற தன்னை, 'இன்று போய் நாளை வா' என்று சொல்லி யனுப்பிய வீரனின் போர்த் திறமையை இராவணனே வியந்து பேசுகிறான். இராகவன் வாளி, 'ஊழித் தீயையும் தீய்க்கும், செல்லும் திசையையுந் தீய்க்கும், சொல்லும் வாயையும் தீய்க்கும் உன்னின் மனத்தையும் தீய்க்குமன்றோ' என்று கூறுவதோடு, 'ஒப்பு வேறு உரைக்கலாவது ஒரு பொருளில்லை, வேதம்

தப்பினபோதும் அன்னான் தனுவுமிழ் சரங்கள் தப்பா என்றும் பேசுகிறான். இவ்வாறு பகைவன் வல்லமையை நன்குணர்ந்து கொண்டதை அவனே எடுத்துக் கூறிய பின்னும், மகோதரன் பேச்சில் மயங்கி இராவணன் கும்பகருணனைப் போருக்கு அனுப்பியது பிழையேயன்றோ. மேலும், மகோதரன்,

" முன்னுனக்(கு) இறைவரான மூவரும் தோற்றுந் தேவர்
பின்னுனக்கு ஏவல்செய்ய உலகொரு மூன்றும் பெற்றாய்
புன்றுனைப் பனிநீர்அன்ன மனிசரைப் பொருதென்(று) உன்னி
என்னுனக்(கு) இளைய கும்ப கருணனை இகழ்ந்த(து) எந்தாய் "

(கும்: வதை: 40)

என இராவணன் ஏற்றத்தையும், இராகவன் மனிதனே என்ற எண்ணத்தையும் ஒருங்கே கூறினான். இராகவன் போர்த் திறமையை வியந்த இராவணனுக்கு, அவன் மனிதனே என்ற எண்ணம் வற்புறுத்தப் பட்டதும், அவனுடைய செயல் மாட்சிகளெல்லாம் மறைகின்றன. இப் பயனைப் பெற மகோதரன் முதலில் இராவணன் மாட்சியைக் கூறி அவனை மயங்க வைப்பது கருதத் தக்கது. மூவரையும் தோற்கடித்த தன் பெருமையை நினைத்துக்கொண்டதும இராவணன் மன மாற்றம் அடைகிறான். 'நாளை வா' என்று இராகவன் சொல்லி யனுப்பியதையும் தன்னம்பிக்கை மறக்கச் செய்துவிட்டது.

கும்பகருணனைப் போருக் கனுப்பி அருமைத் தம்பியை யிழந்தான். பின்னர் மேகநாதனை அனுப்பினான். மேகநாதன் இராமனோடு செய்த போரில் அனுபவம் ஏற்ற பின், தந்தைக்குச் சீதையை விட்டு விடுமாறு சொல்லுகையில், இராவணன் எல்லையற்ற சினத்தைக் கக்குகிறான். 'என்னை வென்றுளரெனில் உன்னை வென்றுயருதல் உண்மை' எனக் கும்பன் கூறிய சொற்களும்,

மேகநாதன் அனுபவமும் அவனுக்குப் பொருளற்றனவாய்த் தோன்றுகின்றன. தன்னனுபவத்தையே புறக்கணித்தவனுக்குப் பிறர் பேச்சும், அனுபவமும் பொருளுடையன வாகுமா? என்னை நம்பியே இந் நெடும் பகையை நான் தேடிக்கொண்டேன்' என்று மேகநாதனுக்குக் கூறிப் புறப்படச் சித்தமாகிருன். இவனுடைய தன்னம்பிக்கைக்கு எல்லை கற்பிக்க முடியுமா? இவ்வாறு அளவற்ற நிலைக்கு அது பரந்துவிட்ட காரணத்தால் தான் இராவணன் தோல்வியடைய நேர்ந்தது. உயர்ந்தோர்க் குரிய இப் பண்பை இராவணன் மிகப் பெற்றிருந்தான் எனக் காட்டுவதோடு கவி, அஃது எல்லையைக் கடந்தால், நல்லதே யாயினும் தீமையைப் பயந்துவிடும் என்ற உண்மையையும் நிலைநாட்டிவிட்டார்.

'அவலம்' என்ற தலைப்பில் அவலத்திற்குக் காரணம் ஆராய்ந்த பகுதியில் இது விளக்கப்பட்டுளது. சிறந்த ஒரு பண்பாயினும், எல்லை யற்றுச் சென்றமையின் இந் நற்பண்பே அவன் அவல வீழ்ச்சிக்குக் காரணமாயிற்று.

இராவணன் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் அவனுடைய கோபமும் கொடுமையுமே நமக்கு நினைவுக்கு வருகின்றன. இவ் விரண்டையும் மிகுதியாகப் பெற்றிருந்தவன், அன்புக்கும் உறைவிடமாக இருந்தான். அவனுக்குத் தன் சுற்றத்தாரிடமிருந்த அன்பு அளவு கடந்தது என்பதில் ஐய மில்லை. தம்பியையும், மகனையும் அவன் கடிந்துகொள்ளுகின்றனே யாயினும் அவர்களிடத்து மிக்க பரிவுடையவனுகவும் இருந்தான். மகோதரன் யோசனைப்படி, கும்பகருணனைக் கூப்பிட்டுப் 'போருக்குச் செல்' என்று உத்திரவிட்ட பொழுது, கும்பகருணன் அண்ணனுக்குப் பல நீதிகளை எடுத்துக் காட்டுகிருன். சீதையின் மீதுள்ள காமம் காரணமாகத்

தனக்கு உறுதி கூறும் தம்பியை இராவணன் நன்கு அறிந்து கொள்ளாமல் 'வீடணனைப் போல் நீயும இராமனைப் பணிந்து உயிர்வாழ்வதை நான் தடை செய்ய விரும்பவில்லை.' என்று கூறுகிறான. இதனால் கும்பகருணன் இறப்பதை இராவணன் விரும்பவில்லை என்றே தெரிகிறது. அவனைப் போருக்கு அனுப்பிய பொழுது, அவன் வெற்றியுடன் திரும்பி வருவான் என்ற நிச்சயத்துடனே அவனை அனுப்பினான். எனினும், நான் திரும்புவது நிச்சய மில்லை; இறப்பது திண்ணம், என்று கூறிக் கும்பகருணன் விடைபெற்றுக் கொண்டதும், இராவணனுடைய இருபது கண்களும் கண்ணீரைச் சொரிந்தன. அவன் எதிர்பார்த்ததற்கு மாறாகக் கும்பகருணன் இறந்தான் என்ற செய்தியைக் கேட்கும்படி யாயிற்று. அச் செய்தி அவனுக்குச் சீதையின் முன் நிற்கையில் எட்டுகிறது. அவளைத் தனக்கு இணங்கும்படி மாயா சனகனைக் காட்டி மருட்டிக் கொண்டிருக்கும் சமயத்தில், தம்பியின் சாவைக் கேட்டதும், இராவணன் சீதையை அறவே மறந்தான். யாரை அடைய அவன் கும்பகருணனைப் போருக்கு அனுப்பினானோ அவள் எதிரிலேயே, அவளை யடையச் செய்யும் முயற்சியையும் கைவிட்டு, அவன் தம்பியின் சாவுக்கு வருந்தியது, அவன் கும்பகருணனிடத்தில் வைத்திருந்த அன்பின் அளவையே காட்டுகிறது.

> நொந்தேன் பிரியேன் தனிப்போகத் தாழ்க்கிலேன்
> வந்தேன் தொடர மதக்களிறே வந்தேனால்''
>
> (மாயசனகப் படலம் : 86)

என்ற அவனைப் பின்னும் வாழச் செய்தது இயற்கையேயன்றி, அவனுடைய அன்பின்மை யன்று.

கும்பகருணன் இறந்ததும் அக்கபாதன் அழிந்தான். மேகநாதன் போருக்குச் சென்றான். நாகபாசத்தினால்

இலக்குவனைப் பிணித்து விட்டுக் களைத்துத் திரும்பி னான், 'வெற்றி தந்தேன்' என உவகையோடு உரைக்கத் தந்தையை நோக்கி வந்தான். ஆனால் அவன் இராவணனைக் காணச் சென்ற சமயத்தில், கருடனால் பகைவர் விடுதலை பெற்றுச் செய்த ஆரவாரம் கேட்டது. இராம இலக்குவரைக் கொல்லாவிட்டாலும், அவர்களை எதிர்த்து அடக்கக் கூடிய ஆற்றலைப் பெற்றிருந்ததை மேகநாதன் வெளிக்காட்டிவிட்டான். அவன் நிகும்பலை யாகத்தைச் செய்து முடித்தால் வெற்றி திண்ணம் என எண்ணினான். யாகம் தொடங்கியது. ஆனால் முடிவு பெறுவதற்கு முன் இலக்குவன் அதை அழித்துவிட் டான். பின்னர்ப் போரில் மேகநாதனும் இறக்க நேர்ந் தது. அவனைப் போருக்கு அனுப்புகையில், அவனால் வெற்றியடையக்கூடும். என்றே இராவணன் எண்ணி னான். கும்பகருணனால் வெற்றி கொள்ள முடியாத வரை, மேகநாதனோ, தானோ, வெற்றிகொள்ள முடியாது என்ற எண்ணத்துக்கு இராவணன் இடமளிக்கவில்லை. மேகநாதன் பகைவரைப் பிணித்தது, இராவணனுக்கு வெற்றி கிடைக்கும் என்று நம்ப உறுதி யளித்தது. ஆனால் எதிர்பார்த்ததற்கு மாறாக மேகநாதன் இறக்கவே, இராவணன் சோகம் எல்லை கடந்து செல்கின்றது:

சினத்தொடும் கொற்றம் முற்றி இந்திரன் செல்வம் மேவி
நினைத்தது முடித்து நின்றேன் நேரிழை ஒருத்தி நீரால்
எனக்குநீ செய்யத் தக்க கடனெலாம் ஏங்கி ஏங்கி
உனக்கு நான் செய்வதானேன் என்னின்யார் உலகத்(து)
உள்ளார்.

(இரா. சோகப்படலம்: 69)

சினமும், வலிமையும் சிறக்கப் பெற்று இந்திரன் நிலையையே யடைந்து நினைத்ததைச் செய்து முடிக்கும் ஆற்றல் பெற்றவனாய் இருந்தான் இராவணன். ஒன

முடையார் செயல்கள் நல்ல முறையில் முடிவடைய மாட்டா. ஆனால் இராவணன் சினத்தைப் பெற்றிருந்த தோடு, செயல் திறமையையும் மிகுதியாகப் பெற்றிருந் தான். இருந்தும், இப்பொழுது தான் நினைத்தபடி செய்யக் கூடாமல், மகனை இழந்து விட்டான். 'ஒரு பெண்ணுக்கு ஆசைப்பட்டு உன்னை இழந்துவிட்டேனே' என்று ஏங்கும் இராவணன், அதன் பின்னர் தன் காம இச்சையை அறவே நீக்கியது, அவன் அவ் வார்த்தைகளை உணர்ந்தே கூறினான் எனக் காட்டுவதோடு அவனுக்குத் தனயனிடத்திலிருந்த அன்பின் எல்லையையும் காட்டு கிறது. முன்னர் மாலியவானிடத்தில் 'சீதை காமனை யும் நம்மையும் நாயென மதிப்பாளன்றோ?' எனக் கூறி யவன் பின்னும் அவளைப் பெறக்கூடும் என முயற்சி செய்த பேதைமை இங்குக் கவனிக்கத் தக்கது

'இராவணன் தனக்காக உயிர் துறந்த கும்பகருண னிடத்தும், மேகநாதனிடத்தும் அன்பு பாராட்டியது இயற்கையேயன்றோ? அதைப் பாராட்டுவது எற்றுக்கு என்ற ஐயம் எழலாம். தூய்மையான அன்பை அவன் சுற்றத்தாரிடம் செலுத்தினான் என்பதை இவர்களுக்காக அவன் ஏங்கியதால் உணர முடியாதுதான். ஆனால் வீடணன் தனக்குக் கேடு சூழ்கிறான், தன் அரசுக்கு ஆசை கொண்டிருக்கிறான் என்று நன்குணர்ந்த பின்ன ரும், அவனை ஒன்றும் செய்யாமல் 'நீ பிழைத்துப் போ' என்று போகவிட்டது கைம்மாறு கருதா அன்பன்றோ? 'தஞ்சென மனிசர்பால் வைத்த சார்பினை, வஞ்சனை மனத்தினை, பிறப்பு மாற்றினை, நஞ்சினை உடன் கொடு வாழ்தல் நன்றரோ?' இவ்வளவு உணர்ந்தவன் வீடண னைக் கொல்லாவிட்டாலும், அவனை ஏன் சிறைப்படுத்தி வைத்திருக்கக் கூடாது? உட்பகையே பகைவரைக் காட்டி னும் கொடியது என்பதை உணராதவனோ இராவணன்?

தன் தம்பியை, தன்னால் வளர்க்கப்பட்டவனைத் துன்புறுத்த இராவணன் மனம் இடந்தரவில்லை. தனக்குக் கேடு வந்தாலும் வரட்டும், அவனைத் துன்புறுத்தினான் என்ற பழி வாராமல் இருந்தாற் போதும் என்று எண்ணி வீடணனை வெளியேறச் சொன்ன இராவணனுடைய அன்பு எத்துணைத் தூய்மை யானது!

---

# இராவணன் சூழ்ச்சி

## சூர்ப்பநகைப் படலம்

பகலோ என்று ஐயுறக்கூடிய அரியணையில் வீற்றிருக்கிறான் அரக்கர் கோமான்; அவையில் இந்திரன் முதலிய தேவர் பலரும் வீற்றிருக்கின்றனர். அங்கியங் கடவுளே நின்று ஒளி தருகின்றான். முக்கோடி வாணாளும், முயன்றுடைய பெருந்தவமும் 'உலகின் எத்திக்கிலும் உள்ளவர்களால் வெல்லப்படாய்' என்று இறைவன் தந்த வர பலமும் பொலிந்து விளங்கும் முகத்தோடு வீற்றிருக்கிறான் இலங்கை வேந்தன்; வெற்றியின் பெருமிதமும், யாவர்க்கும் தலைவன் என்ற எண்ணங் காரணமாகத் தோன்றிய செருக்கும், அவன் பத்து திருமுகங்களிலும் பிரதிபலிக்கின்றன. யாழின் ஒலியும், முழவின் விம்மலும், குழலின் ஓசையும் கலந்த இசையையே என்றுங் கேட்டுப் பயின்ற இலங்கை வேந்தன் செவிகளில் அழுகுரல் கேட்கின்றது. அறுந்த மூக்குடனும், சிதைந்த மார்புடனும், அலமந்த கண்களுடனும் தோன்றிய அவன் தங்கை சூர்ப்பநகை, மலையை அடிபணியும் மேகத்தைப் போல அவன் கால்களில் விழுந்து புரண்டாள். தங்கையின் அலங்கோலத்தைக் கண்ட இராவ-

ணன் முகத்தில் சினத்தின் குறி தென்பட்டது. ஆதிசேடன் நடுநடுங்கினான்; குல மலைகள் அதிர்ந்தன; திக்கஜங்கள் மூலைக்கொன்றாய் ஓடின; அவன் புருவம் நெரிந்ததைக் கண்ட தேவர் அஞ்சினர்; எமனே 'இன்று இறுதிக்காலம் வந்துவிட்டது போலும்' என்று அஞ்சினான். இராவணன் சினம் ஓங்கியது?

மடித்தபில வாய்கள்தோறும் வந்துபுகை முந்த
துடித்ததொடர் மீசைகள் சுறுக்கொள உயிர்ப்பக்
கடித்த கதிர் வாள்எயிறு மின்கஉல மேகத்(து)
இடித்த உரும் ஒத்(து)உரறி யாவர்செயல் என்றான்.

—(மாரீ. வதைப்படலம்: 49)

சூர்ப்பநகை, 'மானுடர் தடிந்தனர்கள் வாளுருவி' என்றாள்; இராவணன் சினம் அளவுகடந்து சென்றது. அவன் ஒருகணம் திகைத்துப் போய்விட்டான்; சூர்ப்பநகையின் சொற்களை எட்டுதிக்குகளும் எதிரொலித்தன போல் அவனுக்குத் தோன்றிற்று. 'மானுடர் தடிந்தனர்!' என்ற எதிரொலிகள் அவனைக் கேலி செய்வன போல் இருந்தன. இத்தோற்றம் உண்மையா? பொய்யா? என்றே அவனால் நிதானிக்கக் கூடவில்லை; திகைப்பு நீங்கச் சற்று நிதானித்தான்; கண்கள் நெருப்பைக் கக்கின அவள் கூறியவை உண்மையாய் இருக்கமாட்டா என்றே அவனுக்குத் தோன்றியது. அவள் அச்சங்காரணமாகப் பொய் கூறுகிறாளோ என்றும் ஐயமுற்றான். 'பொய் தவிர்; பயத்தை ஒழி; புக்கபுகல்' என்றான்.

அண்ணன் 'மானுடர் செயல்' என்ற பேச்சை ஏற்றுக்கொள்ளவில்லை எனச் சூர்ப்பநகை தெளிந்தாள். அவளை அவமானத்திற்கு ஆளாக்கிய ஆடவரைப் பற்றி விரிவாகக் கூறுகிறாள்; 'அழகு நிரம்பியவர்; வில் வித்தையில் தேர்ந்தவர்; வேதம் ஓதுபவர்; உன்னைத் துச்சமாக

மதிப்பவர்; இவ் வுலகில் இராக்கதர் குலத்தை வேரோடு களையச் சபதம் பூண்டவர்; ஒ ரொருவரே இறைவர் மூவரையும் ஒப்பார், தசரதன் மக்கள்; இராம இலக்கு வர் எனப் பெயர் படைத்தோர்,' என்று விவரமாகக் கூறக் கேட்ட பின்னரே, இராவணன் தன் தங்கையை அவமானப்படுத்தியதன் வாயிலாய்த் தன் வலிக்குப் பங்கஞ் செய்தவர் மானுடரே என்று ஏற்றுக்கொள்ளு கிறான்.

மருந்தனைய தங்கையின் மானம் நீங்கிய நிலையைக் கண்ட வுடனேயே கோபங் கொண்டவன் தேவர்களும், எமனும் நடுங்கும்படிச் சினத்தீயைத் தன் கண்களில் தோற்றுவித்தவன் இன்னும் சும்மா இருக்கக் காரண மென்ன? தங்கையின் நிலைக்குச் சொல்லொணுத வருத் தம் அடைந்தவன் 'யாவர் செயல்' என்று கேட்டதில் குற்ற மில்லை. 'மானுடர் கடிந்தனர்' என்று கேட்டும் வாளா இருந்தது வியப்பைத் தருகிறது! முதலில் அவன் 'மனிதர் இவ் வண்ணம் துணிந்து செய் திருக்கமாட்டார் கள்' என்று தன் பெருமிதங் காரணமாகக் கருதியதால், உடனே கோபித் தெழாது, அது நடந்த விதத்தைத் தங் கையை விவரிக்கும்படிக் கேட்டான் என்று கூறுவோமே யானாலும், சூர்ப்பநகை அவர்கள் மனிதர்களே என்று மயக்கம் நீங்கும் முறையில் அவர்கள் பெயர்களையும், பரம்பரையையும், அவர்கள் காட்டுக்கு வந்த காரணத் தையும் விவரமாகக் கூறிய பின்னரும், இராவணன் போருக்கு எழவில்லையே! திக்கயங்களையும், தேவரையும் வென்ற அவன் புயவலி என்னுயிற்று? கைலையை எடுக்கத் துணிந்த அவன் மனவலி மடிந்துவிட்டதா? இல்லை' என அவனே கூறுகிறுன். 'இத்தகைய வலிபடைத்த இராவ ணன் இன்னும் உயிரோ டிருக்கின்றுன்' என்று அவன் தன் தங்கையைத் தேற்றும் முறையில் கூறிய சொற்

களே அவன் இறை மாட்சியின் மாண்பை அறியும் வாயி லாய் அமைகின்றன.

சூர்ப்பநகை அழுதவாறு அண்ணன் கால்களில் வந்து விழுந்தது தன்னை அவமதித்தவரை அவன் பழி வாங்கவேண்டுமென்று கேட்டுக்கொள்வதற்கே. இதை இராவணன் உணராமல் இல்லை, தங்கையின் நிலையைக் காண அவனுக்கு வருத்தமும், அவளை அந் நிலையை யடையச் செய்தவர் மீது கோபமும் ஏற்பட்டன. ஆனால் தன் மனப் போக்கின்படி அவனை நடந்துகொள்ள முடியாமற் செய்தது அவனுடைய ஆண்மைக் குறை யன்று; அவன் வீற்றிருந்த அரியணையே! தங்கைக்காக வருந்தி, அவள் விருப்பப்படி அவளுடைய பகைவரை அழிக்க உறுதி கொண்ட இராவணன், இறைவனும் இருக்கின்றனன் அன்றோ' அத் தகையவன் தங்கையிடனித் துள்ள அன்பு காரணமாக, அவள் ஏன அவமானப்படும் படி நேர்ந்தது என்று ஆராயாமல், செயலில் இறங்குவது அவன் நிலைக்கு ஏற்புடையதாகுமா? இதை வற்புறுத்தக் கம்பர், 'கேட்டனன்; உரை கண்டிலன்; எழுந்தான்' எனக் கரன், சூர்ப்பநகை கூறியதைக் கேட்டவுடன் பொருக் கெழுந்ததைக் கூறுகிறார். கரன் எல்லையைக் காவல் புரியும் படைத் தலைவன் அந் நிலைக்குத் தக்கபடி தன் தங்கையை அவமானப் படுத்தியவரைக் கொல்ல உடனே எழுந்தான். ஆனால் இராவணன் வேந்தனன்றோ? இவன் எவ்வாறு ஆராய்ச்சி யில்லாமல், பழி யாருடை யது என்று தீர்மானிக்காமல், போருக்கு எழக்கூடும்?

அரசன் என்ற நிலையில் இராவணன் செயலை நாம் ஏற்றுக்கொள்ளுகிறோம்; ஆனால் சூர்ப்பநகை இதை அறிந்து கொண்டு ஆறுதலடைவாளா? மூக்கை யிழந்து வருந்தும் நிலையில், அவளை இவ்வளவு மேம்பட்ட பண் பாட்டைப் பெற்றிருக்குமாறு வற்புறுத்துவது நமக்கே

அழகுடையய தாகாது. இதை நம்மைப் போலவே நன்குணர்ந்த இராவணன்,

> 'எத்துயர் உனக்குள(து) இனிப்பழி சுமக்கப்
> பத்துள தலைப்பகுதி தோள்கள் பலஅன்றே!

'இனி உனக்கேன் கவலை? உனக்கு நேர்ந்தபழி என்னையே சேரும், என்னை விசாரப்பட விட்டுவிட்டு, நீ ஆறுதலடை' என்று தேறுதல் கூறியபோது நின்றுவிட வில்லை. இவற்றாலும் அவள் ஆறுதல் பெறமாட்டாள் என்று அவன் அறியாமலிருந் திருப்பானா? ஆகவே, அவள் 'தனக்காகத் தன் சோதரர் எதையும் செய்வார்' என்று ஆறுதலடையட்டும் என எண்ணி, 'கரன் உனக்கு உதவி செய்ய வில்லையா?' என்று கேட்டான்.

தங்கையின் நிலைக்கு உண்மையாய் வருந்திய இராவணன், அரசன் என்ற முறையில் தான் ஒன்றுஞ் செய்யக் கூடாமலிருப்பதை அவள் அறிந்துகொள்ள வேண்டாமென்ற நோக்கத்துடனேயே, அவள் நிலைக்குத் தான் வருந்துவதை விளித்துவிட்டு, 'என் தம்பி உனக்கு உதவி செய்ய வில்லையா?' என்றுங் கேட்டான். ஆனால் சூர்ப்பநகை இராவணன் மனோநிலையை உணரவில்லை. அவன் இன்னும் போருக் கெழாதது அவளுக்கு மிகுந்த மனக்கசப்பைத் தந்தது. அதை அவள் கூசாமல் வெளியிட வாய்ப்பளித்தது இராவணன் கேள்வி.

> சொல் என்றன் வாயிற்கேட்டார் தொடர்ந்தெழு சேனையோடும்
> கல்லென்ற ஒலியிற்சென்றார் கரன்முதல் காளைவீரர்
> எல்லொன்று கமலச்செங்கண் இராமன்என(று) இசைத்த எந்தல்
> வில்லொன்றில் கடிகைமூன்றில் ஏறினர் விண்ணில் என்றாள்!
>
> (மாரீ: வதைப்படலம்: 64.)

இவள் வாய்ச் சொல் கேட்டவுடன், ஆலோசனையின்றிப் போருக் கெழுந்த கரன் முதலியோர் காளைவீரராம்!

இராவணனைப் பற்றிய அவள் அபிப்பிராயத்தை, அவள் இன்னும் தெளிவாக எப்படி உரைத்திருக்கக் கூடும்? இராவணன் அவள் குறிப்பை உணராமலில்லை. இரு தலைக் கொள்ளி எறும்புபோல் அகப்பட்டுக்கொண்டு திண்டாடும் அவன் நிலை மிக இரங்கத்தக்கதன்றோ! தன்னைக் கரனைப்போல் அவளிடத்து அன்பிலாதவனாக அவள் கருதும்படிச் செய்துவிட்ட தன் நிலைக்கு வருந்தினான். இதுவரை கோபத்தையே வெளிக் காட்டிய அவன் கண்களனைத்தும், இப்பொழுது மின்னலோடு சேர்ந்த மழையைப் போல, சினத் தீயின் பொறிகளோடு கண்ணீரையும் பொழிந்தன எனக் கூறுவதன் மூலம் கம்பர் அவன் மனநிலையை நன்கு வெளிக்காட்டுகிறார். தங்கை அவமானப் பட்டதற்கே கண்ணில் நீரைச் சொரியாதவன், கரன் முதலிய வீரர் இறந்ததற்காக அழுதான் எனக் கூறுவது பொருந்தாது! இதைத் தெளிவாக வற்புறுத்த விரும்பியே கவி,

> தாருடைத் தானையோடும் தம்பியர் தமியன்செய்த
> போரிடை மடிந்தார் என்ற உரைசெவி புகாதமுன்னம்
> காரிடை உருமின்மாரி கனலொடு பிறக்குமாபோல்
> நீரொடு நெருப்புக்கான்ற நிறைநெடுங் கண்களெல்லாம்!

(மாரீ: வதைப்படலம்: 65)

என அவன் கரன் முதலியவீரர் இறந்ததைக் கேட்கு முன்னரே நீரைச் சொரியத் தலைப்பட்டான் என்று அறிவிக்கிறார். இவ்வாறு அவள் நிலைக்கு வருந்தி அழுத இராவணனுக்குக் கரன் முதலியோர் இறந்த செய்தி மேலும் திகைப்பைத் தந்தது. இப்பொழுது தங்கை பரிபவப்பட்டதோடு, தம்பியர் இறந்ததற்கும் அவன் வருந்தவேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது.

ஆயிடை எழுந்த சீற்றந்(து) அழுந்திய துன்பம் ஆழித்
தீயிடை உருக்கு நெய்யில் சீற்றத்தில் நாற்றஞ் செய்ய
நீயிடை இழைத்த குற்றம் என்னை சொல் நின்னை இன்னே
வாயிடை இதழும் மூக்கும் வலிந்தவர் கொய்ய என்றான்'

—(செ. 66)

தங்கையின் நிலை தோற்றுவித்த அவமானம், அவள் விருப்பப்படியே அவளுக்கு உதவி செய்ய முன் வர முடியாம லிருப்பதைக் குறித்து இரக்கம், அவள் தன்னிலையை உணராது, தன்னைக் குற்றஞ் சாட்டப் புகுந்ததற்கு வெறுப்பு, தன் நிலையைச் சற்றும் சட்டை செய்யாது மானிடர் தன் தங்கைக்கும் தனக்கும் பங்கம் விளைவித்ததால் ஏற்பட்ட கோபம் - இத் தகைய பல மனோநிலைகளில் மாறி மாறி வீழ்ந்து மயங்கி யிருந்த இராவணனுக்குக் கரன் முதலியோர் இறந்ததைக் கேட்டதும் பெருந் துன்பம் ஏற்பட்டது. 'தான் அவமானப்பட்டதோடு, என்னையும் வருந்தச் செய்து, என் தம்பியையும் கொல்வித்தாளே! இவள் இவ்வாறு செய்வதற்குத் தகுதி யுடையவள்தானோ' என்ற ஆராய்ச்சி இராவணனுக்கு ஏற்பட்டது. முன்னர், அவள் நிலைக்கு இரங்கி, அவளைக் கேட்கக் கூசியவன், இப்பொழுது தன்னை அவள் அன்பிலானாக மதித்ததையும், கரனைக் கொல்வித்ததையும் கருதி, 'இவ்வாறு உன்னை அவர்கள் அவமானப்படுத்த நீ அவர்களுக்கு என்ன குற்றஞ் செய்தாய்?' என்று கேட்டுவிட்டான்.

இராவணன் தன் கடமையை உணர்ந்த வேந்தன் மட்டு மல்லன்; மிகச் சிறந்த அறிவு நுட்பமு முள்ளவன் என்பதை 'அவர்கள் ஏன் இவ்வாறு செய்தார்கள்?' என்று கேட்காமல், 'நீ என்ன குற்றம் செய்தாய்?' என்று அவன் கேட்ட கேள்வியாலேயே அறிய முடிகிறது. காணாதவ ரிடத்தில் குற்றம் சாட்டுதல் அறி

வாளிக்கு அழகன்று. சூர்ப்பநகை தன் உடன் பிறந்தவளாதலால், இராவணன் அவள் குணத்தை நன்குணர்ந்தவனா யிருக்கவேண்டு மன்றோ? அவள், இப்பொழுது தன்னைப் பழித்ததைக்கொண்டே, அவள் குறையுடையவள் எனத் தெளிவாகத் தெரிந்துகொண் டிருக்க லாமன்றோ? இவ்வாறு உணர்ந்தும், அவன் தங்கையினிடத்து வைத்த அன்பால் குற்றமிழைக்காது, நடுவுநிலை வழுவாது நடந்துகொண்டது: அவன் அறிவின் எல்லைக்கு ஓர் எடுத்துக்காட்டு. 'வாயிடை இதழும் மூக்கும் வலிந்து அவர் கொய்ய' என்று அவன் கூறிய தொனியே, இவ்வாறு செய்ய எவரும் முன்வாரார் என்றும், செய்திருப்பதைக் கண்ணுற் காண்கிறு னுகையால், செய்தவர்க்குச் சூர்ப்பநகை பெருங் குற்றம் செய்திருக்க வேண்டும் என்றும் இராவணன் கருதினன் என்பதைக் காட்டுகின்றது. இத்தகையவ னன்றோ இறைவன்!

சூர்ப்பநகை இராவணன் கேள்விக்குப் பதில் கூறமுற்புவதை நோக்க, அவன் நியாயத் திறன் நுட்பம் விளங்குகின்றது. அவள் அண்ணன் இவ்வாறு கேட்பான் என்று எதிர் பார்க்கவில்லை. முன்னரே சீதையைப் பற்றிக் கூறி இராவணனை மயங்கச் செய்யவேண்டும் என்று சூழ்ச்சி செய்துகொண்டு வந்தவளே யானாலும், இப்பொழுது எதிர் பாராத விதத்தில் தாக்கப்படவே அவள் திகைப் படைந்தாள். எனினும், அவள் பெண்ணாய் இருந்ததோடு இராவணனுடனும் தோன்றியவளல்லளோ!

என்வயின் உற்றகுற்றம் யாவர்க்கும் எழுதொ ணுத
தன்மையின் இராம னேடும் தாமரை தவிரப் போந்தாள்
மின்வயின் மருங்குல் கொண்டாள் வேய்வயின் மென்றோள்
கொண்டாள்
பொன்வயின் மேனிகொண்டாள் பொருட்டினல் புகுந்த(து)
என்றாள்.

(ஷை: 67)

இராவணன் கேள்வி சூர்ப்பநகைக்குத் திகைப் பளித்ததைக் காட்டிலும், அவள் பதில் அவனைத் திகைக்க வைத்தது. இதுவரை இராம இலக்குவர், கர தூடணர், தன் தங்கை இவர்களே சம்பந்தப்பட்ட வழக்கு இஃது என்று எண்ணியிருந்தவனுக்குத் திடீ ரென்று ஒரு பெண் புகுத்தப்பட்டதோடு, துன்பம் எத னையும் தோற்றுவிக்கக் கூடாத இயல்புடைய அவளே இவ் வழக்குக்கு மூல காரணம் எனக் கூறப்படவே, அவன் நிலை தடுமாறினான். வழக்கின் விவரங்கள் அனைத் தும் அவன் மனத்தை விட்டு மறைந்தன. 'ஆரவள்' என்று ஆவலோடும், பரபரப்போடும் கேட்டான்.

சூர்ப்பநகையின் சூழ்ச்சி வெற்றி பெற்றது. தான பெற்ற வெற்றியை அவள் நன்கு உணர்ந்துகொண்டாள் போலும்! சீதையின் எழிலைச் சித்திரிக்க அவள் ஐம்பத் திரண் டடிகள் பேசியதே அதை உணர்த்துகின்றது. இராவணன் இவ்வளவையும் பொறுமையோடும், வியப் போடும், ஆவலுடனும் கேட்டான். முடிவில் இவற்றைத் தனக்குச் சொல்லிய சூர்ப்பநகையையே மறந்துவிட் டான்!

கரனையும் மறந்தான் தங்கை மூக்கினைக் கடிந்து நின்றான்
உரனையும் மறந்தான் உற்ற பழியையும் மறந்தான் வெற்றி
அரனையுங் கொண்டகாமன் அம்பினால் முன்னைப் பெற்ற
வரனையும் மறந்தான் கேட்ட மங்கையை மறந்தி லாதான்.

(ஷை: 83)

இராவணன் அறிவு நுட்பம் எங்கே! அவன் இறை மாட்சி எங்கே! இவைகளைச் சுட்டுப் பொசுக்கிய சூர்ப்பநகையின் சூழ்ச்சியின் திறத்தை என்னென்று வியப்பது?

கோதாவரி நதிக் கரையில் இராகவனைக் கண்டாள் சூர்ப்பநகை. கண்டதும் காதல் கொண்டாள். இராக்கதர்களையே கண்டிருந்த அவள் கண்களுக்கு, எழில் முற்றிய இராமன் வடிவழகு, மனமதனுடைய உருவமாகத் தோன்றியதில் வியப்பென்னை! தன்னந் தனியளாய்க் காட்டில் உழன்று திரிந்து வந்த தனுக்குச் சிறந்த பற்றுக் கோடு ஒன்று கிடைத்துவிட்டது, என்று எண்ணினாள்; இறும்பூது கொண்டாள்; அழகிய உருவத்தை எடுத்துக் கொண்டு அண்ணலின் முன் அன்னமென நடந்து சென்றாள். காட்டில் மிக்க எழிலை யுடைய ஒரு பெண் நாணத்தின் உருவெடுப்பாய்த் தன் முன் வந்ததைக் கண்ட இராகவனுக்குத் தன்னையே நம்பக்கூட வில்லை. 'உன் வரவு நல் வரவாகுக; நீ யார்?' என்று அவளைக் கேட்டபடி வரவேற்றான். அவனைத் தன் வழியே இழுக்க எண்ணிய சூர்ப்பநகை, தன் பரம்பரையை மிக்க பெருமையுடையதாகக் கூறிக் கொண்டு, தன்னை ஒரு கன்னி என்றும் அறிமுகப்படுத்திக் கொள்கிறாள். 'இராவணன் தங்கை' என்ற சொற்களைக் கேட்ட இராமனுக்கு ஐயம் எழுந்தது. 'ஆயின் நீ இவ்வளவு அழகுடையவளாய் இருக்கக் காரண மென்ன?' என்று அடுத்துக் கேட்டான் இராகவன். 'தவத்தின் தன்மையால் இந் நல் லழகுப் பெற்றேன்' என்றாள் நங்கை. 'நீ இராவணன் தங்கையாயின், அவனோடு செல்வத்தில் அழுந்திக் கிடக்காமல், இக் காட்டிற்கு ஏன் தனியே வந்தாய்?' என்று மேலுங் கேட்டான் இராமன். அரக்கர் வாழ்க்கை நெறி தனக்குப் பிடித்த மில்லை என்றும், ஆகவே முனிவர் உறையும் தபோவனத்தைத் தான் சார்ந்தாள் என்றும் கூறினாள். இராகவனுக்கு அவள் உரையை ஏற்றுக்கொள்வதா, கூடாதா என்று நிச்சயிக்க முடியவில்லை. எனினும், அவளோடு உரையாடு

வதை அவனால் நிறுத்தக்கூட வில்லை. 'என்னிடம் என்ன காரியம் பற்றி வந்தாய்' என்று கேட்டான் அவன்.

இராமன் மிகச் சிறந்த வாழ்க்கை நெறியை மேற்கொண்டவனே யாயினும், அவனால் மனித இயற்கையின் பிடிப்பினின்றும் மீறி நடக்க முடியவில்லை. சூர்ப்பநகையின் எழிலும், பேச்சும் அவனைக் கவர்ந்தன. அவளோடு அளவளாவும் அளவுக்கு அவன் தன் னிலையை மறந்து நடந்துகொண்டதை, காமவிகாரத்தால் பீடிக்கப்பட்ட சூர்ப்பநகை, தான் வெற்றி பெறுவதாகக் கொண்டதில் இழுக்கென்னை? 'இவள் அரக்கி; நீதி நிலையிலாள்; வேறு நோக்கத்தோடு வந்தவள்' என்று எண்ணிய இராகவன், 'நான் உன்னை மணக்க விரும்பவில்லை.' என்று தீர்மானமான பதிலைத் தாராது, 'அந்தணர் பாவை நீ; நான் அரசில் வந்தேன்.' என்று ஏன் கூறவேண்டும்? முள்ளை முள்ளால் எடுப்பது போலச் சூழ்ச்சியைச் சூழ்ச்சியால் வெல்ல வேண்டும் என்று கருதியா?

சூர்ப்பநகை தன்னைப் பற்றிக் கூறியவை யனைத்தும் பொய் என்பதை நாமறிவோம் ஆனால் அவள் இராமனிடத்துக் கொண்ட காதல் புனிதமானது; இதை அவள் அடுத்துக் கூறும் விடையே உறுதிப்படுத்துகிறது. 'என் தகப்பன் அந்தணனே யொழியத் தாய் அரச வம்சத்தைச் சேர்ந்தவள். நீ என்னை மணந்துகொள்ள முடியாததற்கு இதுவே காரண மானால், நான் உயிர் துறக்காமல் வேறென்ன செய்யக்கூடும்? என்றாள். இதுவரை இராமன் பேசிவந்த போக்கைப் பொருட்படுத்தாமல் விடினும், இப்பொழுது சூழ்ச்சிக்காரியாக உள்ள சூர்ப்பநகை தூய உள்ளத்தோடு (Sincere heart) பேசியதை இராகவன் உணராமல் இருந்திருக்க முடியாது. இதுவும்

ஒரு சூழ்ச்சி என்று கொண்டான் என்றாலும், அவன், 'நான் மணம் ஆனவன், ஆகவே உன்னை ஏற்றுக் கொள்ளும் நிலையில் இல்லை.' என்று உண்மையை உணர்த்தியிருக்க வேண்டும். 'வேறொரு பெண்ணை மணந்தவனை விரும்புவது பேதைமை' எனச் சூர்ப்பநகை அறிந்திருக்க மாட்டாள் என இராகவன் எண்ணினான் என்றால், அஃது அவன் குறைவைக் காட்டுமே யொழிய, அவன் நடத்தைக்கு விளக்க மாகாது. 'அரக்கரை மானுடர் மணப்பது பொருத்த முடைய தன்று எனப் பெரியோர் கூறுவர்' என்ற இராமன் வாதம், அவனுக்கு அவளிடத்தில் விருப்பம் உண்டு என்றும், ஆனால் பிறருக் கஞ்சி, அவன் அவளை மணக்க இசையக்கூடாத மன நிலையை உடையவனாய் இருக்கிறான் என்றும் அறிவிக்கின்ற வன்றோ?

இராகவனுடைய இப் பொருத்த மின்மை யாகிய வாதத்திற்கும் சூர்ப்பநகை தகுந்த பதி லளிக்கிறாள். 'நான் முன்னரேயே இராக்கதர் பழக்க வழக்கங்களைக் கைவிட்டுவிட்டு, தபோதனரைச் சார்ந்து, அவர்களுடைய மேலான ஒழுக்க முறைகளை மேற்கொண்டேன் என்று கூறினேனே!' என்றாள். இன்னும் இராமன் தன் விளையாட்டை விடவில்லை. உனக்குக் குபேரனும் இராவணனு மாகிய அண்ணன்மார் இருக்கையில், அவர்கள் கொடுக்கக் கொள்ளலாமே யொழிய, நீயே என்னைத் தேர்ந்தெடுப்பதை நான் விரும்பமாட்டேன்' என்றான். 'கந்தர்ப்ப முறையில் நடக்கும் மணத்தை வேதங்களும் ஒப்புகின்றன' என்றாள் சூர்ப்பநகை. மேலும் அவளை மணம் புரிவதால், இராமன் உலகில் ஒப் புயர் வற்ற வல்லமை யுடையவனாகவும், தேவர்களை ஏவல் கொள்ளத் தக்கவனாகவும் ஆதல் கூடும் என்றுஞ் சொன்னாள்.

நிருநர்தம் அருளும் பெற்றேன் நின்னலம் பெற்றேன் நின்றே(டு)
ஒருவருஞ் செல்வத்தியாண்டும் உறையவும் பெற்றேன் ஒன்றே
திருநகர் தீர்ந்த பின்னர்ச் செய்தவம் பயந்த(து) என்று
வரிசிலை வடித்த தோளான் வாளெயி(று) இலங்க நக்கான்.

—(சூர்ப்பநகைப் படலம: 56)

அவளை நையாண்டி செய்வதற்காக இராமன் இவ்வாறு கூறினான் எனக் கம்பர் கூறுவதால், நாம் ஒப்புகிறோமே யொழிய, உண்மையில், அவன் விரும்பியே இவ்வாறு கூறியிருப்பான் என்றே அவன் நடத்தை அறிவிக்கின்றது. கம்பர் கூறுவதைப் போல், இராமன் விளையாடினனே யானால், அவன் விளையாட்டுச் சாதாரணமான விளையாட்டன்று எனவே கூறவேண்டும். அதன் விளைவுகளில் கருத்தைச் செலுத்தாது இராமன் அவ் விளையாட்டில் ஈடுபட்டது மனித இயற்கையே யன்றோ! ஜானகி எதிர் பாராமல் அங்கு வந்தது, இக் காதல் நாடகத்தைத் திடீரெனத் தடைப்படுத்தியது.

ஜானகியின் சிறந்த அழகைச் சூர்ப்பநகை கண்டாள்; இராமன் தன்னைக் கண்டு மாமோகம் கொள்ளாததற்குக் காரணத்தையும் உணர்ந்தாள். காட்டுக்கு வந்த அரசன், மனைவியை உடன் அழைத்து வருவான் என்று யாரால் எதிர்பார்க்கக் கூடும்? ஆகவே, ஜானகி இராமனுடைய ஆசை நாயகி என அவள் எண்ணிக்கொண்டாள்; அவளை அப்புறப் படுத்தினால்தான், அவன் தனக் கருளுவான் என்று தீர்மானித்தாள். நினைத்தபடி செய்து முடிக்க, அடுத்த நாள் முயன்ற போது, இலக்குவனால் மூக்கரியப் பெற்றாள்.

மூக்கையும், காதையும் இழந்த வருத்தத்தில் சூர்ப்பநகை தன் அண்ணனை நோக்கி இரங்கி யழுதாள். 'உன் கொற்றமும், பெருமையும் என்னால் சிதைவுற்றனவே'

என ஏங்கினாள்; கர தூடணர்களைக் கூட்டிவர எழுந்தாள்; அவமானத்துடன் அவர்கள் எதிரே செல்ல நாணியவளாய் நிலத்தில் வீழ்ந்தாள்; அறுபட்ட மூக்கை தொட்டுப் பார்த்துக் கண்ணீர் வடித்தாள்; இந் நிலையில் இராகவன் எதிரே வரக் கண்டாள். 'உன் திருமேனியைக் காதலித்ததன் பரிசாய் என் அழகிழந்தேன்!' என்று கூறி அழுதாள். இராமன் அவளை அடையாளங் கண்டுகொள்ளவில்லை; 'நீயார்' என்று கேட்டான். சூர்ப்பநகை வெறுப்படையவில்லை; 'இராவணன் தங்கை' என்று மறுமொழி தந்தாள். அப்பொழுதும் இராமன் அவளைத் தெரிந்துகொண்டதாகக் காட்டிக் கொள்ளவில்லை. சூர்ப்பநகையும் மனம் தளரவில்லை. 'உம்மீது மோகங்கொண்டு நேற்று வந்தே னன்றோ?' என ஞாபகமூட்டினாள்.

> 'செங்கயல்போல் கருநெடுங்கண் தேமருதா மரைஉறையும்
> நங்கையிவர் எனநெருநல் நடந்தவரோ நாமென்ன'

இராமன் அவளை அடையாளங் கண்டு கொண்டதாக அறிவிக்கும் இப்பகுதி அவளை எ.நயாண்டி செய்கிறது. ஆனால் இதை அவள் உணர்ந்தாள் இல்லை. காமத்தின் தன்மை இதுவோ!

'நீங்கள் என் மூக்கை அரிந்த போதும், உங்களை நான் பகையாகக்கொள்ள வில்லை. என்னை ஏற்றுக்கொள்ளும்' என்று சூர்ப்பநகை கேட்டுக் கொண்டது: அவளுடைய காதலின் தூய்மையையும், ஆழத்தையும் காட்டுகிறது'. இவ் வளவில் சீதை இராமனுடைய மனைவி என்று உணர்ந்துகொண்டாள் சூர்ப்பநகை; 'என்னை இளையவனையாவது ஏற்றுக் கொள்ளச் செய்' என வேண்டுகின்றாள். இவ் வேண்டுகோளும் புறக்கணிக்கப்பட்டதோடு, அவளைக் கொல்லவும் இராமன் இசைந்த பின்னர்,

அவளுக்குக் கோபம் எழுகிறது. 'உங்களுக்குக் கூற்றுவ ஞகிய கரனை இதோ அழைத்து வருகிறேன்' என்று சொல்லிச் சென்ருள்.

'இராவணனுக்காக ஒரு பெண்ணைத் தூக்கிச் செல்லச் செய்த முயற்சியில், இவ்வாறு பரிபவப்பட்டேன்' எனச் சூர்ப்பநகை கூறியதைக் கேட்டவுடன், கரன் தன் சேனையைத் திரட்டிக் கொண்டு வந்தான்; இராம இலக்குவர்களோடு போர் புரிந்து மாண்டான். கரனும், தூடணனும், கணக்கற்ற சேனை வீரரும் மாய்ந் தொழிந்ததைப் பார்த்த பின்பும் சூர்ப்பநகையின் காதல் அவியவில்லை. அஃது அதிக மாயிற்று. எப்படியாவது இராமனையடைய வேண்டும் என்ற எண்ணத்தைத் திடப்படுத்திக் கொண்டாள் அவள்; இவ் வெண்ணம் ஈடேற ஒரு சூழ்ச்சி செய்தாள்.

சீதையை அப்புறப் படுத்திய பின்பே இராமனைத் தன்னைப் பற்றி நினைக்கச் செய்யக் கூடும் என்பதைச் சூர்ப்பநகை உணர்ந்திருந்தாள்; அதைத் தானே செய்து விட முயன்றதில் பரிபவப்பட்டாள்; அவமானமடைந்த ஆத்திரத்தில் கரதூடணர்களை இராமனேடு போர் புரியும்படி தூண்டினுள். போரில் கரனும், தூடணரும் அவருடைய சேனை வீரரும் மடிந்ததைக் கண்டதும், அவளுக்கு இராம இலக்குவர்களின் ஆற்றல் ஒருவாறு விளங்கிற்று. ஆகவே சீதையை அப்புறப் படுத்துவதைச் சூழ்ச்சியால் செய்து முடிக்கலாமே யொழிய, தன்னுல் இனி ஒன்றும் செய்ய முடியாது என உணர்ந்தாள். இராவணன் காரணன் அல்லன் எனினும் தன் புருடன் கொலை யுண்டதற்கு அவனே காரணன்! எனச் சூர்ப்பநகை தவருக எண்ணியிருந்ததோடு, அதற்காக அவனைப் பழி வாங்க வேண்டுமென்றும் எண்ணியிருந்தாள்... தன்னுல் காதலிக்கப்

பட்ட இராமன் வன்மை எத் தகையது என்பதைத் தன் மூக்கையும், கரதூடணர்களையும் பலியிட்டு உணர்ந்துகொண்டாள். அண்ணனைத் தொலைக்கக்கூடிய பேராற்றலுடையவன் இராமன் ஒருவனே என நன்குணர்ந்து கொண்ட சூர்ப்பநகை, தொடர்பில்லாத இராம இராவணருக்குள் பகைமையை மூட்டிவிடத் துணிவு கொண்டாள். இதனால் இராவணன் இறப்பது திண்ணம்! அதை அவள் வரவேற்றாள். இராமன் வெற்றியடைவதும் உறுதி! அதுவும் அவள் வேண்டியதே! இராவணன் பராக்கிரமம், இராமனை வெற்றி கொள்ள உதவியளிக்காவிடினும், சீதைக்கு ஊறுசெய்யப் போதியதாய் இருக்குமன்றோ? சூர்ப்பநகையின் சூழ்ச்சித் திறமை சாமானியமானதன்று.

இரைக்குநெடுர் பனையரக்கர் இறந்ததனை மறந்தனர்போல்
இராமன்துங்க
வரைப்புயத்தின் இடைக்கிடந்த பேராசை மனங்கவற்ற
ஆற்றளாகித்
திரைப்பரவை பேர்அகழித் திண்ணகரில் கடிதோடிச்
சீதைதன்மை
உரைப்பனெனச் சூர்ப்பநகை வரவிருந்தான் இருந்தபரி(சு)
உரைத்து மன்றே.

(மாரீசன் வதைப்படலம்: 1)

கரதூடணர் இறந்ததை அவள் மறந்தாள்; இராவணன் படப்போவதைச் சிந்திக்க மறுத்தாள்; இராமன் தோள்களின்மீது கொண்ட காதல் உந்தியதால், அண்ணனுக்குச் சீதையின் தன்மையை விரித்துரைக்க விரைவாய்ச் சென்றாள்.

மூக்கறுபட்டதற்காக அழுவதை, இராமனைக் கண்டவுடனேயே சூர்ப்பநகை நிறுத்திவிட்டாள், பின்னர்;

அவன், அவள் கருத்துக்கு இசைய மறுக்கவே, கரன் முதலியோரைக் கொண்டு அவனைத் தண்டிக்க வேண்டு மென்று உறுதிகொண்டாள். போர் அவள் எதிர்பார்த்த படி முடியவில்லை. கரனுக்கு ஒரு குரல் அழுதுவிட்டு, இப்பொழுது மீண்டும் இராவணனைக் காணச் செல்லு கையில், மீண்டும் மூக்கிழந்த துக்கத்தை நினைத்துக் கொண்டவள் போல் ஒப்பாரி வைத்தபடி அவள் சென் றாள். உண்மையில் அவள் மனம் இராவணனை மயக்கி, அவனை விட்டுச் சீதையை அப்புறப்படுத்தச் செய்து, நாம் இராமனை அடைவோம் என்ற இன்பக் கனவைக் கண்டபடியே இருந்தது. இந் நிலையை மறைக்கவே, அவள் ஒப்பாரியுடன் இராவணனைக் காணச் சென்றாள். அழு கைக் குரலையே என்றுங் கேட் டறியாத இலங்கையில், மக்கள் அனைவரும் கண்டு இரங்கும்படி, இவள் இரா வணனுக்கு நேர்ந்த பழியைத் தன் ஒப்பாரியால் பறை சாற்றிக் கொண்டு போகத் துணிந்திருப்பாளா? அளவு கடந்த துக்கங் காரணமாக இவள் அவ்வாறு செய்த தாகப் பிறர் எண்ணிக் கொள்ளவேண்டுமென்பதே அவள் நோக்கம்.

கரனைப் போலவே இராவணனும் தன் தங்கையைக் கண்டதும், 'இது யாவர் செயல்' என்று கேட்டான். மூக் கறியப்பட்டவுடன்,

'நகையாலே மூக்கிழந்து நாணமிலா நான்பட்ட
வசையாலே நினதுபுகழ் மாசுண்ட(து) ஆகாதோ?
திசையானை விசைகலங்கச் செருச்செய்து மருப்பொசித்த
இசையாலே நிறைந்தபுகழ் இராவணவோ இராவணவோ'

(சூர்ப்பநகைப் படலம்: 110)

என்று அரற்றியவள், இங்கு இராவணன் கேள்விக்குப் பதில் கூறும் முறையே விநோதமாய் இருக்கிறது. அவன்

கேள்விக்கு ஏற்ற அளவே விடை கூறுபவளைப் போல் அவமானஞ் செய்வித்தவரை மட்டும் குறிப்பிட்டாள். அதனையும், இராவணன் செருக்கிற்குத் தூபம் போடுபவளைப் போல் 'மானுடர் தடிந்தனர் வாளுருவி' என இகழ்ச்சிக் குறிப்புத் தோன்றக் கூறினாள்.

இராவணனுக்குச் சூர்ப்பநகை கூறியது அதிசயமாய் இருந்தது. 'மனிதர்கள் இவ்வாறு செய்யத் துணிவார்களா?' என்ற அவன் எண்ணம், தங்கை கூறுவனவற்றை ஏற்க மறுத்தது. விவரமாகக் கூறும்படி அவன் அவளைப் பணித்தான். அவள் மீண்டும் அவன் கேட்ட கேள்விக்குச் சரியானபடி பதிலளிக்காமல், இராம இலக்குவர் அழகு, வீரம் முதலியவற்றைப் பற்றிப் புகழ்ந்து பேசுவது குறிப்பிடத்தக்கது:

ஆறுபுனல் அஞ்சினம் அரக்கரை எனச்சென்(று)
ஏறுநெறி அந்தணர் இயம்பவுல கெல்லாம்
வேறுமெனும் நுங்கள்நலம் வேரொடும் அடங்கக்
கோறுமென முந்தையொரு சூளுறவு கொண்டார்,

(மாரீ : வதைப்படலம் 55)

என்று, இராக்கதர் குலத்தை அவர்கள் வேரறுக்க ஏற்றுக் கொண்ட சபதத்தைக் குறிப்பிட்டாள்: அவர்களுடைய ஆற்றலையும், பெயரையும், பரம்பரையையும் கூறினாள்.

இராவணனைக் காண வரும்பொழுதே சீதையைப் பற்றிக் கூறி, அவனை மயங்கச் செய்யவேண்டும் என்று திட்டம் போட்டுக் கொண்டு வந்த சூர்ப்பநகை, ஏன் இவ்வாறு இராமனைப் பற்றிப் பேசுவதில் காலந் தாழ்த்த வேண்டும்? அவளால் இராமனை மறக்க முடியாதது முக்கியமான காரணம்; அதுவேயுமன்றி இராவணனைத் தன் னிலைக்கு இறங்க வைத்துப் பின்னர் அவனுக்கு

இன்பத்தைத் தேடச் சென்று தான் பரிபவப்பட்ட தாகக் கூறுவது அவள் சூழ்ச்சி வெற்றி பெறுவதற்குத் துணையாய் இருக்குமன்றோ? அவள் முதலில் மானுடர் தடிந்தனர் எனக் கூறிவிட்டு, அதன் பின்னர் எவ்வளவுக் கெவ்வளவு அவர்களைப் புகழ்ந்து கூறுகிறாளோ, அவ் வளவுக் கவ்வளவு இராவணன் கோபம் அதிகமாகும்; அவர்களிடத்தில் தன் தங்கை பரிபவப்பட நேர்ந்ததே என்ற ஏக்கமும் அதிகமாகும். எத் துணைப் பராக்கிரம சாலிகளா யிருப்பினும் அவர்கள் மனிதரே யல்லரோ? மேலும் ஒருவனைக் கோபிக்க வைப்பதற்கு, அவனுடைய மாற்றானைப் புகழ்வதினும் சிறந்த வாயிலும் இல்லை யன்றோ?

சூர்ப்பநகை எதிர் பார்த்தபடியே இராவணன் அவள் நிலைக்குப் பெரிதும் இரங்கினான்; 'கரன் உதவி செய்ய முன் வரவில்லையோ?' என்று கேட்டான். சூர்ப்ப நகை மீண்டும் இராவணன் கேள்விக்கு விடை கூறுபவ ளைப்போல், அவன் ஆணவத்துக்குத் தூபம் போட் டாள்.

சொல்என்றன் வாயிற்கேட்டார் தொடர்ந்தெழு சேனையோடும்
கல்லென்ற ஒலியிற்சென்றார் கரன்முதல் காளைவீரர்
எல்லொன்று கமலச்செங்கண் இராமன்என்(று) இசைந்தவேந்தன்
வில்லொன்றில் கடிகைமூன்றில் ஏறினர் விண்ணில் என்றாள்.

(செ : 64)

கரன முதலியோர் இவள் சொல்லைக் கேட்டு எழுந்தனர் என்பது, 'நீ இன்னும் இங்கு இருக்கிறாயே' என்று இரா வணனைப் பழிப்பது போல் அமைந்திருக்கிறது. அவர்கள் இறந்தபடியைக் கூறுவதன் வாயிலாய், சூர்ப்பநகை, மீண்டும் இராமன் ஆற்றலை வற்புறுத்திவிட்டாள். இவ்வளவும் நிகழ்ந்த பின்பே, இராவணன், அவளை நீ

என்ன குற்றம் செய்தாய்?' என்று கேட்டான். சூர்ப்ப நகையின் பதில் மிகச் சாதுரியமாய் அமைந்திருக்கிறது. 'நான் செய்த தவறு ஓர் எழுதொணாத அழகுடையவளால் ஏற்பட்டது' என்றாள். இராவணன் ஆவலோடு 'ஆர் அவள்' என்றான். சூர்ப்பநகை வெற்றி பெற்றாள்; தான் வீசிய வலையில் இராவணன் விழுந்துவிட்டான் என்பதை மிக நன்றாக உணர்ந்தாள்; சீதையின் அங்க அழகுகளை விவரமாகக் கூறினாள்; இடையிடையே, 'நீ இவளை அடைந்தால்தான் பெருமையடைவாய் என்று வற்புறுத்தினாள்; அவன் அயர்ந்திருந்த சமயம் நோக்கித் தன் வார்த்தைகளை நம்பி, அவன் சீதையைக் கவரச் செய்யும் முயற்சியில், இராமனுக்கு ஊறு எதுவும் செய்யவேண்டாம் என்றுங் கேட்டுக்கொண்டாள்.

மீன்கொண்(டு) ஊடாடும்வேலை மேகலை உலகம்எத்தத்
தேன்கொண்(டு) ஊடாடும்கூந்தல் சிற்றிடைச் சீதைஎன்னும்
மான்கொண்(டு) ஊடாடுநீயுன் வாள்வலி உலகங் காண
யான்கொண்(டு) ஊடாடும்வண்ணம் இராமனைத் தருதி என்றாள்.

(செ : 64)

'நீ பிறந்ததன் பயனை இனியே—இவளைப் பெற்ற பின்பே—அடையப் போகிறாய்' என்று பேசியவள் 'இத்தகையவளை உனக்காகக் கவரச் செய்த முயற்சியில் நான் அவமானமடைந்தேன் எனக் கூறி முடித்தாள்.

கரன் முதலியோரைப் போல இராவணன் தன்னிடத்தில் மிக்க அன்புடையவன் அல்லன் என்று சூர்ப்பநகை எண்ணியிருந்தாள். அவன் அரசன் என்ற முறையில், கரனைப்போல் தங்கையைக் கண்டவுடன் போருக்கு எழாதது அவள் எண்ணத்துக்கு உறுதி யளித்தது. இது வன்றியும், அவள் சீதையைப்பற்றிப் பேசத் தொடங்கியது, அண்ணனைக் கவிழ்க்கச் செய்த சதி

யாகையால், தன் உண்மையான மன நிலையை அவன் எங்குக் கண்டு கொண்டு விடப் போகிறானோ என்று ஐயுற்ற அவள், 'வள்ளலே! உனக்கு நல்லேன். நின் மனையில் வாழும் கிள்ளைபோல் மொழியார்க் கெல்லாம் கேடு சூழ்கின்றேனன்றோ? என்று கூறுகிறாள்.

இராவணனோடு உடன் பிறந்தவளாகையால், சூர்ப்ப நகை அவனைப்பற்றி மிக நன்றாக அறிந்திருந்தாள். பல்லாயிர ஆண்டுகளாகப் போரின்மையால், சோம்ப லுற்று, பொழுது போக்காக இராவணன் விரும்பித் திளைத்த பெண்ணின்பத்தில் அவனுக்குள்ள பற்றுதலைச் சூர்ப்பநகை தன் சூழ்ச்சிக்கு அடித்தளமாக அமைத்துக் கொண்டாள். அவள் வெற்றி பெற்றிருப்பது, அவனு டைய குண விசேடத்தை அவள் எத்துணை நுட்பமாக அறிந்திருந்தாள் என்பதையே காட்டுகிறது. சீதையின் வருணனையைக் கேட்ட இராவணன் அனைத்தையும் மறந்தான். சீதையின் பெயர் ஒன்றே அவன் மனம் முழு வதையும் பற்றிக்கொண்டது.

"மயிலுடைச் சாயலாளை வஞ்சியா முன்னம் நீண்ட
எயிலுடை இலங்கை நாதன் இதயமாஞ் சிறையில் வைத்தான்!

ஆயிரம் மறைப பொருள் உணர்ந்தவன், தங்கை அவமானத்தைக் கண்டும் அரச நீதி வழாதவன், இப் பொழுது பெண்ணின்பம் காரணமாக, அயலான் மனைவி யின்மேல் மையல் கொண்டான். இராவணன் வீழ்ச்சி யின் முதற்படி இதுவே என்பதைக் கும்பகருணன்,

என்றொருவன் இல்லுறை தவத்தியை இரங்காய்
வன்றொழிலினுய் மறை துறந்து சிறை வைத்தாய்
அன்றொழிவ தாயின அரக்கர்புகழ் ஐய!

எனக் குறிப்பிடுகின்றான்.

*

# தீமையின் முதற்படி

மனிதனுக்கு இயற்கையாக உள்ள உணர்ச்சிகள் அனைத்தினும் காம உணர்ச்சி வன்மை வாய்ந்தது என அறிவோம். உலகம் தோன்றிய நாளி லிருந்து, இவ் வுணர்ச்சியை அடக்கியாள வழி தெரியாமல் அல்லலுற் றழிந்தார் பலர். இயற்கையிலேயே அமைந்து கிடக்கும் இவ் வுணர்ச்சியை, கல்வி என்னும் சாணையில் தீட்டிய அறிவாகிய வாளைக் கொண்டு அறுத் தொழித்தா லன்றி வாழ்க்கை பயனற்றதாய் முடியும். இவ் வுணர்ச்சியின் வன்மையை வியக்காத புலவர் உலகத் தில்லை; இதனை அவர்களுள் பலரும் பலபடியாகக் கூறி யுள்ளனர். ஆசிரியர் சாத்தனர் மணிமேகலையின் கூற்ருக இவ் வுணர்ச்சியின் வன்மையை எடுத்துக் காட்டி யிருக்கிருர். பளிக்கறையில் ஒளிந்திருந்தாள் மணிமேகலை. வெளியே நின்ற உதயகுமரன், அவ் வறைக்குள் செல்ல வழி காண முடியாமல் தவித்துத் திரும்பி விட்டான். அவன் சென்ற பின் வெளியே வந்த மணிமேகலை, தோழி சுதமதியை நோக்கி,

> 'கற்புத் தானிலள் நற்றவ உணர்விலள்
> வருணக் காப்பிலள் பொருள்விலை யாட்டிஎன்(று)
> இகழ்ந்தனன் ஆகி நயந்தோன் என்னது
> புதுவோன் பின்றைப் போனதுஎன் நெஞ்சம்
> இதுவோ அன்னய் காமத் தியற்கை.'

(மணிமேகலை: 5: 85-90)

எனக் கேட்கிருள். இத்தகைய வன்மையும், தன்மையும் உடையது தான் காமம. பகைவரிடத்தும், நட்பினரிடத்

தும், வேற்றுமை யின்றிச் செல்லும் தகைமையது இஃது ஒன்றே. எனினும் என்ன? மணிமேகலை இதனை அடக்கி வெற்றி பெற வில்லையா? நன்னெறிக்கண் சென்ற இயற்கை உணர்ச்சியையே அவள் அடக்கி விட்டாளே! தவறானது எனத் தான் உணர்ந்திருந்ததோடு, பலரும் புகழுக்குப் பங்கம் விளைவிக்கும் எனத் தடுத்துரைத்தும் இராவணன் இதனை வளர விட்டானே! மனிதனுக்குள்ள ஒருணர்ச்சி காமம் என்றில்லாமல், இராவணன் அதனையே தன் வாழ்க்கையின் தத்துவமாக வன்றோ கருதி விட்டான்! அரசியல் நெறி பிறழ்ந்து, தன் கடமைகளையும் மறந்து, முயன்று பெற்ற பெருமை, புகழ், கல்வி முதலிய அனைத்தையும் துறந்து பஞ்சையாம் ஒரு பெண் மகள்போலப் பரிதவிக்கத் தொடங்கி விட்டானே! செய்யத் தக்கது இது, தாகாதது இது என்ற ஆராய்ச்சி சிறிதும் இல்லாமல், மனம் செலுத்திய வழியில் வாழ முற்படுகின்றான் இலங்கை வேந்தன். இல்லை! வாழ முற்படச் செய்தது காமம். இதோ காணலாம் அவன் வாழ்க்கை முறைமையை:

'ஆக்கைதீய உள்ளம்நைய ஆவிவேவ தாயினன்.'
'ஊதுவன் துருத்திபோல உயிர்த்துயிர்த்(து) உயங்கினன்.'
'உரங்குடைந்து நொந்துநொந்(து) உளைந்துளைந்(து)ஒதுங்கினன்.'
'தென்றல்வந்(து) எதிர்ந்தபோது சீறுவானும் ஆயினன்:'

இவற்றால் அவனுடைய வாழ்க்கையே சீதையின்பால் கொண்ட காமத்தின் உரு வெடுப்பாய் மாறிவிட்டதைத் தெளியலாம்.

இத் தகைய மனோ நிலை கற்றறி வமைந்த ஒருவனுக்கு ஏற்படக் கூடுமா என ஐயுறலாம். அவ் வையத்தில் உண்மை இல்லாமல் இல்லை. சாதாரண நிலையி லுள்ள மனிதனுக்கு எல்லாப் பண்புகளும் ஒவ்வோர் அளவில்

அமைந்திருக்கும். இவற்றுள் ஒன்று சிறிது மிகின், வேறொன்று தாழ்ந்து கொடுக்கும். ஆனால், ஒரு சிலரிடத்து ஒன்றிரண்டு பண்புகள் மேலோங்கி யிருப்பதோடு அமையாது, இயல்பாய்த் தம் எழுச்சிக்கு விட்டுக் கொடுக்கும் பிற பண்புகளை மேலும் அடக்கி, அவற்றை வேரறுத்துத் தம் ஆட்சியைத் தாபிக்க முயலும். இவ்வாறு நேரும் சமயங்களில் உயர்ந்தெழும் பண்புகளுக்கும், பிற பண்புகளுக்கும் போராட்டம் நிகழும். இதுவே அவலச் சுவையை - கலப்பற்ற செம்மையான அவலச் சுவையை-பயக்கும் பண்பு வாய்ந்தது.

இயற்கை வரைந்த எல்லையை மீதூர்ந்து செல்லும் பண்புகளை யுடையவர்களே பெரியோராய்த் திகழ்வர். அவ்வாறு மீதூர்வது நற் பண்பாயின் ஆத்மாக்கள் மகாத்மாக்களாகவும், தீப் பண்பாயின் துராத்மாக்களாகவும் மாறுகின்றனர். நற் பண்புகள் மீதூர்வதால் மக்கள் மகாத்மாக்களாக மாறுகின்றனரே யன்றி, அவர் வாழ்க்கையுள்ளும் அந் நற் பண்பு இயற்கையை இறந்த அளவுக்கு வளர்ந்து விடுவதால், அது முதலில் தன்னோடு போரிடும் பிற பண்புகளை அழித்துவிட்டுப் பின்னர் இலக்கு ஒன்றும் அகப்படாமல், தன்னை வளரவிட்டவனையே பலி கொள்ளும். இதுவே அவலச் சுவையின் மாட்சி. இக் காரணம் பற்றியே அவலச் சுவை மிகச் சிறந்த இன்பத்தைப் பயக்கும பண்புடையதாய்த் தோன்றுகிறது. இன்பத்தையே யன்றி, மறக்க முடியாத படிப்பினையையும் இது மக்களுக்கு அறிவுறுத்தும் வல்லமை யுடைய தாகையால், கவிஞர் அனைவரும் இச் சுவையைச் சிறந்ததாக மதிக்கின்றனர். இதனைச் சித்திரிக்கும் நூல்கள் திரனாய் வாளரால் சிறந்தனவாக மதிக்கப்படுகின்றன.

இராவணன், உலகத்துப் பெரியார்களுள் ஒரு தனிப்பட்ட பெருமையை உடையவனுக்க் காட்சியளிக்கிறுன். அவனிடத்து, ஒன்றிரண்டு மட்டும் ஏன்? பல நற்பண்புகள் இயற்கையான எல்லையைக் கடந்து ஓங்கிக் காணப்படுகின்றன. ஆகவே தான், காமம் என்ற ஓர் அழிக்கும் பண்புக்கு-இராவணன் வாழ்க்கையில் தீ நெறிக்கட் சென்ற பண்புக்கு-அவன் இடமளித்து அழிந்தானேனும், கவி, அவன் திருமுகங்கள் இறப்பாலும் மடங்கு பொலிந்தன எனப் பாராட்டிப் பேசுகின்றுர்.

பல் லாயிரம் ஆண்டுகளாகப் போரிடுவதற்குத் தகுந்த எதிரி இன்மையால், இராவணன் வாழ்க்கையில் சோம்பல் புகுந்தது; வெறுப்புத் தோன்றிற்று. இயற்கை அவனை ஏதானுமொரு செயலில் ஈடுபடத் தூண்டிற்று. கல்வி, தவம், போர் முதலிய துறைகள் எல்லாவற்றிலும் துறை போகத் துய்த்தவனுகி விடவே, அவன் வாழ்க்கையை இன்பம் உடையதாகச் செய்ய, வேறு வழியின்றி, மகளிர் இன்பத்தில் மயக்கங் கொள்ள வேண்டி வந்தது. கலைகள் பலவும் இன்பத்தைத் தருமே யானுலும், ஓரளவுக்குமேல் சலிப்பைத் தருவதும் அவற்றின் இயற்கையே. கலைகளனைத்தையும் சலிப்பைச் சிறக்கத் தரும் அளவுக்குக் கற்றுத் தேர்ந்த பின், சலிப்பை அவ்வளவு இலகுவாக அளிக்காத போருமின்மையால், இராவணன் மகளிரிடம் பெறும் இன்பத்தில் முழு மனத்தையும் செலுத்தினுன். என்றும் சலிப்பே யின்றித் தோயத் தோயக் கவர்ச்சி யதிகமுடையதாய்த் தோற்றும் தகுதி வாய்ந்தது உலகத்தில் இது வொன்றே யன்றே? பிற கலைகளிற் போலவே, இதிலும் துறை போக இராவணன் முயன்றதில் வியப் பென்ன?

இராவணன் வாழ்க்கையில், இயற்கையின் கட்டாயத்தால் ஏற்பட்ட இப் போக்கை நன் கறிந்தாலன்றி நாம் அவன் மேன்மையை உணர்ந்தவர்களாகமாட்டோம். இதை நன்குணர்ந்த கவி, நம்மை விழிப்புடன் இருக்கச் செய்ய, இராவணனைப் புகுத்தும் காலங்களி லெல்லாம், அவனைச் சூழத் தேவ மாதர் இருந்ததை வற்புறுத்து கின்றார். அரியணையில் வீற்றிருக்கும் போதும், சேனையைக் காணச் செல்லும் பொழுதும், அவனுடன் அரம்பையர் தோற்ற மளிக்கின்றனர். தன்னை ஏற்றுக் கொள்ளும்படி சீதையைத் தூண்டச் சென்ற காலத்தில் கூட-சிந்தனைப் படலம்-இராவணன் மேனகை, உருப்பசி முதலியோரை உட னழைத்துச் சென்றான் என்று கவி கூறுபாரே யானால், இராவணன் மனத்தில் மகளிர் பெற்ற இடம் எவ்வளவு அகல ஆழங்களையுடையது என எளிதில் அறியலாம். அவன் மந்திரப் படலத்துள்ளும் அரம்பையர் கவரியோடு ஆடுந் தாரினாய்' இருந்தவ னலல்லனோ! சீதையை எடுத்து வரச் செல்கையில், அச் செயலை வஞ்சனையால் செய்ய முற்பட்டானாகையால், அவன் மகளிர் துணை யின்றிச் சென்றான் எனக் காரணம் காட்ட வேண்டி வருகிறது!

இராவணனுடைய உடன் பிறந்தவளாய் இருந்தமையால், சூர்ப்பநகைக்கு அவனுடைய இப் பண்பு நன்றாகத் தெரிந்திருந்தது. ஆகவேதான், இராமனை அடைவதற்குத் தடையாய் உள்ள சீதையை அப்புறப்படுத்துவதற்கு அவனே தகுந்தவன் என்று முடிவு கட்டினாள்; அத் தீர்மானத்துடனேயே, அவனைக் காண வந்தாள். வந்ததும், அதைப் பற்றிப் பேசினால், அவன் எங்குத் தன் சூழ்ச்சியைத் தெரிந்து கொண்டு விடுவானோ என்றஞ்சி, அவன் கேட்கக் கேட்க ஒவ்வொன்றாய்த் தான் பரிபவப் பட்ட வரலாற்றைப் பகுத்துக் கூறி, பின்னர், முடிவில்

சீதையை வருணித்து, அவளிடத்தில் அவன் ஈடுபட்டதை உணர்ந்த பின்னரே, அவளை அவனிடம் சேர்க்கச் செய்த முயற்சியே தன்னை அவமானத்திற் காளாக்கியது என முடித்தாள். சூர்ப்பநகை நினைத்தபடியே இராவணன், சீதையை யடைய வேண்டும் என்ற எண்ணத்தை மிக் குடையவனாய், அவளே நினைவாக வருந்தி யிருந்தான். அவள் உருவைக் கண்டது போன்ற உணர்ச்சி தோன்றியதும், சூர்ப்பநகையை வர வழைத்து 'நான் கண்ட இவ் வுருவம் சீதை யினுடையதா?'-என்று கேட்டான் இவன் சீதையைக் குறித்து வருந்தியதுபோல் அவளும் இராமனைக் குறித்து வருந்தியிருந்தா ளாகையால், 'அஃது இராமன் உரு' என்று கூறினாள். இராவணன் திகைத்தான். அவள் ஏன் மாருட்டமாகப் பேச வேண்டும் என்று அவனுக்கு விளங்கவில்லை. 'நீ ஓயாது சீதையின் நினைவாய் உழல்வதால், நீ கண்டது உன் மனக் கற்பனையே' என்று சூர்ப்பநகை விளக்கினாள். ஆயின் நீ எப்படி இராமன் என்று சொன்னாய்? என அவன் கேட்டான். 'என்று என்னை அவமானப்படுத்தினானோ அன்றுதொட்டு என்னாலும் அவனை மறக்க முடியவில்லை' என்று கூறினாள் வஞ்சி. அவள் சமாதானத்தை அண்ணன் ஏற்றுக் கொண்டான்; 'என்னை வருத்தும் சீதையின் நினைவினின்றும் எப்படி விடுபடுவேன்?' என்று அவளையே கேட்டான். சூர்பபநகை காட்டும் வழி கருதற் குரியது

'நோமான் உலைதக்(கு) ஒருநீ குறைகின்ற(து) என்னே
பூமான்கு மலான் தன்னை வெளவு தீபோதி என்குள்'

இங்குச் சூர்ப்பநகை சீதையை வஞ்சத்தால் கவர்ந்து வர வழி கூறுகிருள். இவ்வாறு நிகழ்ந்தால்தான் இராமனுக்கு ஊறு நேராமல் இருப்பதோடு, தனக்கு உதவி

யாகச் சீதையும் நீக்கப்படுவாள். பேரறிஞனாகிய இராவணன் பெண்ணின்பங் காரணமாகத் தகாத நெறியில் சீதையை மனத்தில் சிறை வைத்துத் தன் அழிவுக்கு ஏற்பட்ட பாதையில் முதலடியை வைத்தான். இப்பொழுது இன்னொரு பெண்ணின் பேச்சைக் கேட்டவனாய், ஆராய்ச்சியின்றி இரண்டாம் படியில் காலை வைக்க உறுதி கொள்ளுகின்றான்.

சீதையை வஞ்சத்தால் கவர்ந்துவரத் தீர்மானித்த இராவணன், மாரீசன் உதவியை நாடி அவனிடம் சென்றான். அவனுக்குச் செய்தி சொல்லுமுன், தனக்கும், அவனுக்கும் மாறாத பழி நேர்ந்து விட்டது எனக் கூறிப் பின் 'இராமன் மனைவியை கவர்ந்துவர உன்னைத் துணையாகக் கொள்ள வந்தேன்' என்று கூறுகின்றான்.

'வெப்பழி யாதென் நெஞ்சுமுலந்தேன் விளிகின்றேன்
ஒப்பழி வென்றே போர்செய லொல்லேன் உடலாவாழும்
துப்பழி செவ்வாய் வஞ்சியைவெளவத் துணைகொண்டிட்(டு)
இப்பழி நின்னால் தீரிய வந்தேன் இவண் என்றான்'

(மாரீ. வதை: 175)

மாரிசனுக்கு இந்நோக்கம் சற்றும் பிடிக்கவில்லை. சிறந்த நிலைக்குத் தன்னை முயன்று உயர்த்திக் கொண்டவன், தானே பழியையும், பாவத்தையும் இறுதியையும் தேடிக் கொள்வது அவனுக்கு மிக்க வருத்தத்தை அளித்தது.

'திறத்தி னாலோ செய்தவம் முற்றித் திருவுற்றாய்
பறத்தினா லோ சொல்லுதி சொல்லாய் மறைவல்லாய்!
அறத்தினாலே எய்தினை யன்றோ அது நீயும்
புறத்தினாலே பின்னும் இழக்கப் புகுவாயோ'

(ஷை: 179.)

மாரீசனுக்குத் தெரிந்த அளவுகூட அறம், மறம் இவைகளில் வேறுபாடு இராவணனுக்குத் தெரியவில்லையா

அது வன்று; காம மயக்கம் இராவணனை அவைகளுக்குள்ள வேறுபாட்டை உணர வொட்டாமற் செய்து விட்டது. 'நான் வேண்டியபடி செய்யா விட்டால், உன்னைக் கொல்வேன்' என்று தான் உதவி வேண்டிச் சென்ற மாமனையே எச்சரிக்கத் தூண்டிற்றென்றால், அதன் வன்மை எத்தகையது! மாரீசன், இவனுக்கு நன்மை தீமைகளை எடுத்துக் கூறுவதிற் பயனில்லை என்று உணர்ந்து கொண்டான். அவன் கையால் உயிரிழப்பதினும், இராமன் அம்பால் உயிர் துறப்பது சிறந்தது என முடிவு செய்து கொண்டான். எனினும், நல்லவனாய் வாழ்ந்து பெருமை பெற்ற இராவணன் பழி யெய்துவதைத் தடுக்க மீண்டும் முயற்சித்தான். நன்மை தீமைகளை மறந்தாலும், இராவணன் தன் வீரத்தைப் பழிப்பதை பொறுக்க மாட்டான் என்று எண்ணியவனாய்,

'புறத்தினி உரைப்ப தென்னே புரவலன் தேவி தன்னைத்
திறத்துழி யன்றி வஞ்சித்(து) எய்துதல் சிறுமைத தாகும
அறத்துள(து) ஒக்கு மன்றே அமர்த்தலை வென்று கொண்டு
மறத்துறை வளர்த்தி மன்ன என்னமா ரீசன் சொன்னான்.'

(மாரீ: வதை: 206)

சுத்த வீரன் என்று எண்ணிக் கொள்ளும் எவனுக்கும் இது படாமல் இருக்காது. இராவணனோ, சற்று முன்னரே,

திக்கயத் தொளிப்பநிலை தேவர்கெட வானம்
புக்கவர்இ ருக்கைபுகை வித்துஉலகம் யாவும்
சக்கரம்ந டத்துமென்னை யோதயர தன்தன்
மக்கள்நலி கிற்பர்இது நன்றுவலி யன்றே.'

—(ஷெ 198)

எனக் கூறி மார்தட்டிக் கொண்டான். இருந்தும் மாரீசன் கூறிய செந் நெறியிற் செல்ல அவனுக்கு விருப்ப மில்லை. அதற்கு அவன் கூறும் காரணமும் விநோத மானது.

'ஏனையர் இறக்கின் நானும்தமியளாய் இறக்குமன்றே
மான்அவள்ஆத லாலே மாயையின் வலிந்தும் என்றான்.'

இராமன் இறந்தது கேட்டால், அவளும் உடனே இறந்துபடுவளாம்! அவளைப் பின்னர் அடைவது எப்படி? இராவணன் காம மயக்கத்தால். அறி வற்றவனாகி விட்டான் என்பதற்கு வேறு சான்று எதற்கு? புருடன் இறந்தது கேட்டு, இறக்கும் கற் புடையவள், பிற புருடனை ஏற்றுக்கொள்ள மன மொப்புவாளா என அவன் சிந்திக்காதது ஏன்?

காமமும், கள்ளும் ஒரே தன்மையை யுடையன. அவை தம்மை விரும்பினார் அறிவை முதலிற் பற்றிக் கொண்டு, பின்னர் அவர் உயிருக்கு உலை வைக்கும் பண்புடையன. காமத்தால் பீடிக்கப்பட்ட இராவணன், முதலில் தன்னறிவை இழந்து, சானகியை மனத்தே சிறை வைத்தான். பின்னர், அரச நீதி, புகழ், பெருமை முதலியவற்றை மறந்தான்; சூர்ப்பநகையை மந்திரியாக ஏற்றுக் கொண்டான். மாரீசனை, 'நீ மந்திரித் தொழிலை ஏற்றுக் கொள்ள வேண்டாம். நான கட்டளையிடுகிறபடி நட' என்று ஆணையிட்டான்; தன் வீரத்தையும் மறந்து, இப்பொழுது வஞ்சனையால், சானகியைக் கவர முற்பட்டான். தன்னால் ஒரு பொருளாக நினைப்பதற்கும் தகுதியற்ற மானுடன் என்று இராமனைக் கருதும் இராவணன் அவன் மனைவியை வஞ்சனையாற் கவர்ந்து செல்வதற்குக் காரணமும் கற்பிக்க முன் வந்தது, அவன் அழிவை நோக்கி இரண்டாம் படியில் காலை ஊன்றிவிட்டான் என்பதையே எடுத்துக் காட்டுகிறது.

# தீமையின் வளர்ச்சி

ஒரு கல்லை நீரில் எறிந்தால், உடனே அலைகள் தோன்றும். எறியப்பட்டது எத்துணைச் சிறிய கல்லோ அதற்குத் தக்கவாறு அலைகளின் தோற்றம், வேகம், அளவு முதலியவைகள் மாறுமே யொழிய, அவை தோன்றாமலேயே இருக்க மாட்டா. இத் தத்துவத்தைப் போன்றதே மக்கள் செயல்கள் விளைவுகளைத் தோற்று விப்பதும். கல்லால் தோற்றுவிக்கப்படும் அலைகளில் நல்லவை தீயவை என்ற பாகுபாடு இல்லை. ஆனால், மக்கள் செயல்களிலும், அவை தோற்றுவிக்கும் விளைவு களிலும் இப் பாகுபாடு உண்டு. கல்லும், அது தோற்று விக்கும் அலைகளும் அஃறிணைப் பொருள்க ளாகையால் அவைகளில் நன்மை, தீமை என்ற பாகுபாடுகளுக்கு இடம் இல்லை. ஆனால் செயல்கள் மக்களைக் கருத்தாவா கக் கொண்டு தோன்றுவன வாகையால் அவைகளைப் பாகுபாடு செய்து உபசரிக்கிறோம். அவ்வாறே செயல் களின் விளைவுகளும் பாகுபாடு செய்யப்படுகின்றன.

இராவணன் பிறன் மனைவியிடத்தில் காதல் கொண் டது ஒரு தீச் செயல். இதை அக் காவியத்தில் பங்கெடுத் துக் கொள்பவர் அனைவரும் வற்புறுத்திக் கூறுகின்ற னர். அவன் செய்த தீமை, மனத்தால் தீமையை நினைத்த தோடு நின்றுவிடவில்லை. நினைப்புக், காரியப்படும் அள வுக்கு அதிகரிக்கிறது. இம்மட்டோ! இராமனை வஞ்சித் துச் சீதையைக் கவர்ந்த அளவுக்கு விரி வடைகின்றது. மாரீசன் இத் தீச் செயலின் திறத்தை நன் குணர்ந்திருந் தான். ஆனால் இராவணனை அவனால் மாற்றமுடியவில்லை. இருப்பினும், மாரீசன் இராவணனுடைய தீச் செயலின்

எல்லையையாவது குறைக்கலாம் என நம்பிச் சீதையை வஞ்சனையாற் கவர்வது அவனுடைய வீரத்துக்கு ஏலாதது என்று கூறினான்; ஆனால் இராவணன் அசைந்து கொடுக்கவில்லை.

ஒரு பழம் கெடத் தொடங்கினால், அதை உடனே கவனித்து அழுகிய பகுதியுடன் அதை ஒட்டிய பகுதியையும் அறுத்தெறிந்தால் தான், எஞ்சியுள்ள பழமாவது மிஞ்சும். இல்லையேல், பழம் முழுவதும் சிறிது சிறிதாக அழுகிக் கொண்டே வரும். சீதையை இராவணன் மனத்தில சிறை வைத்தது ஒரு தீச் செயல். இதன் விளைவினின்றும் அவன் தப்ப வேண்டுமானால், அவ்வெண்ணத்தை முற்றிலும் கைவிடுவதோடு, சில காலம் அதற்குத் தன் மனத்தில் இடங் கொடுத்ததற்கும் பரிகாரமும் செய்ய வேண்டும். இவ்வாறு இராவணனைச் செய்விக்க மாரீசனால் முடியவில்லை. ஆகவே அவன் சீதையைப் பற்றிக் கொண்ட கருத்தோடு இராவணன் பொறுப்பு நிற்கட்டும் என எண்ணி அவன் வீரத்தைப் பழித்தான். இங்கு, மாரீசன் கையாண்ட விரகு, ஓடும் குதிரையை நிறுத்த முற்படும் ஒருவன், அதை அதன் இச்சைப்படி ஓடவிட்டுப் பின் நிறுத்துவதை ஒக்கும். மாரீசன் நோக்கம், இயற்கையின் போக்குக்கு ஒத்ததே. ஆனால் 'நாம் முரட்டுக் குதிரையை வசப்படுத்த நல்ல குதிரையை வசப்படுத்தும் வழியைக் கையாளுகிறோமே' என்று எண்ணாமல் இருந்ததுதான் அவன் செய்த பிழை. இதன் காரணமாக இராவணனை மாற்ற முடியாமற் போனதோடு, அவனும் உயிர் இழக்க நேர்ந்தான்.

இராவணன் தான் எண்ணியபடியே செய்து முடித்தான். இயற்கையும், அதன் தவிர்க்க முடியாத நெறியே சென்றது. அவன் செய்த தீமைகளுக்குத் தக்கபடி விளைவு

கள் தோன்றின. அவைகளைக் கண்டு இராவணனே கலங்கினுன் என்றால், அவற்றின் தீமையின் எல்லைக்கு அளவு கற்பிக்கக் கூடுமா? அநுமன் அசோக வனத்தை அழித்தான்; இலங்கையை எரித்தான். மூன்றுலகங்களையும் வென்று ஆண்டவனாகிய இராவணனே இவ் வழிவுகளைக் கண்டு கலங்கினுன். மயனைக் கொண்டு. அநுமன் இழைத்த இன்னல்களுக்குப் பரிகாரம் தேடிக்கொண்ட பின்னரும், இராவணன் கலக்கம் நீங்கவில்லை.

மிகப் பெரிய பொருள்களைப் பற்றிச் சிந்திப்பதற்கே அரசர், மந்திர சபையைக் கூட்டுவர். அநுமன் இலங்கையை அழித்ததற்குப் பயந்தே இராவணன் மந்திர சபையைக் கூட்டினுன். மிகச் சிறந்தவர்களை மட்டுமே அச் சபையில் இருத்தி, நண்பரைக் கூட வெளியேற்றி, உலகு ஒருங்கே வந்தாலும் பிசைந்தழிக்கும் ஆற்றல் வாய்ந்த காவலாளரை நியமித்ததோடு, வண்டுகளையும் காற்றையுங் கூட வரவொட்டாமல் தடுத்தான் என்றால், இராவணனுக்கு அநுமன் செயல்கள் எத்தகைய அதிர்ச்சியைத் தந்திருக்கவேண்டும்!

இராவணன் சபையைக் கூட்டியது 'இனி நடக்க வேண்டுவது என்ன?' என்று ஆராய்வதற்கு. அதைப் பற்றித் தான் ஒன்றும் பேசாமல், அவன், நடந்துவிட்டவைகளைக் குறித்து ஏங்குவதோடு, இவ்வாறு நடக்க விட்டமையைக் காட்டிலும் தனக்குத் தாழ்வு வேறு உண்டோ எனக் கேட்கிறுன். அழிவைச் செய்த அநுமன் இன்னும் இருக்கின்றுன் என்ற எண்ணம் அவனைப் பெரிதும் வருத்துகின்றது. இராவணனுடைய செயல் 'இவன் ஒரு வீரனு?' என்று நம்மைக் கேட்கத் தூண்டுகிறது. அழிவுக்குத் துன்பமோ, ஏக்கமோ அடைவது வீரருக்குப் பெருமையன்று. இராவணன் இதற்காக

மந்திர சபையைக் கூட்டியதே அவன் மனம் சரியான நிலையில் இல்லை என்பதைக் காட்டுகிறது. அச் சபையில் அவன் கழிந்ததற்கு இரங்குவது 'வீரம்' அவனை விட்டுச் சென்று விட்டது என்பதை எடுத்துக் காட்டும் அறிகுறியே யன்றி வேறன்று. எனினும் இராவணன், பின்னர் வீடணனுக்குப் பதில் கூறு கையில், 'நான் கைலையை எடுத்தவனுயிற்றே! திக் கயங் களை வென்றவனன்றே! மூவரும் சேர்ந்து வந்தாலும் மயங்குவேனே?' என்றெல்லாம் இறுமாப்புடன் பேசு கிறன். அவன் இப்பொழுதைய நிலையை நன்குணரும் நமக்கு அவை சிரிப்பையே விளைவிக்கின்றன. இவற்ருல் இராவணன், ஒரு காலத்தில் மிகச் சிறந்த வீரனுக இருந் தான் என்றும், ஆனல் இப்பொழுது பழம் பெருமையைப் பிதற்றும் பேதையாக மாறிவிட்டான் என்றும் உணர் கிருேம். வீரத்துக்கு இருப்பிடமாக இருந்தவன் இவ் வாறு முழு மாற்றம அடையக் காரண மென்னை?

நன்னகர் அழிந்ததென நாணினை நயத்தால்
இன்னுயிர் எனத்தகைய நேசியர்கள் உன்மேல்
மன்னகை தரத்தர ஒருத்தன்மனை உற்ருள்
பொன்னடி தொழத்தொழ மறுத்தல்புகழ் போலாம்.

(மந்திரப்படலம் : 50)

இராவணனைத் தன் உயிர்களைப் போல் நேசிக்கும் தேவியர்கள், அவன் காம மயக்கத்தில் ஆழ்ந்து அல்லற் படுவதைக் கண்டிரங்கி, அவனை முன்னிலும் பன்மடங்கு அதிகமாக நேசிக்கின்றனர்; ஆனல் அவை இராவணனை ஆற்றுவதை விட்டு, அவனுடைய தாபத்தை அதிகப் படுத்தவே பயன்படுகின்றன. அவன் சீதையின் கால் களில், அவள் மறுக்க மறுக்க, மேலும், மேலும் வீழ்ந்து ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுகிருன். இது புகழ் தரும்

செயலா ? 'இத்தகைய தாழ்வை இன்பமென ஏற்றுக்கொள்ளும் நீ, நகரின் அழிவைக் கண்டு நாணுவானேன்? உனக்கு நாசம் என்ற உணர்ச்சி இருக்குமேயானால், இம் மயக்கத்திலிருந்து விடுபட மாட்டாயா ' எனக் கும்பகருணன் கேட்கிறான். இதனால் காம மயக்கம் காரணமாக, இராவணன், தன் வீரத்தை மட்டும் இழந்து விடவில்லை; புகழையும் போக்கிக் கொண்டான என விளங்குகின்றது.

மன உரம் மிக்குடைய எவரும், எக் காரியத்தைச் செய்ய எடுத்துக் கொண்டார்களோ, அதை வெற்றியடையச் செய்வதிலேயே தம் முழு ஆற்றலையும செலவிடுவர். இப் பண்பு காரணமாகவே அவர்கள் மக்களுள் உயர்ந்தோராக மதிக்கப்படும் பெருமையை யடைவர். இராவணன், சீதையின் நினைவால் உழந்து வருந்துவதும், அவளை வெற்றி கொள்ளச் செய்யும் முயற்சியில், மற்றெல்லாவற்றையும் கவனிக்காம லிருப்பதும், இயற்கையான மனித உணர்ச்சிகளுக்குக் கூடத் தன் மனத்தில் இடமளிக்காமல் இருப்பதும் அவன் மன உரம் பெரிதும் படைத்தவன் என்பதைக் காட்டுகின்றன. ஆனால், அவன் அதனைச் செயற்கரிய செயலைச் செய்வதற்குப் பயன் படுத்தாமல், செயற் குரித் தல்லாத செயலைச் செய்வதில் செலுத்துகிறான். ஆகவே தான் வெற்றி யடையாததோடு, தான் ஏற்கெனவே ஈட்டியிருந்த புகழையும இழக்கிறான். வீரம், மானம் என்ற உணர்ச்சிகள் மழுங்கி விடுகின்றன. இல்லையேல், மந்திர சபையில் இருந்த ஒவ்வொருவனும், 'நான் அப்பொழுதே சீதையைக் கவர்ந்து வருதல் பழிச் செயல்' என்று சொன்னேனே, அதற்கு நீ செவி சாய்க்காமல் இப்பொழுது அழுகிறாயே! என்று பழித்துக் காட்டியும், அவன் அவற்றைப் பொருட் படுத்தாமல் இருந்திருப்பானா ?

உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினும் காமம் இனிது.

—(திருக்குறள்: 1201)

கள் குடித்த பின்பே மயக்கத்தைத் தரும்; அம் மயக்கமும் சிறிது நேரம் கழித்து நீங்கிவிடும். ஆனால் காமம் நினைத்த மாத்திரத்திலேயே மயக்கத்தைத் தரும். அம் மயக்கம் நீங்குவதும் அரிது. நினைக்குந்தோறும் மயக்கம் மிகுதியாகு மன்றோ? கிடைத்தற்கரிய ஒரு பெண்ணினிடத்தே காதல் கொண்டான் இராவணன். நல்லதோ, தீயதோ அவளைத் தன் அரண்மனைக்குக் கொண்டு வந்தாயிற்று. அவள் உடலை அவன் சிறைப் படுத்தி யாயிற்று, இவ் வெற்றி, 'இனி அவள் மனத்தை யும் முயன்றால் சிறைப்படுத்தி விடலாம்' என்ற நம்பிக் கையை இராவணன் மனத்தில் தோற்றுவித்துவிட்டது. இந் நம்பிக்கையால் சிறைப் படுத்தப்பட்ட இராவணன் தன் வீரம், புகழ் முதலியவை அழிவதைக் காணும் சக்தி இல்லாதவனாய் இருந்ததில் வியப்பென்ன!

'வீரம், மன உரத்தை நிலைக்களனாகக் கொண்டது. இராவணன் மனம் இப்பொழுது முற்றிலும் சீதையைத் தன் வசப்படுத்துவதில் ஈடுபட்டிருப்பதால், அதைப் பற்றுக்கோடாகக் கொண்டு வளர்ச்சி பெற்றிருந்த 'வீரம்' நிலைக்களன் இல்லாத காரணத்தால் அழிந்தது. 'வீரம்' இம்மைப் புகழையே பயக்கும் தன்மை யுடையது; ஆகவே, இராவணன் அதை இழந்ததால், இம்மையில் பெறும் பயனை இழந்தான். 'புகழ்' வீரத்தைப் போன்ற தொன்றே. அதுவும் மனத்தையே நிலைக்களனாகக் கொண்டது.'

'வீரம்', 'புகழ்' என்ற இரண்டும் அவாவைக் காரண மாகக் கொண்டு தோன்றுவன. 'வீரம்' இம்மை யின்

பத்தை அளிப்பதோடு நின்று விடுகின்றது. ஆனால் 'புகழ்' மறுமை யின்பத்தையும் அளிக்க வல்லது. வீரத்தைப் போல் முற்றிலும் மனத்தின் திரிபாகவே அமையாமல், 'புகழ்' அறிவையும் பற்றுக் கோடாகக் கொண்டு, செயற் கரிய செய்தலை மேற்கொண்டு அதைச் செய் வதால் ஈட்டப் படுவதனாலேயே, இது வீரத்தினும் பெரும் பயனுடையதாய் இருக்கிறது. இராவணன் வீர உணர்ச்சியை மங்கச் செய்ததால் இம்மை இன்பத்தை இழந்ததோடு, இதுவரை ஈட்டிய புகழை இழந்ததால் மறுமை யின்பத்தையும் தொலைத்துக் கொண்டான். இவ் விரண்டையும் அவன் இழக்க நேர்ந்தது, உடலின்ப மாகிய ஒருவகை இம்மை யின்பத்தை விரும்பியே. வீரத் தையும், புகழையும் இழந்ததோடு, அவன் எதை விரும்பி இவற்றை இழந்தானோ, அத் துறையிலும் வெற்றி பெறு மல் கலங்குவதே அவலச் சுவையைப் பயக்கின்றது

வீரம், புகழ் இவைகளை மட்டுமா, இராவணன், மானம், குலம் என்ற இரண்டையுங் கூட இழந்து விட் டான். குடிப் பிறப்புக்கு ஒவ்வாதவற்றைச் செய்ததோடு, பிறர் பழிப்பதை நேரில் உணர்ந்தும், அவற்றைத் தொடர்ந்து செய்வதில் ஊக்கங் காட்டியது, அவன் இவை யிரண்டையுங்கூட இழந்து விட்டான் என்பதை உணர்த்துகின்றது. இவை யனைத்தையும் இழந்த பின் னும், இராவணன் முற்றிலும் இழந்து விட்டான் என்று சொல்வதற்கில்லை. ஏனெனில் அவன் இதுவரைப் பாடு பட்டுத் தேடிச் சேர்த்தவற்றை மட்டிலுமே இழந்து விட்டிருக்கின்றான், 'முக்கோடி வாணாளும், முயன் றுடைய பெருந் தவமும்' உடையவன் இனித் தன் போக்கை மாற்றிக் கொண்டாலும் இழந்தவற்றை மீண்டும் அடையப் பெறுவதோடு, மேலும் புகழ் ஈட்ட லாம் அன்றோ?

உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களிலும் நன்மை, தீமை என்ற இரண்டின் கூறுபாடுகளும் அமைந்திருக்கின்றன. நன்மையைப் பயப்பதும், தீமையைத் தருவதும் அவற்றின் இயற்கையன்று; அவற்றைப் பயன்படுத்தும் மனிதன் அறிவைப் பற்றியே அவை நல்லவற்றையும், தீமையையும் பயக்கின்றன. 'மூக்கோடி வாணாளும், முயன்றுடைய பெருந் தவமும்' எல்லையற்ற புகழை ஈட்டப் பயன்படும் என்பது உண்மையே; ஆனால் இராவணன் அவற்றைப் புகழ் ஈட்டப் பயன்படுத்தா விட்டால் அதற்காக அவை பொறுப்பேற்றுக் கொள்ளுமா? புகழ் ஈட்டுவதற்கு வேண்டிய சாதனங்களைப் பெற்றிருந்தும், இராவணன் ஈட்டிய புகழையும் இழந்துவிட்டிருக்கின்றான். பின்னர்ப் புகழ் ஈட்ட வேண்டும் என்ற எண்ணமும் அவனுக்கு எழவில்லை. இதற்குக் காரணம், அவன் தன் அறிவையும் இழந்து விட்டிருந்தமையே!

வீடணன், சீதையைத் திருப்பித் தந்துவிடுவதே சிறந்தது என்ற கொள்கையை வற்புறுத்தினான். இராமனுடைய வல்லமையை முதலில் வற்புறுத்திப் பின்னர் இராவணனுடைய தோல்விகளைக் குறிப்பிட்டு, அவனுக்கு ஏற்பட்ட சாபங்களையும் விவரிக்கிறான் வீடணன். காம வெறியில், இராவணன், பகைவன் பலத்தைப் பொருட்படுத்தவில்லை. தான் வஞ்சனையால் சீதையைக் கவர்ந்து வந்ததை உணராமல் 'யானிழைத்திட இல்லிழந்து இன்னுயிர் சுமக்கும் மானுடன் வலி நில்லாது ஆருளர் மதிப்பார்' எனத் தன் வெற்றியை இராமன் தடுக்க முடியாதிருந்தது போலத் திரித்துக் கூறுபவனுக்கு அறிவின் கூறு சிறிதளவாவது இருந்தது என எவர் ஒப்புவர்? கார்த்தவீரியனும், வாலியும் தன்னை வென்றது அவர்கள் வர பலத்தாலேயே யாகையால், அவர்களுக்

குத் தான் தோற்கவில்லை என்பதே இராவணன் வாதம். நந்தியின் சாபத்தைக் குறிப்பிட்டு, அதன்படியே குரங்கு இலங்கையை அழித்தது என்று கூறிய வீடண னுக்கு, அவன் பதிலளித்திருப்பது விந்தையினும் விந்தை! சற்று முன்னர் அநுமன் செயல்களுக்கு அழுங்கிக் கிடந்தவன், இப்பொழுது வாய் கூசாமல் 'எவ்வளவோ சாபங்களை நாம் பெற்றிருந்தும், அவை நம்மை என்ன செய்துவிட்டன'' என்று திருப்பிக் கேட் கிறான். மனிதர்களை வெல்ல வரம் பெறவில்லை என்று குறிப்பிட்ட வீடணனை எள்ளி நகையாடுகிறான் இராவ வணன். 'திக் கயங்களை வெல்வதற்கு வரம் பெற்றேனா?' என்று கேட்டுவிட்டு, மானுடர் எப்படி வல்லமை யுடை யவராய் இருத்தல் கூடும்' என்று வாதாடுகிறான். தேவர் கள் தாம் அளித்த வரங்களுக்குக் கட்டுப்பட்டு வாளா இருந்ததைத் தன் வல்லமைக் கடங்கி அவர்கள் சும்மா இருந்ததாகச் சொல்லிக் கொள்கிறான் இராவணன். அவன் அறிவைக் காமம் அறவே அழித்துவிட்டது என் றறிய வேறு சான்றும் வேண்டுமோ?

பகைவருடைய வல்லமையை இராவணன் பொருட் படுத்தாததற்கு, அவன் தன்னைப் பற்றிப் பெருமையாக எண்ணிக் கொண்டிருந்தது மட்டும் காரணமாகாது; அப் பகைவர் வல்லமையை வீடணன் எடுத்துக் கூறியதும் ஒரு காரணமேயாகும். 'என்னுடன் ஒரு வயிற்றிற் பிறந்த உனக்கு மட்டும் மானுடர் வலிமை யுடையவ ராகத் தோன்றுவது ஏன்?' என்று அவன் வீடணனை நோக்கிக் கேட்கிறான். உண்மையில் இக் கேள்வியை இரா வணன் தன் நெஞ்சையே நோக்கிக் கேட்டிருக்க வேண் டும். அவன் அவ்வாறு செய்யாததற்குக் காரணம், வீட ணன் 'தன்னைக் காட்டிலும் இராமனிடத்து மிக்க அன்பு கொண்டவனாகவும், அவன் உதவியால் இலங்கையின்

அரசை யடைய ஆசைப்படுபவ னாகவும் அவனுக்குத் தோன்றினமையே!

> பாழிசால் இரணியன் புதல்வன் பண்பெனச்
> சூழ்வினை முற்றியான் அவற்குந் தோற்றபின்
> ஏழைநீ என் பெருஞ் செல்வம் எய்திப்பின்
> வாழ்வோ கருத்(து)அது வழ(வு)அற் றுருமோ!
>
> —(வீட: அடைக்கலம்: 4.)

வீடணன் தன் இச்சைக் கேற்றவைகளைக் கூறுத தால் இராவணன் இவ்வாறு கூறினனா, அல்லது உண் மையிலேயே தன் னெஞ் சறிந்ததை உள்ளவாறு கூறி னனா என்று ஆராய்ச்சி செய்யத் தேவை இல்லை. ஏனெ னில், அடுத்து ஐந்து பாடல்களில் அவன் தன் கருத்தை வலியுறுத்தும் வீடணன் செயல்களை எல்லாம் விவர மாய்க் கூறுகிறான். இவ்வளவு உணர்ந்து கூறுபவன் 'திண்ணிதுன் செயல் பிறர் செறுநர் வேண்டுமோ?' என் றும், 'நஞ்சினை உடன்கொடு வாழ்தல் நன்றரோ?' என் றுங் கூறுபவன், வீடணனை ஏன் பகைவரைப் போய்ச் சேர விட்டுவிட்டான்? பழியினை உணர்ந்து அவனைக் கொல்ல விரும்பாதது இராவணன் பெருமைக்குச் சான்றே. ஆனல் உட்பகைவனாய் இருந்தவனைத்—தன் னெஞ் சறிய உட்பகைவன் எனக் கண்டவனை-சிறையி லாவது அடைத்து வைத்திருக்கலா மன்றோ? இவ்வாறு செய்திருப்பின் இராமாயணத்தின் முடிவு முற்றிலும் மாறுபட் டிருக்கக்கூடும்.

காம மயக்கம் காரணமாக இராவணன் குலம், மானம், வீரம், புகழ் முதலியவற்றை இழந்ததோடு, இவற்றை இழந்துவிட்டோம் என்ற உணர்ச்சியும் இன்றி, இனி மீண்டும் நல் லாற்றிற் சென்று புகழ் நாட் டப் பயன்படக்கூடிய அறிவையும் இழந்துவிட் டிருக்

கிருன். இவன் இனி எவ்வாறு உய்யக் கூடும்? அவனுடைய வீழ்ச்சியில் பகைவர் பலத்தை உணர முற்படாததும், தன் பலத்தைப் பெரிதாக மதித்ததும் உட்பகையை அறிந்து ஒழிக்காததும் ஆகிய செயல்களைச் செய்வித்த அறிவிழப்பு மூன்ரும் படியாய் அமைகின்றது.

பெரியார் ஒருவருடைய வீழ்ச்சிக்கு உலகமே ஏங்கும் அன்ருே? இதனை இயற்கையின் மேலேற்றிக் காட்டுதல் கவி மரபு. இயற்கையில் நிகழ முடியாத சம்பவங்களை நிகழ்ந்த தாகச் சித்திரித்து, இவை தலைவன் அழிவுக் கிரங்கி இவ்வாறு நிகழ்ந்தன என உணர்த்துவது எந் நாட்டுக் கவியும் விரும்பிக் கையாளும் ஒரு விரகு. ஜூலியஸ் ஸீஸர் கொல்லப்படுவதற்கு முந்தின இரவே, மக்கள் இயற்கையை இறந்த (Super-natural) பல நிகழ்ச்சிகள் நிகழக் கண்டனர். ஸீஸரின் மனைவி 'கல்பூர்னியா' துர் நிமித்தங்களைக் கண்டாள். கணவனை அன்று மட்டும் அரசவை செல்ல வேண்டாம் என்று வேண்டிக் கொண்டாள். அவனும் தன் மனைவியை மகிழ்விக்க, அவ்வாறே செய்ய ஒப்புக்கொண்டான். ஆனல் கொலைக்காரர்கள் அவ்வாறு செய்வது அவனுக்குப் பழியைத் தரும் என்று வற்புறுத்தினர். பழிக் கஞ்சி ஸீஸர் தன் மனைவியின் வேண்டுகோளைப் புறக்கணித்து விட்டுச் சென்ருன்; கொலை யுண்டு மாண்டான். கோவலன் கொலையை ஆய்ச்சியர் அறிந்து கொள்வதற்கு முன், இடைச் சேரியில் பல உற்பாதங்கள் தோன்றின என்றும், கண்ணகி வழக்காட வருவதற்கு முன்னரேயே கோப்பெருந் தேவி பல துர் நிமித்தங்களைக் கண்டாள் என்றும் சிலப்பதிகாரம் கூறுகின்றது.

இராவணன் அழிவை முன்னரே அறிவிப்பவை போல் இலங்கையில் பல உற்பாதங்கள் தோன்றின. அவற்றை வீடணன் விளக்கமாக எடுத்துக் கூறி, இரா

வணை எச்சரித்தான். வீடணன் மேலிருந்த வெறுப்பால், இலங்கையர் கோன் அவன் கூறிய உற்பாதங்களைப் பற்றிய பேச்சைக்கூட ஏற்றுக் கொள்ள வில்லை. ஆகவே இயற்கை மீண்டும் பல உற்பாதங்களைத் தோற்றுவித்து, இராவணனுக்கு வரப் போவனவற்றை ஒருவாறு உணர்த்துகின்றது. பெரியோரைக் காக்க இயற்கை எடுத்துக் கொள்ளும் முயற்சிதான் எத் தகையது! இரண்டாவதாக இப் பொருளைப்பற்றி இராவணனிடம் பேசியவன் மாலியவான்.

ஆயிரம் உற்பாதங்கள் சகுன அடுத்த என்றா
ஞாயிறும் உயிர்க்கு நல்லான் இருந்துழி அறியத் தக்கோன்
ஏயின தூதன் ஏற்றப் பற்றிவிட்(டு) இலங்கைத் தெய்வம்
போயின தென்று சொன்றார் புகுந்தது போரும் என்றார்.

—(இலங்கைகாண் படலம் 14)

இலங்கையைக் காத்து நின்ற தெய்வமே, அவ் விடத்தை விட் டகன்று விட்டது! இதையும் பொருட் படுத்தாத அறிவுடையவன் இருப்பானே? முன்னர் வீடணன் குதிரைகள் இடக் கால்களை எடுத்து வைத்துக் கூடத்திற் புகுந்ததை துர் நிமித்தமாகக் கூறினன். அப்பொழுது இராவணன் அறிவு, வெகு தொலைவில் இருந்தது. ஆகவே, பெரும்பாலோர் பொருட்படுத்தாத துர் நிமித்தமே தோன்றியது. ஆனல் இப்பொழுது இராவணன் அறிவு நெருங்கிவிட்டதால், துர் நிமித்தமும், அதற்கேற்றபடி எவரும் புறக்கணிக்க முடியாத தன்மை யுடையதாய்த் தோன்றுகின்றது!

இயற்கையின் பொறுப்பு நீங்கிற்று. அஃது இராவணனுக்குத் தன் உள்ளக் கிடக்கையையும், அவன் அழிவெய்துவான் என்ற குறிப்பையும் உணர்த்திவிட்டது இனி அழிவடையாமல் தன்னைக் காத்துக் கொள்வது

இராவணன் பொறுப்பு. அவன் செருக்குக் காரணமாக இதைப் பொருட்படுத்தா திருந்தால் இயற்கை என் செய்யும்?

ஒன்றல பகழி என்கைக்(கு) உரியன உலகம் எல்லாம்
வென்றன ஒருவன் செய்த வினையினும் வலிய வெம்போர்
முன்தரு கென்ற தேவர் முதுகுபுக் கமரின் முன்னம்
சென்றன இன்று வந்த குரங்கின்மேற் செல்கலாவோ?

—(இலங்கைகாண்: 19)

இராவணன் ஒருவனைத் தவிர ஏனையோர் அனைவரும் பெரும் போர் வரப் போகின்றது என உணர்ந்திருந்தனர். இராவணன் மட்டுமே, குரங்குகளை அழைத்துக் கொண்டு இராமன் இலங்கைக்கு வந்தது, சீதையைத் தானடைவதைத் தடுக்கத்தோன்றிய ஒருசிறு இடையூறு எனக் கருதினன். மனிதர்களையும், குரங்கையும் அவன் தனக் குரிய பகைவர்களாகக் கருதாததற்கு, அவன் தன் பலத்தில் கொண்டிருந்த பெரு நம்பிக்கையும், பகைவரைப் பல முடையவ ராக வீடணன் கூறியதுமே யாம் காரணம். மாலியவானைப் போன்ற பொருட்படுத்த வேண்டியவர், பகைவருடைய வல்லமையையும் உற்பாதங்களின் தோற்றத்தையும் எடுத்துக் கூறியது அவனுக்கு அவர்கள் தன்னுடைய பெருமையையும், பலத்தையும் பழித்துக் கூறுவதாகவே தோன்றிற்று. ஆகவே தான் மீண்டும் மீண்டும் தன்னைப்பற்றிப் பிறர் அறிந்திருந்தவைகளைக் கூறுவதோடு, மூர்க்கத் தனத்துடன் அவர்கள் பொருளுரைகளையும் புறக்கணிக்க முற்படுகின்றான்.

வீடணன், மாலியவான், முதலியோரும், இயற்கையும், இரு திறத்தாருடைய வல்லமைகளையும் அளந்து பார்த்துத் தீர்ப் பளிப்பதை, இராவணனை உணர வொட்

டாமற் செய்தது அவனுடைய தன் னம்பிக்கை. இல்லையேல், பகைவர் நகர்ப் புறத்தில் சூழ்ந்திருக்க, அவர்களை எதிர்க்க எழுந்த சேனையைக் காணச் சென்றவன் பெண்களை உடனழைத்துக் கொண்டு செல்வானா? பொறுப்பற்ற முறையில் இராவணன் நடந்து கொள்வதை அவனுக்கு உணர்த்துவதற்கே போன்று மகுட பங்கம் நேர்ந்தது! எனினும் இராவணன் மாறவில்லை. இல்லையேல், அங்கதனிடம் 'சீதையைப் பெற்றேன் உன்னைச் சிறுவனுமாகப் பெற்றேன், ஏதெனக்கரியது' எனப் பெருதவைகளைப் பெற்றதாகவும், 'அந் நரர் இன்று நாளை அழிவதற்கு ஐயமில்லை' என உறுதியுடனும் கூறுவானா? தன்னம்பிக்கை காரணமாகத் தோன்றிய செருக்கும், மூர்க்கத்தனமும் அவனை இன்னும் எந் நிலைக்குக் கொண்டு செல்லுமோ?

இராவணனுக்கு உண்மையை விளக்க இயற்கை இரு முறைகள் துர் நிமித்தங்களைத் தோற்றுவித்ததைப் போலவே, அவன் தன் பலத்தில் கொண்டிருந்த நம்பிக்கையைத் தளர்த்த இரு சம்பவங்கள் நிகழ்ந்தன. சுக்ரீவனால் மகுட பங்கம் செய்யப்பட்டது ஒன்று. இதைப் பொருட்படுத்தத் தவறியவன், அங்கதன் கூறிய இங்கு நின்றார்கட் கெல்லாம் இறுதியே என்பதுன்னி, உங்கள் பால் நின்றும் எய்பாற் போந்தனன் உம்பி' என்ற குறிப்பையாவது உணர்ந்து கொண் டிருக்கலாம். ஆனால் 'அது வீடணன் அபிப்பிராயம்' என்ற எண்ணம் அவன் தன் னம்பிக்கையைத் தழைக்கச் செய்தது. ஆகவே அசட்டை, பகைவரைத் துச்சமாக மதித்தல், செருக்கு ஆகிய குணங்களின் உருவெடுப்பாய் இராவணன் போருக்குச் சென்றான்.

அவன் நினைத்தபடி இராமன் அவனைக் கண்டு பயந்துவிடவில்லை; ஓடவும் இல்லை. போர் செய்தான்.

இராவணன் பொருட்படுத்த வேண்டிய முறையிலும் போர் செய்தான். இராவணன் தன்னம்பிக்கை தளர வில்லை. 'கர தூடணர்களை வென்றவன் இவ்வளவு பலவா ளுக இருப்பதில் வியப்பென்னை?' என்ற எண்ணம் அவனை தன்னம்பிக்கையைத் தளர விட வேண்டாம் என உணர்த்திற்று. இவ் வெண்ணத்தோடு போர் புரிந்து வந்தவன், திடீரென்று படைக்கலம் அனைத்தையும் இழந்து தான் தனியே நிற்றலையும், இராமன் அம்பு விடுவதை நிறுத்திவிட்டுத் தனக்கு உபதேசம் செய்வதையும் உணர்ந்தான். உபதேச முடிவில் 'இன்று படைக் கலங்களை இழந்து விட்டாய்; நாளை வா' என இராமன் கூறிய சொற்கள் இராவணனைச் சுட்டன.

செருக்கினுல் தன்னிலை தெரியாமல் ஆகாயத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த இராவணன், திடீரெனக் கீழே வீழ்ந்தான். நிலத்தில் கிடப்பதை உணர்ந்ததும், அவன் மயக்கம் தெளிந்தது; அறிவு ஓங்கிற்று; பகைவனுடைய வல்லமையை உணர முடிந்தது. மாலியவானிடம்,

முப்புரம் ஒருங்குச் சுட்ட மூரிவெஞ் சிலையும் வீரன்
அற்புத வில்லுக்(கு) ஐய! அம்பெனக் கொளலும் ஆகா
ஒப்புவே(று) உரைக்கலாவ(து) ஒருபொரு ளில்லை வேதம்
தப்பினபோதும் அன்னுன் தனுஉமிழ் சரங்கள் தப்பா

(கும்: வதைப் படலம்: 26.)

எனக் கூறினுன். வேதங்களை நன்குணர்ந்தவன் இராவணன். அவை ஒரு பொழுதும் தப்பா என்பதையும் அவன் உணர்வான். எனினும், 'அவையும் தப்பலாம்; ஆனுல் இராகவன் அம்பு தப்பாது!' என்று கூறினுன் என்ருல், பகைவன் வல்லமையை இராவணன் மிக நன்ருக உணர்ந்து கொண்டான் என்றே கூற வேண்டும்.

அவன் சானகியைப் பற்றிக் கூறுவதும் இதனையே வற்புறுத்துகிறது.

பேயினித் தேவி சென்னை பொறையினால் உலகம் போலும்
வேயெனத் தகைய தோளி இராவன் மேனி நோக்கித்
தீயெனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டால்
நாயெனத் தகுதும் மன்றே காமனும் நாமும் எல்லாம்.

செ : 30.

இராவணன தெளிந்த அறிவுடன் பேசுகின்றான் என்பதற்கு வேறு சான்று வேண்டுமோ? 'அவனுடைய மயக்கம் அறவே நீங்கிவிட்டது; அறிவு பெற்றான்; இனி அவனுக்கறிவு இல்லை' என்றே எண்ணத் தோன்றுகிறது. ஆனால்?

இராவணன் மனம் ஆகாயத்தில் சஞ்சரிக்கத் தொடங்கியது இன்று, நேற்று அன்று. வெகு காலமாக அவன் மன உலகத்திலேயே, கற்பனை உலகிலேயே வாழ்ந்து வருகின்றான். சீதையை வஞ்சனையால கவர்ப தற்குக் காரணம் கற்பித்தான்; பகைவரைப் பொருளாக மதிக்க மறுத்தான்; வீடணன் மாறுபாட்டை ஆராயாமல் விட்டான்; உற்பாதங்களைப் புறக்கணித்தான்; முன்னர் 'இராமன் இறந்தால் சீதையும் இறந்து விடுவாளே' என்று மாரீசனிடம் ஏங்கியவன், இப்பொழுது அங்கதனிடம் 'நாளைக்குள் இராமன் இறப்பான்; நான் சீதையை அடைந்துவிட்டேன்' என்று கூறுகிறான். இவ்வாறு முனனுக்குப் பின் முரணான எண்ணங்களுக்கு இடமளிப்பவனாய், உலக அறிவு ஒரு சிறிதும் இல்லாதவனாய், இராவணன் காம மயக்கத்தில் கட்டுண்டு, அதுவும் கிடைக்கப் பெறாமல், அதை அடையச் செய்யும முயற்சியிலேயே மனம் உள்ளவனாய், வேறொன்றிலும் பற்றில்லாத வாழ்க்கை யுடையவனாய் இருந்து வந்தான்.

இத் தகையவன் போரை முன்னின்று நடத்துதல் எவ்வாறு கூடும்? ஆகவே தோல்வியுற்றான். தோல்வியடைந்தவுடன், அதற்குக் காரணத்தை ஆராய முற்பட்டான். பகைவன் பலம் ஒன்றுதான் அவனுக்குக் காரணமாகத் தோன்றிற்று. தன் எண்ணத்தைப் பாட்டனிடம் அறிவித்தான். இந்நிலையில் மகோதரன் புகுந்து 'தோல்வியைக் கண்டு மனம் வெதும்புவது வீரர்க்கு அழகோ? உன் பெருமையையும் பலத்தையும் நினைக்காமல் பிதற்றி விட்டாயே!' என்று கூறியவுடன், இராவணன் மீண்டும் பழைய நிலையை எய்தினான். சற்று முன் கூறியவைகளை முற்றிலும் மறந்தான்.

மூவுலகையும் வென்று புகழுடன் அரசாண்டிருந்த இராவணனை, அவனுக்குப் பெண் இன்பத்தில் உள்ள பற்றுதலைப் பற்றுக் கோடாகக் கொண்டு, சூர்ப்பநகை தீ நெறியிற் செலுத்தினாள். இப்பொழுது மகோதரன் அவனுடைய தன் னம்பிக்கையைப் பற்றுக் கோடாகக் கொண்டு, அவனை அழிவெய்தும் வழியிற் செலுத்தினான். மகோதரன் கூறியவை உண்மையே அன்றி வேறன்று. போரில் வெற்றியும், தோல்வியும் மாறி வருவது இயற்கையே. தோல்விக்கு மனமழியாமல் தொடர்ந்து போர் செய்வோரே வெற்றி பெறுவர். ஆனால் இவை யனைத்தும் சம பலமுள்ள எதிரிகள் போரிடுவதற்கு ஏற்ற உண்மைகளே யொழிய, ஏற்றத் தாழ்வுள்ளவர்கள் செய்யும் போருக்கு இவை பொருத்த முடையன வல்ல. இராவணன் இவ் வுண்மையை மறந்தான். அவனை இதை மறக்க வைத்தவை 'இராமன் மனிதன் தானே' என்ற அலட்சிய மனோபாவமும், தான் தேவர்களை வென்றவன் என்ற செருக்குமாம். மகோதரன் தன்னைப்பற்றிக் கூறிய புகழுரைகளால் இராவணன் தான் நேரில் உணர்ந்த இராமன் வல்லமையைப்பற்றிய

அறிவைப் புறக்கணித்ததோடு, 'சீதை தன்னை எப்படி ஏற்றுக் கொள்வாள்' என்பதை விட்டு 'ஏன் ஏற்றுக் கொள்ளமாட்டாள்' என்ற எண்ணத்துக்கும் இடம் அளித்தான். இவ்வெண்ணத்தை அவன் மனத்தில் தோற்றுவித்தது, சீதை பெண்ணாகையால் தன்னைப் போல் இராகவன் வல்லமையை அறிந்திருக்க முடியாது. என்ற எண்ணமே

முன்னர்க் காம மயக்கம் காரணமாக இராவணன், வீடணன் எச்சரிக்கைகளையும், பொருளுரைகளையும் பொருட்படுத்தாமல் போரை வரவேற்றுக் கொண்டான் இப்பொழுது தன்னம்பிக்கை காரணமாகத் தான் அநு பவத்தில் உணர்ந்த அறிவையே புறக்கணிக்கத் தலைப் பட்டான் வீடணனை எப்பொழுது பகைவரிடத்து அன் புடையவன் என்று எண்ணினானோ, அதுமுதல் இராவ ணன் அவன் பேச்சை ஏற்க மறுத்தான். ஆகவே வீடண னுடைய உண்மையுரைகள் எடுபடாமற் போனதற்கு நாம இரங்கவேண்டுமே யொழிய அதற்காக இராவ னைக் கண்டிப்பதற் கில்லை. மாலியவான் வயது முதிர்ந்த வன்: அநுபவம நிறைந்தவன். அவன் பேச்சைப் பொருட் படுத்த வேண்டியது அவசியமே. ஆனால் வயது ஏற ஏற அச்ச உணர்ச்சியும் அதிகப்படுவது இயற்கை. ஆகவே தான் இராவணன் அவன் எச்சரிக்கைகளையும் பொருட் படுத்த வில்லை. முற்றிலும் தகுதி யுடையவை என உறுதி யாகக் கூற முடியாமற் போயினும், இராவணன் வீட ணன், மாலியவான் இவ் விருவர் புத்திமதிகளை ஏற்றுக் கொள்ளாம லிருந்ததற்கு அவனை முழுவதும் கண்டிப்ப தற் கில்லை. ஆகவே தான் அவனுடைய இப் பிழைகளின் விளைவுகள் அழிவைச் செய்வனவாக இல்லை. பகைவன் வல்லமையையும், சீதையின் திறத்தையும் அவன் நன் குணருமாறு அவனுக்கு நல்ல வாய்ப்புகளைத் தோற்று

யைத்தோடு நின்று விடுகின்றன. முதற் போரின் இறுதியில் இராவணனுக்கோ, இலங்கைக்கோ அழிவு எதுவும் வந்துவிட வில்லை என்பது கருதத் தக்கது.

பிறருடைய பொருளுரைகளைத் தள்ளியதால், இராவணன் அழிவை நோக்கி மூன்றாம் படியில் காலை வைத்தானே யொழிய, அவனுக்கு மீண்டும் திருந்த வாய்ப்பு ஏற்பட்டது. ஆனால் அவ் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளாமல், மகோதரன் புகழுரைகளால் மயங்கி, அவன் நேரில் அறிந்த தன் னனுபவமான அறிவையே பொருட் படுத்தாமல், போரைத் தொடர்ந்து நடத்தத் தீர்மானிக்கையில், தன் அழிவை நோக்கி நான்காம் படியில் காலை வைத்துவிட்டான். இனி அவன் அழியாமல் தப்ப வாய்ப்புகள ஏற்படாது என்பது உறுதி. அவ் வாறு ஏற்படினும், காட்சி அளவையால் அறிந்தவற்றையே புறக்கணித்துத் தன்னை 'அறி வறை போகியவனாக' மாற்றிக் கொண்டவன், அவற்றை பொருட் படுத்துவான் என்று எதிர் பார்ப்பதற் கில்லை. ஆகவே தன் னறிவையே நாசஞ் செய்து நாலாம் படியில் இறங்கியவன், இனித் திரும்ப முடியாமல் மேலும் மேலும் அழிவை நோக்கியே செல்வான் என்றும், அவ் வழிவும் வெகு அணிமையிலேயே ஏற்பட்டு விடும் என்றும் உறுதியாய் நம்பலா மன்றோ ?

———

# தீமை முற்றுகிறது

முற்றிலும் அறிவில்லாத மூடனால் தனக்கோ பிறர்க்கோ ஒரு துன்பமும் ஏற்படாது; தவறி நேர்ந்தாலும் அது தவிர்க்கக் கூடியதாகவே இருக்கும். ஆனால் அறிவு நிறைந்த ஒருவன், செருக்குக் காரணமாய், தான் நன்றாக உணர்ந்த ஒன்றை, உணராதவனைப் போலவே செயல் புரியத் தொடங்கி, அச்செயலில் பிறரையும் ஈடுபடுத்துவதனால், அவனுக்கேயன்றிப் பிறர்க்கும் தாங்க முடியாத துன்பம் ஏற்படுவது இயற்கையேயன்றோ? இராவணன் அறிவை முற்றிலும் இழந்து போரைத் தொடர்ந்து நடத்தியதால் அவன் அழிவையே தேடிக் கொண்டதோடு, அருமைத் தம்பியையும், மக்களையும் பலி கொடுத்தான்.

மகோதரன் பேச்சை நம்பிக், கும்பகருணனைப் போருக்கு அனுப்பச் சூழ்ந்து இராவணன் அவனைத் தருவித்தான். கும்பகருணன் கூறிய நற்சொற்கள் எதுவும் இராவணன் செவிகளில் ஏறவில்லை. தனக் குறுதி கூறிய தம்பியை, 'எனக்கு உபதேசிக்க உன்னைக் கூப்பிடவில்லை; மனிதரோடு போர் செய்யவே அழைத்தேன்; போருக்குப் பயந்து நீ இவ்வாறு கூறுவது உன் வீரத்திற்கு ஏற்றதன்று; நீ போய்த் தூங்கு, நானே போர் செய்கிறேன்,' என்று கூறிப் பழித்தான். இராவணன் அறிவை இழந்து தவிக்கிறான் என்பதை நன்குணர்ந்த கும்பகருணன், இப்பழிச் சொற்களுக்கு மனம் வருந்தாமல், போருக்குப் புறப்பட்டான்.

'என்னைவென்(று) உளர்எனின் இலங்கை காவல
உன்னைவென்(று) உயருதல் உண்மை ஆதலால்
பின்னைநின்(று) எண்ணுதல் பிழைஅப் பொய்யினை
நன்னைநன்(கு) அவிப்பது தவத்தின பாலதே

(கும்: வதைப்படலம்: 67)

என ஓர் எச்சரிக்கை செய்து விட்டுக் கும்பகருணன் அண்ணனிடம் இறுதியாக விடை பெற்றுக் கொண்டான். கும்பனுக்குத் திண்ணமாகத் தான் வெற்றியுடன் திரும்பமுடியாது எனத் தெரியும். இதைக் கூறிவிட்டு, அவன் 'இதுவரை நான் பிழைகள் ஏதாயினும் செய்திருந்தால் பொறுத்துக் கொள்' என்று வேண்டிக் கொண்டு 'இனி முகத்தில் விழித்தல் அற்றது' என்று கூறியபடியே சென்றான். அச் சமயத்தில் இராவணனுடைய இருபது கண்களும் நீரைக் கக்கின எனினும் என்ன? அவன் மனிதத் தன்மையைப் பெற்றிருந்தவனே யாயின் அப்பொழுதாவது கும்பகருணனைத் திரும்பக் கூவி, அவனோடு மேல் நடக்க வேண்டியதை ஆராய்ந்திருக்க மாட்டானோ? இராவணன் கண்ணீர் வடித்தது அவனுக்குத் தம்பியினிடத்தில் உள்ள அன்பை வெளிப்படுத்துவதே யாயினும், அவன் கொண்டுள்ள அன்பு ஊனைப் பற்றியதே யன்றி, 'கும்பகருணன் தனக்கு உறு துணையாய் இருப்பவனன்றோ,' என்ற அறிவைப் பற்றியதன்று. ஆகவே தான் கண்ணீர் உகுத்தவன் கும்பகருணனை இறக்காமலிருக்கச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்துக்கு இடமளிக்கவில்லை.

கும்பகருணன் இறந்தான்: அதிகாயன் மாண்டான்: இந்திரசித்தன் பகைவரைப் பிணித்த நாகபாசம் கருடனால் பயனற்றதாக்கப்பட்டது. பின்னர் பிரமாத்திரத்தால் வருந்திய பகைவர் அநுமனால் காப்பாற்றப் பட்ட

னர். ஆகவே இந்திர சித்தன் நிகும்பலையில் யாகஞ் செய்யப் புறப்பட்டான். ஆனால் வீடணனால் அதை அறிந்து கொண்ட பகைவர், அவனை யாகஞ் செய்து முடிக்க வொட்டாமற் செய்துவிட்டனர். இவ்வளவு தடைகள் ஏற்பட்ட பின்னரே, இந்திர சித்தன் பகைவரை வெல்லுதல் யவர்க்கும் கூடாத காரியம் எனத் தகப்பனுக்குத் தெரிவித்தான். அப்பொழுது கூட அச்சத்தால் அக் கருத்துக்கு அவன் இட மளிக்க வில்லை. உண்மையை ஒப்புக்கொள்வதில் பழியோ அவமானமோ இல்லை யன்றோ? தன் தகப்பன் இறந்துபட வேண்டாம் என்ற ஆசை காரணமாகவே, பகைவரை வெல்ல முடியாது என்று எடுத்துக் காட்டி, சீதையை விட்டு விடுமாறு தகப்பனைக் கேட்டுக் கொண்டான். இதனை 'உன்மேல் காதலான் உரைத்தேன்' என்று அவன் வற்புறுத்திக் கூறியும் இராவணன் ஏற்றுக் கொள்ள வில்லை. 'பிறரை நம்பி நான் இப் பகையைத் தேடிக் கொள்ள வில்லை. நீ சிரமம் நீங்கிச் சுகமே யிரு. நான் போருக்குச் செல்கிறேன்' என்று கூறி எழுந்தான் இராவணன்.

இங்கு இராவணன் புகழை விரும்பிப் போரை நிறுத்த மறுத்தது நம் மதிப்பிற் குரியதே யானாலும், அவன் அதைத் தன் மகனுக்கு அறிவித்த விதம் கண்டிக்கத் தக்கதாகும். 'இனிப் போரை நிறுத்தினாலும் பழியே சேரும்; ஆகவே உயிரைக் கொடுத்தாவது நான் போருக் கஞ்ச வில்லை என்ற புகழைத் தேடிக் கொள்கிறேன். நீ எனக்காகக் கவலை யுறாதே' என்று சொல்லி யிருந்தால், இராவணன், இந்திரசித்தன், அவனிடத்துக் கொண்டிருந்த அன்புக்குப் பொருந்திய அளவு மகனிடம் அன்பு செலுத்தியவனா யிருந் திருப்பான். இவ்வாறு கூறுவதையும் அவன் பொறுமையுடன் நிதானமாய்க் கூறி யிருக்க வேண்டும். இம் முறையைக் கை

விட்டுவிட்டு, அவன் கோபங் கொண்டவனாய் மகனை நோக்கி 'உன்னை நம்பி நான் போரில் ஈடுபடவில்லை' என்று சொல்வது, மகனுடைய ஆண்மையைப் பழிப்ப தோடு, அவன் தான் எதிர்பார்த்த அளவுக்குத் தனக்கு உதவி செய்ய முன் வரவில்லை என்ற குற்றத்தையும் சுமத்துவதாகும். மேலும் இவற்றைக் கோபாவேசத் தோடு கூறுவது, உண்மையான மனோ நிலையைக் கூறுவ தாகவும் கருதப்படாது. விழுந்தவன் மீசையில் மண் ஒட்டவில்லை என்று மார் தட்டுவதையே ஒக்கும். ஆகவேதான் இந்திரசித்தன், தகப்பன் அறியாமைக்கு மிக இரங்கி,

'ஒழிந்தருள சீற்றம் சொன்ன உறுதியைப் பொருந்தி யாதே
கழிந்தனன் என்ற பின்னர் நல்லவாக் காண்டி என்று
மொழிந்தனன்.

(இந்: வதைப் படலம்: 13)

இனி வெற்றி எய்த முடியாது என்று உறுதியாக இராவணன் நம்பினனே யானால், அவன் மகன் போருக் குச் சென்றதை ஏன் தடுக்கவில்லை? 'தன் புகழை நிலை நாட்ட விரும்பியவன், தன்னை யன்றோ பலி யிட்டுக் கொள்ளல் வேண்டும்? பிள்ளையைப் பலி யிடத் துணிந் தது எதற்கு? மகன் தன்னைக் 'கடைக்கணால் நோக்கி நோக்கி இரு கணீர் கலுழப் போவதை'க் கண்டும் 'கொடியோன்' கண்கள் நீருகுக்காத காரணம் என்னை? கும்பகருண னிடத்துக் கொண்டிருந்த அன்பு கூட இரா வணனுக்கு மகனிடத்தில் இல்லையா? இந்திரசித்த னுடைய முயற்சிகள் தடைப் பட்டனவே யொழிய, அவ னால் பகைவரைக் கலங்க செய்ய முடிந்ததை இராவ ணன் அறிவான். ஆகவே தனக்குள்ள ஊக்கத்தோடு அவன் போர் செய்தால், வெற்றி கிடைக்கும் என்றே

இராவணன் எண்ணினன். ஆகவே தான் அவனுக்கு மகனைப் போருக்கு அனுப்பும் பொழுது, அழுகை வர வில்லை. கும்பகருணன் சென்றது, இராவணன் இராமன் வல்லமையை நேரில் உணர்ந்து வந்த அணிமையிலாகை யால், அவன் கூறியவை இராவணனுக்கு உண்மையாய் நிகழலாம் எனப்பட்டன. ஆகவே அழுதான். கும்ப கர்ணனோடு, இன்னும் மிகப் பலர் அழிந்தன ரேனும், இராவணன் தன பலத்தில் கொண்டிருந்த நம்பிக்கை யைப் போலவே, தன மகனுடைய வல்லமையிலும் பெரு நம்பிக்கை வைத்திருந்தான். மகன் பகைவரை நாக பாசத் தால் கட்டிவிட்டு வந்தது இராவணனுடைய நம்பிக் கையை மிகுதிப்படுத்தியது. ஆகவே தான், இந்திரசித் தனை முழு வன்மையுடன் போர் செய்யுமாறு தூண்டுவ தற்கு, இராவணன் அவனைக் கடிந்து அனுப்பினான்.

கும்பகருணனை நடத்தியது போலவே, மகனையும் இராவணன் நடத்தியது, அவனுக்கு மனித உணர்ச்சி அறவே அகன்றுவிட்டது என்பதையே வெளிப்படுத்திக் காட்டுகிறது. தன்னறிவையே பொருட்படுத்தாதவ னுக்கு மனித உணர்ச்சி எங்கிருந்து இருக்கக்கூடும்? சீதை தன்னைக் காதலிக்க வேண்டும் என்று விரும்பிய இராவணன், அவளை அவ்வாறு செய்யத் தூண்ட, பிரம் மாத்திரத்தால் கட்டுண்டு கிடந்த இலக்குவனையும், அவனைக் கண்டு ஏங்கி யிருந்த இராமனையும் காண அழைத்துச் செல்லுமாறு கட்டளையிட்டது, அவனுக்கு மனித உணர்ச்சி முற்றிலும் இல்லை என்பதையே வற் புறுத்துகின்றது.

அநுபவ அறிவையே புறக்கணித்து அழிவை நாடி நாலாம் படியில் காலை வைத்த இராவணன், அதற்குப் பின் ஒருவர் பின் ஒருவராகத் தனக்குத் துணையாயிருந்த வரை யெல்லாம் இழந்தான். சீதையைக் காதலித்த

பொழுதே இராவணன் நேர்மையை இழந்தான்; அவளை வஞ்சித்துக் கவர்ந்த பொழுது அறிவைத் தேடிக் கொண்டான்; விடணனை நன்கறிந்தும் பகைவரைச் சேரவிட்டதால் அரசியலறிவை இழந்தான், உற்பாதங்களைப் புறக்கணித்ததால் 'அஞ்சுவது அஞ்சாத' பேதை யானான்; முதற் போருக்குப் பின்னும் போரைத் தொடர்ந்து நடத்தத் தீர்மானித்ததால் 'முழு அறிவிலி யாக' மாறினான். கும்பகருணன், சீதை, இந்திரசித்தன் முதலியோரிடத்து நடந்து கொண்ட முறையில் மனித உணர்ச்சியையே இழந்து விட்டிருந்தான் என்று அறிகிறோம். இனியும் அவன் இழப்பதற்கு என்ன இருக்கிறது. அவன் ஒருவனே இருக்கிறான்!

## கலைஞன் வீழ்ச்சி

மூவுலகங்களும் புகழ்ந்து போற்றும் உயர்ந்த நிலையினின்றும் வீழ்ந்து அரக்கிமார் பழிக்கும் தாழ்வை இராவணன் எய்தியதற்கு அடிப்படைக் காரணங்களாக அமைந்தவை அவனுடைய காமமும், செருக்கும் ஆம். கும்பகருணன், அதிகாயன் முதலியோரை இழந்த பின்னரும், இவ் விரண்டில் ஏதேனும் ஒன்றைக்கூட விட முடியவில்லை. மேகநாதனை இறந்தது இராவணனுக்கு ஒரு பேரிழவு. இது அவனுக்குத் தந்த வருத்தம் அளவிட்டுக் கூறும் தன்மை யுடையதன்று. இத் தகைய துன்பத்தை அடைந்த பின்னரே, இராவணனுக்குத் தன்னுடைய தவறுகள் தெரியத் தொடங்கின.

சினத்தொடுங் கொற்றம் முற்றி இந்திரன் செல்வம் மேவி
நினைத்தது முடித்து நின்றேன் நேரிழை ஒருத்தி நீரால்
எனக்கு நீ செய்யத்தக்க கடனெலாம் ஏங்கி ஏங்கி
உனக்கு நான் செய்வதானேன் என்னின்யார் உலகத் துள்ளார்.

(இரா: சோகப் படலம்: 39.)

தான் பட்ட துன்பங்களுக்கு உண்மையான காரணம் சீதையின் மாட்டுக் கொண்ட காமமே என்பதை இராவணன் நன்குணர்ந்தான். இதனை மண்டோதரியும் சுட்டிக் காட்டவும், அவன், கோபம் மிகப் பெற்றவனாய்ச் சீதையைக் கொல்ல ஓடினான். மகனைப் பலி தந்து தன் இழிவுகட்கெல்லாம் அடிப்படைக் காரணத்தை அறிந்து கொண்டானே யொழிய, இன்னும் இழந்த தன் அறிவை அவன் முற்றிலும் திரும்பப் பெறவில்லை என்பதையே இச் செயல் தெரிவிக்கிறது. இவன் காம மயக்கத்தால் அல்லன செய்தால், அதற்குச் சீதையா பொறுப்பாளி?

மகனை இழந்ததால் ஏற்பட்ட மிக்க வருத்தங் காரணமாக இராவணன் சீதையைக் கொல்லச் சென்றான் என்று கூறுவதற்கில்லை. மகோதரன் இச் செயலைச் செய்ய வேண்டாம் என்று தடுத்துப் பேசுகையில் மூன்று காரணங்களைக் காட்டுகிறான்: (i) ஒரு பெண்ணைக் கொல்வது இராவணன் வாளுக்கே பழியாகும்; (ii) சீதை இறந்தொழிந்தால், இராமன் முதலியோர் திரும்பி விடுவர்; (iii) இராமனை வென்று திரும்புகையில், இராவணன் யார் பொருட்டு இதுகாறும் போராடினானோ, அச் சீதை இன்மையால் மன முளைய நேரும். இவற்றைக் கேட்டபின் இராவணன் சீதையைக் கொல்வதைத் தவிர்ந்தான். இவற்றுள் எக் காரணம் பற்றி, அவன் கொண்ட கருத்தைக் கைவிட்டான் என்று திடமாகக் கூறுவதற்கில்லை. முதற் காரணமே அவன் மனத்தில், இந் நிலையில், சிறந்ததாகப் பட்டிருக்கும் என்று கூறலாம்.

இராவணனை இதுகாறும் செயல் புரியத் தூண்டிய காம மயக்கம், செருக்கு என்னும் இரண்டனுள், மேக

நாதன் இறந்ததால் முன்னது வலியிழந்தது எனத் தெரி கிறது. ஏனெனில் இராவணன் அதன்பின் அவ் விருப்பத் தையோ, தன் மனத்தில் காமம் இடம் பெற்றிருக்கிறது என்பதையோ வெளிக் காட்ட வில்லை. தனக்குக் கேட் டையும் துன்பத்தையும் விளைவித்தவளைத் தன்னைப் போல் துன்ப மடையச் செய்ய வேண்டும் என்ற எண் ணத்தை இராவணன் வெளியிடுகிறான். அவனுக்கு இன் னும் காம மயக்கம் இருந்திருந்தால் அவ்வாறு கூறி யிருக்க மாட்டான். ஆனால் இக் காரணம் பற்றி அவன் அம் மயக்கத்தி னின்று முற்றிலும் விலகி விட்டான் என் றுங் கூறுவதற் கில்லை. முன்னரும் அவன் சீதை மனம் துய ரடையக் கூடிய பல செயல்களை விரும்பிச் செய் திருக்கிறான்; அவன் மன நிலையை நன் குணரும் மகோ தரன் சீதையைக் கொல்லக் கூடாது என்று காரணங் காட்டியவற்றுள் மூன்றாவது காமத்தைப் பற்றியதே. ஆகவே இராவணனைப் பிடித்திருந்த காம மயக்கம் முற் றிலும் நீங்கா விட்டாலும், ஓரளவு-பெரும் பகுதி- இல்லை யாகி விட்டது எனக் கூறலாம். ஆனால் அவ னுடைய செருக்கு மேகநாதனை இழந்த பின்னும், இம்மி யளவுங் குறைய வில்லை. 'நீ ஏன் இது வரை போருக்குச் செல்லாமல், கும்பன் முதலியோரை இறக்கவிட்டாய்' என்ற கேள்விக்கு, இராவணன் 'நாணத்தால் அவ்வா றிருந்தேன்' என்று கூறியதோடு அமையாமல், 'நானும் அவனும் சம பலமுள்ள எதிரிகள் என்றால், இனி என் முறையை ஏற்றுக்கொள்கிறேன்' என்றான். இப்பொழு தும் அவன் பகைவரைத் துச்சமாக மதிக்கும் குணத்தை விட வில்லை. இதனால் இராவணன் அழிவுக்குக் காம மயக்கம் மட்டுமே காரண மாகாது. அவன் தன் னம்பிக் கையும், தற் பெருமையும் சேர்ந்து தூண்டிய செருக்கே காரண மாகும் என அறிகிறோம்.

வீடணனும், மாலியவானும் பெரும் போர் நிகழும் எனக் கூறியும், அதை ஏற்றுக்கொள்ள மறுத்த இராவணன், இப்பொழுது, மேகநாதனை இழந்ததால், தான் ஈடுபட்டிருப்பது மிகப் பெரிய போரே என உணர்ந்து கொண்டான். முன்னர், பெண்களை அழைத்துக் கொண்டு சேனையைக் காணச் சென்றவன், இப்பொழுது, பொழுது போக்காகக் கருதாமல் போரில் விருப்பமுள்ளவனாய்ப் படைகளைக் காணச் செல்லுகிறான்; படைத் தலைவரைத் தருவித்து அவர்களுடன் கலந்தாலோசிக்கிறான். அதுவரை புறக்கணித்திருந்த பூசனை முதலியவற்றை முறைப்படி செய்யுமாறு பணிக்கிறான். இவ்வளவும், வேறெவரும் போருக்குச் செல்ல இல்லையாகையால் செய்கிறானேயொழிய இன்னும் இராவணன் இராமனைத் தனக்கு ஏற்ற பகைவனாகக் கருதிச் செய்ய வில்லை.

மூலபலம் அழிந்தது எனத் தூதுவர் வந்து சொல்லினர். இராவணனுக்கு இதை நம்ப முடியவில்லை.

'என்னினும் வலியரான இராக்கதர் யாண்டு வியார்
உன்னினும் உலப்பிலாதர் உலகியின் மலையின் நீள்வார்
பின்னொரு பெயருமின்றி மாண்டனர் என்று பேசும்
இன்னிலை இதுவோ பொய்ம்மை விளம்பினர் போலும் என்றான்.

(களங்காண் படலம்: 49.)

தூதுவர் இந்நிலையில் பொய் சொல்லுவாரா? இராவணன் இன்னும் 'பகைவன் வல்லமையைப் பொருட்படுத்தாததே, அவனை இவ்வாறு கருதச் செய்கிறது' மேகநாதன் அழிவு தந்த அதிர்ச்சியினும் இவ்வழிவு இராவணனுக்குப் பேரதிர்ச்சியைத் தந்தது. 'என்னினும வலியரான இராக்கதர் அழிவுற்றார் என்றால்' எனத் தொடங்குவது, அவன் முதன் முதலாகத் தன் வல்லமை

யில் ஐய முறுகின்றான் என்பதைத் தெரிவிக்கிறது. கோபுரத்தின் மீதேறி மூல பலம் இறந்த உண்மையைக் காண முற்படுகிறான். 'ஊறின சேனை வெள்ளம் உலந்த பேர் உண்மை எல்லாம் காறின தன் உள்ளம் நோவக் கண்களால் தெரியக் கண்டான்.'

நகை பிறக்கின்ற வாயன் நாக்கொடு கடைவாய் நக்கி
புகை பிறக்கின்ற மூக்கன் பொறி பிறக்கின்ற கண்ணன்
மிகை பிறக்கின்ற நெஞ்சன் வேஞ்சினத் தீமேல் வீங்கிச்
சிகை பிறக்கின்ற சொல்லன் அரசியல் இருக்கை சேர்ந்தான்.

(செ: 63.)

எதிர் பாராதது நடந்துவிட்டது. எத்துணை முறை கண்களைத் துடைத்துக்கொண்டு நோக்கினும், கும்பகருணனும், மேகநாதனும், மூல பலமும் அழிந்த உண்மை மாற்றமடைய வில்லை; மேன்மேலும் நன்றாக விளக்கமடைகின்றது. கும்பகருணனும், மேகநாதனும் இறப்பதற்கு முன், 'நாங்கள் இறந்த பிறகாவது உண்மையை உணர்ந்து சீதையை விட்டுவிட்டுச் சுகமாக இரு' என்று கூறிப் போனார்கள். இதனையே மாலியவான் மீண்டும் வற்புறுத்தினான். ஆனால் அவ்வாறு செய்வதால் பயன் என்ன? சீதையை அனுப்பி விடுவதால், இறந்த தம்பியையும் மகனையும் திரும்பப் பெற முடியுமா? முடியாது என்பது தேற்றம். இராவணன் உயிர் துறக்காமலிருக்கவே அவர்கள் இருவரும் வழி கூறிச் சென்றனர். உயிர் வாழ்வதால் தான் என்ன பயன்? முக்கோடி வாணாளுடன், இன்னும் பல யாண்டு வாழ்தல் பெருமை தரக் கூடியதா? சீதையை அடைய முடியாது என்பது உண்மையே யானாலும் இப்பொழுது, தம்பி, மகன், மூல பலம் அனைத்தும் அழிந்த பிறகு அவளைத் திருப்பி அனுப்புதல், பழியையே தருமன்றோ? இராவணன் உயிருக்குப் பயந்து சீதையை

யனுப்பி விட்டான் என்றல்லவா உலகம் பேசும்! ஆகவே போர் செய்வதே தகுதி யுடையது. இப் போரின் நோக்கம சீதையைப் பெறுவதன்று. பழி வராமற் காத்தலே. இராவணன் இம் மனோ நிலை யுடனேயே போருக்குச் சென்றான் என்பதை, அவன் சிவ பூசை செய்த பின் போருக்குப் புறப்பட்டதும், அவன் செய்த சபதமும், வற்புறுத்துகின்றன.

> ஈசனை இமையா முக்கண் இறைவனை இருமைக் கேற்ற
> பூசனை முறையிற் செய்து திருமறை புகன்ற தானம்
> வீசினன் இயற்றி மற்றும் வேட்ட வேட்டார்க் கெல்லாம்
> ஆசற நல்கி ஒல்காப் போர்த்தொழிற்(கு) அமைவ தானான்.
>
> (தேரேறு படலம் : 3;)

இதுவரை மும் முதல் மூர்த்திகளைக் காட்டிலும் தான் வல்லமை யுடையவன் என்ற செருக்கிற் பட்டுத் துன்பத்தையே உழந்தவன், இப்பொழுது இறுதிப் போருக்குச் செல்லு முன், சிவனைப் பூசை செய்கிறான். இம்மையில் இதுவரை வந்த தீ வினைகளுக்குப் பரிகாரமாகவும், மறுமையில் நற் பய னடையவும் இப் பூசையைச் செய்ததால் இராவணன் பொறுமையோடு முறை தவறாமல் நடந்து கொள்ளுகிறான். அனைத்தையும் இழந்த பின்னர், பகைவன் மதிற் புறத்தே இருக்கையில், இராவணன் இவ்வளவு பொறுமையுடன், கலக்கம் சிறிதுமின்றிப் பூசை செய்வது அவனது மேம்பட்ட மனத் திண்மையையே காட்டுகிறது. இத் தகைய மன் வன்மையை யுடையவன் எங்ஙனம் தோல்வி யடையக் கூடும்?

தோல்வி நேரலாம் என்ற எண்ணத்துக்கும் இராவணன் இன்னும் இட மளிக்க வில்லை. வெற்றி வேண்டும் என்ற எண்ணத்துடனும் அவன் இப்பொழுது போருக்

கெழு வில்லை. பகைவனுக்குப் பயப்பட வில்லை என்ற புகழை நிலை நாட்ட வேண்டும் என்ற ஓர் எண்ணமே அவன் மனத்தில் ஆழப் பதிந் திருந்தது. வெற்றி எய்தி னால் அதனால் அவன் மகிழ்ச்சி யடையப் போவ தில்லை. தம்பி, மகன், சுற்றத்தார் இவ் வனைவரையும் இழந்த பிறகு சானகியையும் பெரும விருக்கையில் வெற்றிக் களிப்புக்கு இட மேது? ஆகவே தான் இப்பொழுது செய் யும் பூசையை இராவணன் இறுதிப் பூசையாகக் கருதி னான். தோல்வியை நினைத்தும், இராவணன் வருந்தக் காரண மில்லை. பகைவனை எதிர்த்து நின்றே இறப்பா னாகையால், தன் கடமையைச் செய்து விட்டவ னாகவே அவன் கருதப்படுவான். தன்னை வெற்றி கொண்ட இராகவனை உலகத்தார் என்றும் பாராட்டுவார்க ளாகையால், தன்னையும் தாழ்த்திப் பேசார்க ளன்றோ ?

இராவணன் பண்பை முழுதும் உற்று நோக்கு பவர்க்கு இவ் வுண்மை விளங்காமற் போகாது. அவ னுடைய வாழ்வைப் பொதுவாக நோக்கினால், அவன் ஒரு கலைஞன் என்பதை நன்கு உணர இயலும். அழகு, இன்பம் என்ற இரண்டிற்காக எவற்றையும் தியாகம் செய்யும் பண்பு கலைஞன் ஒருவனிடமே காணப்படும். இவ் வுண்மைக்குச் சான்று தேட அதிகம் முயற்சி தேவை இல்லை. நந்தித் தொண்டைமான் கலைஞனாக இருந்த ஒரே காரணத்தால் தான், கலம்பகத்தைக் கேட் பது தனக்கே அழிவைத் தேடிக் கொள்வதாகும் என்று அறிந்திருந்தும், அதனைக் கேட்டு முடித்து உயிரை விட் டான். இன்பத்திலும் துன்பத்திலும் கலைஞர் சுவை யையே விரும்புவர். சுவையின் பொருட்டுத் துன்பத் தையும் விலைக்குப் பெறுவர். வாழ்க்கையில் நடைபெறும் எல்லாச் செயல்களிலும், கலைஞன் அவனுக்கே உரிய

தனி முறையில் ஒரு சுவையைக் காண்கிருன். வாழ்க்கையில், அதிலும் தன்னுடைய வாழ்க்கையில் நடைபெறும் பெரும் இன்னலிற் கூட ஒரு சுவையைக் காணக் கலைஞனை யன்றி வேறு யாருக்குத் தான் இயலும். இதோ இராவணனும் கலைஞனைக் காண்போம். இராமன் அம்பால் துன்புற்று 'வீரமும் களத்தே போட்டு வெறுங் கையோடு இலங்கை புகுந்து' விட்டான். பாட்டனிடம் போரின் தன்மையை விவரிக்கிருன் இராமன் அம்புகளை நினைவு கூறுகிருன். எவ்வாறு? தன் உயிர் பருக வரும் கூற்றமாகிய அம்பை இராவணன் எவ்வாறு காண்கிருன்?

> "நல்லியல் கவிஞர் நாவில் பொருள் குறித்(து) அமர்ந்த நாமச்
> சொல்லெனச் செய்யுட் கொண்ட தொடையெனத்
> தொடையை நீக்கி!
> எல்லையில் செல்வந் தீர இசையெனப் பழுதி லாத
> பல்லலங் காரப் பண்பே காகுத்தன் பகழி மாதோ"

(கும்ப. வதைப்படலம் : 22)

தன் உயிரைப் பருக வரும் பகைவன் அம்பைக் கவிதையாக உருவகப் படுத்திக் காண யாருக்கு இயலும். கலைஞன் ஒருவனுக்கே ஒல்லும். சுவையின் பொருட்டாக எதனையும் மேற் கொள்ளும் இயல்பை ஈண்டு நன்குக் காண்கிறோம். கலைஞனுக்கே ஏற்ற முறையில் இப்பொழுது போரை மேற்கொள்கிருன். பழி ஒன்றுக்கு மட்டும் அஞ்சும் இயல்பு கலைஞனுக்கு உண்டு. சீதையை மறந்து விட்டாலும், இராவணன் பழி வராமல் காக்கப் போர் புரியத் தொடங்குகிருன். இக்கருத்தை அவனே கூறுகிருன. மைந்தன் மேகநாதனை நோக்கி அவன் கூறும் வார்த்தைகள் ஆராயத் தக்கன.

"வென்றிலேன் என்றபோதும் வேதம் உள்ளளவும் யானும்
நின்றுளேன் அன்றோ மற்(று)அவ் இராமன்பேர் நிற்குமாயின்
பொன்றுதல் ஒருகாலத்தும் தவிருமோ பொதுமைத்(து)
அன்றோ
இன்றுளார் நாளைமாள்வார் புகழுக்கும் இறுதி உண்டோ?

விட்டனன் சீதைதன்னை என்னலும் விண்ணோர் நண்ணிக்
கட்டுவ தல்லால் பின்னை யான்எனக் கருதுவாரோ
பட்டனன் என்ற போதும் எளிமையிற் படுகிலேன்யான்
எட்டிரே(டு) இரண்டும்ஆய திசைகளை எறிந்து வென்றேன்!

(இந். வதைப்படலம் : 10, 11)

இதனாலேயே இறுதி நாட் போருக்கு அவன் புறப்படு கையில் மிக்க அமைதி யோடு பூசனை முறையால் செய்து புறப்படுகிறான். சித்தத்தை அடக்கிய கலைஞன ஒரு வனுக்கே இவ் வமைதி ஒல்லும்.

பூசையைத் தன் மனம் நிறை வடையும் முறையில் நிறை வேற்றிய பின் இராவணன், 'துரகமின்றெனினும், நினைந்துழிச் செல்வதோர்' தேரில் ஏறிப் போர்க்களத் துக்குச் சென்றான். பூசை செய்யுங் காலத்தில் இருந்த மனநிலை நீங்கி, களத்துள் புகுந்த பின், மறமும் வீரமும் விளங்க நின்றான்.

"மன்றலம்குழல் சனகிதன் மலர்க்கை யான்வயிறு
கொன்(று)வந்(து) அலைக்கொடு நெருந்துயரிடைக் குளித்தல்
அன்று இ(து) என்றிடின் மயன்மகள் அத்தொழில் உறுதல்
இன்றிரண்டின் ஒன்று ஆக்குவென்....'

(டி : 26)

என்ற வஞ்சினத்தை மேற் கொண்டான்.

மேகநாதனை இழந்த அணிமையில் இருந்த நிலையி னின்றும் இன்று இராவணன் பெரிதும் மாறிவிட்டிருக்

கின்றான். அப்பொழுது அவனுடைய காம மயக்கம் ஓரளவு சிதைந்திருந்ததே யொழிய, செருக்கு எள்ளளவும் குறையவில்லை. வெற்றி நிச்சயம் என்ற உறுதி இருந்தது. மூல பலம் அழிந்த பின் அவ் வெண்ணமும் ஓரளவு சிதைந்தது. காமம் அடியோடு அழிந்தது. தன்னால் இது காறும காதலிக்கப்பட்டவள் இன்று 'வயிற்றில் அடித்தபடி துன்பக் கடலில் ஆழ வேண்டும்' என்று சபதம் செய்பவனுக்குக் காமம் எங்கு இருக்கக் கூடும்? தன் வென்றியை முதலிற் குறிப்பிட்டு விட்டு, பின்னர் அவ்வாறு நிகழாமற் போனால் தான் அழிந்து விடுவது திண்ணம் என்று குறிப்பிடுபவனுக்கு, வெற்றி தன்னுடையதே என்ற உறுதி எவ்வாறு இருக்கும்? உறுதி இல்லையே யொழிய, தான் வெற்றி பெறுதலுங் கூடும் என்ற எண்ணமும் அவன் மனத்தில் இல்லாமல் இல்லை.

கடும்போர் நடந்தது. இராவணன் தன்னிடத்திருந்த வல்லமை மிக்க படைக் கலங்களை யெல்லாம் பயன் படுத்தினான். ஆனால் அவற்றால் இராகவனைத் துன் புறுத்த முடியவில்லை. இறுதியாகத் தனக்குத் தேவரை வரையும் வெற்றி கொள்ள உதவிய சூலத்தை இராவணன் எறிந்தான். அதுவும் இராமனை ஒன்றுஞ் செய்ய முடியவில்லை. இதைக் கண்ணுற்ற பிறகே, இராவணனுக்கு, தான் அழிவது நிச்சயம் என்ற எண்ணம் தோன்றிற்று.

சிவனோ அல்லன் நான்முகன் அல்லன் திருமாலாம்
அவனோ அல்லன் மெய்வர மெல்லாம் அடுகின்றான்
தவனோ என்னில் செய்து முடிக்கும் தரனல்லன்
இவனோ தானவ் வேதமுதற் கா ரணனென்பான்."

(இரா. வதை: 135)

இவ்வெண்ணம் இராவணனைத் திகைப்படையச் செய்தது. போரைத் தொடர்ந்து நடத்துவதா, வேண்டாமா என்ற எண்ணம் மின்னலைப் போல் அவன மனத்தில் தோன்றிற்று. ஆனால் அவன் அதைப் பற்றிச் சிந்திக்க மறுத்து விட்டான்.

யாரேனும்தா னாதகயானென் தனியாண்மை
பேரேன் நின்றே வென்றி முடிப்பன் புகழ்பெற்றேன்'

(செ : 136 )

என்ற உறுதியுடன் போரைத் தொடர்ந்தான். இங்கு இராவணன் கூறுவது போரில் வெற்றியன்று. தன் மனத்தை, மனித மனத்தை, வெல்லும வெற்றி. போரில் வெற்றி கிடைக்காது என்பது அவனுக்கு உறுதியாகத் தெரிந்து விட்டது. 'முழு முதற் பொருளோடு மாறுபடக் கூடாது' என்ற உயர்ந்த நோக்கத்துடன் அவன் போரை நிறுத்தியிருந்தாலுங் கூட, உலகம் அவன் உயிருக்குப் பயந்து பின் வாங்கியதாகவே கூறும். 'இப் பழியை வெற்றி கொண்டேன்; புகழைப் பெற்றேன்' என்றே இராவணன் எக்களிக்கிறான்.

'எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம என்ப(து) இழுக்கு'

என்ற பொய்யாமொழியை வேறு யார் இவ்வளவு நன்றாகக் கடைப்பிடிக்கக்கூடும். பகைவன் வேத முதற் காரணன் என்று எண்ணாமல் இராவணன் செயலில் இறங்கி விட்டான். அதற்காகச் செயலை இடையே நிறுத்துவதா?

முடிவு என்னவாக இருக்கும் என்பதைப் பற்றி இராவணனே கவலைப்படாதிருக்கையில், நாம் ஏன் ஏங்கவேண்டும் ?

உம்பரும் பிறரும் போற்ற ஒருவனாய் மூவுலகாண்ட இராவணன் தரையில் மாண்டு கிடக்கின்றான். அவனுடைய முகம் பொலிவு பெற்று விளங்குகிறதாம். அதிலும் இறந்துபோன ஒருவனுடைய முகம் மும்மடங்கு பொலிந்து விளங்குகிறது என்று புலவர் கூறுகிறார் இது இயலுமா? இறந்தவன் முகம் பொலிவுற்றது என்று கூறுதலோடு மும்மடங்கு பொலிவுற்றது என்று புலவர் கூறுகிறார். ஒரு சிறிது நின்று ஆராய வேண்டிய இடம் இது. அவருடைய கருத்தை முழுவதும் வாங்கிக் கொண்டால் ஒழியப் பாடலில் ஒன்ற முடியாது. எனவே பாடலைப் பார்ப்போம். பாடல் முழுதும் கவிஞன் கூற்று.

வெம்மடங்கல் வெகுண்டனைய சினமடங்க, மனமடங்க,
வினையம் வீயத்
தெம்மடங்கப் பொருதடக்கைச் செயலடங்க, மயலடங்க
ஆற்றல் தேயத்

தம்மடங்கு முனிவரையும் தலையடங்க, நிலையடங்கச்
சாய்த்த நாளின்
மும்மடங்கு பொலிந்தன, அம் மறைதுறந்தான் உயிர்துறந்த
முகங்கள் அம்மா!

பாடலின் பொருள் எளிதாகவே உளது. இனி இவ்வொரு பாடலினிடத்துப் புலவர் அமைத்த ஓவியத்தைக் காண்போம்.

வீழ்ந்து கிடப்பவன் சாதாரண மானவனல்லன் "முக்கோடி வாணாளும் முயன்றுடைய பெருந்தவமும் முதல்வன் முன்னாள், எக்கோடி யாராலும் வெலப்படாய் எனக் கொடுத்த வரமும் ஏனைத் திக்கோடு முலகனைத்தும் செருக்கடந்த புயவலியும்" உடையவன் அல்லனோ? இப்பொழுது அவற்றையெல்லாம் இழந்து கிடக்கிறான்.

கனவினும் நினைத்தற்கரிய ஒரு செயல் நிகழ்ந்திருக்கிறது. கேட்டாரெல்லாம் முதலில் உறுதியுடன் நம்ப முடியாமல் திகைக்கின்றனர். எத்துணைக் காழ்ப்புடையாரும் இத்தகைய ஒரு பெரு வீரன் இறந்ததில் வருத்தங் கொள்ளாதிரார். ஆகவே அவர்கள் மனத்தில் தோன்றும் அவலத்தை யெல்லாம் ஆசிரியர் வெளியிட்டுத் தீரல் வேண்டும்.

அவலத்தை வெளியிடப் பல வழிகள் உண்டு. இங்கே கலைஞர் கையாள்வது ஒரு முறை. 'அடங்க' என்ற ஒவ்வொரு சொல்லினும் இழத்தல் தன்மை பல்குகிறது. முதல் 'அடங்க' என்ற சொல்லிற்கும் இரண்டாவது 'அடங்க' என்ற சொல்லிற்கும் இடையே அவலச்சுவை பெருகுகிறது.

இம்மட்டோ! ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு கருத்தைத் தொடர்ந்து வருதலைக் காணலாம். யாரேனும் ஒருவன் இறந்த பின்னர் அதனைக் கேள்வியுற்றார் முதலில் அவனிடத்துள்ள சிறந்த இயல்பு ஒன்றைப் பற்றி நினைத்தல் உலகியற்கை. இறந்தவன் தன்னுடைய வாழ்வில் பல்வேறு இயல்புகள் உடையவனாயினும் ஒரு சிறப்பியல்பு அவனுக்கு உரித்தாக இருந்திருக்கும். அதேபோல் இராவணனுடைய வாழ்க்கை முழுவதையும் எடுத்துப் பார்ப்போமானால் அதில் சிறப்பாகத் தோன்றுவது அவனது சினம். இதனை முன்னர் ஒரு பாடலில் அவன் வாயிலாகவே ஆசிரியர் கூறுகிறார். இந்திரசித்து இறந்த பொழுது தன்னை நொந்து புலம்பும் இராவணன், "சினத் தொடுங் கொற்றம் முற்றி இந்திரன் செல்வம் மேவி நினைத்தது முடித்து நின்றேன்" என வருந்துகிறான். இராவணன் என்று யாராவது நினைத்தால் அவனது சினந் தான் முன்னர் நினைவிற்கு வரும். ஆகவே இராவணன் வீழ்ந்தான் என்று சொல்லவந்த ஆசிரியருடைய மனத்

தில் அவனது சினந்தான் தோன்றுகிறது. இராவணன் வீழ்ந்தது வியப்பன்று; அவன் சினமும் வீழ்ந்ததோ? என வினவுவார்க்கு விடை தருவதுபோல, ஆசிரியர் முன்னர் அதனைக் கூறினார். அதினும் வீழ்தல், ஒழிதல் முதலிய பல சொற்கள் இருக்க 'அடங்க' என்ற சொல்லை ஆள்கிறார். அச் சினம் சிறிது சிறிதாக ஒழிவதற்கு மறுத்து இறுதியில் இறங்கி இறங்கி ஒடுங்கிற்று என்ற கருத்தில் 'அடங்க' என்றார். மேலும் அச் சினத்திற்கு உவமை தருவான் வேண்டி மிரு கேந்திரனது சினத்தை உவமித்தார். அதினும் சினங்கொள்ள வேண்டிய சந்தர்ப்பத்தில் எத்துணைக் கோபத்தை மடங்கல் கைக்கொள்ளுமோ அத்தகைய சினத்தை ஆசிரியர் உவமை கூறியிருக்கிறார்.

இனி அடுத்து வருவது 'மன மடங்க' என்பதாகும். சினத்தின் பின்னர் இதனை வைத்த கலைஞனது நுட்பமே நுட்பம். சினம் என்பது ஓர் உணர்ச்சி. ஆனால் மனமென்பது உணர்ச்சிகளெல்லாம் தோன்றும் நிலைக்களனாயுள்ளது. 'ஆகவே சினந்தான் அடங்கிற்று; அச்சினந் தோன்றற்குரிய நிலைக்களனை மனம் என்ன வாயிற்று?' என்பார்க்கு விடையிறுப்பார்போல அம் மனமும் செயலின்றி அடங்கிற்று என்றார். முன்னர்க் கூறிய 'அடங்க' என்ற சொல்லுக்கும் இப்பொழுது கூறும் 'அடங்க' என்ற சொல்லுக்கும அவலச் சுவையில் மிகுதிப்பாடு இருப்பதைக் காணலாம். இது பின்னர் வருஞ் சொற்களுக்கும் ஒக்கும்.

மூன்றாவது வருவது 'தெம்மடங்கப் பொரு தடக்கைச் செயல் அடங்க' என்பதாகும. பகைவர் அடங்கும்படிப் பொருத நீண்ட கைகளும் செயலொடுங்க என்பது இவ்வடியின் பொருள். தெவ் அடங்க என்பது தெம்மடங்க என மருவிற்று. இங்குப் பகைவரை அடக்கப்

பொருத கை என்பது பொருளாதலால் அடக்க என்ற சொல் எதுகை நோக்கி அடங்க என வந்தது என்று சொல்லுதல் தவறு. வேண்டுமென்றே ஆசிரியர் அடங்க என்ற சொல்லை ஈண்டுப் பயன்படுத்துகிறார். உற்று நோக்கின் பொருட் சிறப்புப் புலனாகாது போகாது. இராவணனது தடக் கையின் ஆற்றலைக் கண்ட தெவ்வர் தாமே அடங்கினர் என்பதைக் காட்டவே ஆசிரியர் 'அடங்க' என்றார். அத் தகைய தடக்கை செய லடங்க என்றார். இறந்த ஒருவனுடைய கை செய லடங்கிற்று என்று கூறுதல் இன்றியமையாததோ? எனினும், மிக நுட்பமாகக் கலைஞர் வேண்டு மென்றே இங்ஙனம் கூறு கின்றார். வாழுநாள் முழுதும் போரே செய்து வாழ்ந்த இராவணனை ஒத்த பெரு வீரனுக்கு வாளோச்சுதல் முதலிய கைச் செயல்கள் பழக்கத்தால் படிந்துவிட்டன (Reflex action); ஆகவே அவன் தலை அறுபட்ட காலத் திலும் கைகள் தாமே போர் செய்திருத்தல் கூடும். இங்ஙனம் தலை அறுபட்ட முண்டங்கள் போர் செய்வ தாகப் பரணி நூல்களிற் காணலாம். இற்றையநாட் போரிலுங்கூட இத் தகைய செயல்கள் ஒரோ வழி நிகழ் வதைக் கேட்கலாம். ஆகவே, இராவணனன் இறந் தான்; அவன் கைகள்? வெள்ளியங் கிரியினை விடையின் பாகனொடு அள்ளி விண்தொட எடுத்த அந்தக் கைகள்? அவைகளுமா தொழிலற்றன எனத் தோன்றும் வியப் பின் வினாவிற்கு, "ஆம்! அவைகளுங் கூடப் போயின" என்பார் போன்று கைகளினுடைய செயல்களும் அடங் கின என்றார்.

இவையெல்லாம் அடங்கினது ஒரு புறம் இருக்க, 'மீதெழும் மொக்கு ளன்ன யாக்கையை விடுவ தல்லால் சீதையை விடுவ துண்டோ!' என்று இந்திரசித்தினிடம் கூறினனே, அந்த மையல் என்ன வாயிற்று? அங்கதனுங்

கூட "முற்ற ஓதியென்? முடித்தலை யற்றபோ தன்றி, ஆசை யறுன்" என்று கூறினனே; அத் தகைய மையல்! அதுவும் வீழ்ந்ததோ என்பார்க்கு, 'ஆம் அதுவும் அடங் கிற்று' என்றார்.

எனவே, சினமும், அச் சினந் தோன்றும் மனமும், தடக்கைச் செயலும், மயலும் அடங்கின என்று ஒன் றன்பின் ஒன்றாய் அடுக்கிக் கூறி அவலச்சுவையை அள்ளிக் கொட்டினார். இத் தகைய அழகைக் கூறுங்கால், ஒன்றை விட ஒன்று வலிமை யுடையவாக உள்ளவற்றை நிரலே கிளத்தலை மேல் நாட்டார் 'க்ளைமாக்ஸ்' (Climax) என்று கூறுவர்,

இதுகாறும கேட்டவற்றால், இராவணன் கேவலம் உடல் வீரம ஒன்றே உடையான் போலும் என்ற எண் ணம் தோன்றுவது இயல்பே. ஆகவே, ஆசிரியர் மூன்றாம் அடியில் அக் கருத்தைப் போக்குகிறார். இராவணனது பலம் உடலொடு நின்றுவிடவில்லை. ஆன்ம பலத்திலும் அவன் எல்லை யற்றவன் என்பதைக் காட்டவேண்டித் 'தம் மடங்கு முனிவரையும் தலை யடங்க நிலை யடங்கச் சாய்த்த நாள்' என்றார். முனிவர்களை யெல்லாம் அடக் கினன். இலங்கை வேந்தன் மன வடக்கம் இல்லாமல் கேவலம் மூக்கைப் பிடித்து மூச்சை நிறுத்தி உயிரை விடும் அத் தகையோரையா வென்றான்? இல்லை. புலன்கள் தாமாகவே அடங்கின தலைசிறந்த இருடிகளை முற் கூறிய கூட்டத்தினின்று பிரிப்பதற்காகத் 'தம் மடக்கு முனிவர்' என்று கூறாது 'தம்அடங்கு முனிவர்' என்று கூறினார். அங்ஙனம் அடங்கின முனிவரை உடல் வன்மையால் வெல்லுதல் ஒல்லா தன்றோ? அவரையும் தலை வணங்கித் தருக்குத் தாழ்ந்து நிலை குன்றச் செய்த வன் என்று கூறும் முகத்தால், அவன் ஆன்ம முன்னேற் றத்தையுங் கூறினரென்க.

இறுதியாக உள்ள அடி 'மும் மடங்கு பொலிந்தன அம் முறை துறந்தான் உயிர் துறந்த முகங்கள் அம்மா' என்பதாகும். இஃதென்ன விந்தை! உயிர் துறந்த முகங்கள் பொலிவுறுதல் கூடுமோ? சிறிது சிந்தித்துப் பார்க்க வேண்டிய இடம் கலைஞர் கற்பனைக் கண்ணால் வீழ்ந்து கிடக்கும் இராவணனைக் காண்கிறார். அவனது பழமையை நினைந்து மீண்டும் அம் முகத்தை நோக்குகிறார். இடைக்காலத்து இராவணனது முகத்தை நினைவு கூறுகிறார். உண்மை விளங்குகிறது. மும் மடங்கு பொலிந்திருப்பதாகக் காண்கிறார். நம்மையும் காணுமாறு செய்கிறார். மனத் தத்துவம் நன்குணர்ந்தவர் கலைஞர். மனத்தின்கண் நிரம்பியுள்ள உணர்ச்சிகள் முகத்தில் வெளிப்படாது போவதற்கில்லை "முயன்றுடைய பெருந்தவம்' "உலகனைத்தும் செருக் கடந்த புயவலியும்', "நாரத முனிவர்க் கேற்ப நயம் பட'' பாடும் வன்மையும், "என்னையே நோக்கி நான் இந் நெடும் பகை தேடிக் கொண்டேன்'' என்று சொல்லும் இமயத்தை ஒத்த தன்னம்பிக்கையும், "இன்றுளார் நாளை மாள்வர், புகழுக்கும் இறுதியுண்டோ" என்று கூறும் மெய்யுணர்வும் பெற்ற ஒருவன் முகங்கள் பொலிவு பெற்றிருந்தன வெனக் கூறவும் வேண்டுமோ? இது பழைய இராவணனது தோற்றம். இதை ஒரு முறை காண்கிறார் கவிஞர்.

இடைக்காலத்தே 'மயிலிளஞ் சாயலாளை வஞ்சியா முன்னம் இதயமாம் சிறையில் வைத்தான்' அன்றோ? வேறொருவன் மனைவியை நயந்து சிறை வைத்த ஒருவன் களங்க முடையவன் அன்றோ? பிறர் மனை நயத்தலாகிய தவறு செய்த அவன் மனத்தில் மாசு படிதல் இயல்பன்றோ? ஆகவே அவனது பொலிவையெல்லாம் மறைத்தது இம் மாசு. இனிப் போர் செய்கின்ற காலத்துச் சீதையை அறவே மறக்க நேரிட்டதன்றோ? மேலும்

இராமனுடைய அம்பு 'கள்ளிருக்கும் மலர்க் கூந்தல் சானகியை மனச் சிறையில் கரந்த காதல் உள் ளிருக்கும் எனக் கருதி உட்புகுந்து தடவி அம் மாசை முற்றும் நீக்கிவிட்டதல்லவா?

ஆகவே, இப்பொழுது அம் மாசு முற்றும் நீங்கிவிட்டது. மேலும் சுத்த வீரனான இராவணன் போர்க்களத்தில் இறுதிவரையில் போரிட்டு மாண்டிருக்கிறான். எனவே பழைய பொலிவிற்குக் காரணமாயிருந்த வீரம், தவம் முதலியன வெல்லாம் மீண்டும் அவனது முகத்தில் பொலிவைத் தரலாயின. அது ஒரு மடங்கு பொலிவாயிற்று.

'மும் மடங்கு பொலிந்தன' என்று கூறினமைக்கும் ஆசிரியர் காரணங் காட்டுகிறார். இத்துணைப் பேராற்றலிருந்தும் ஆணவம் என்ற மாயையால் மூடப்பட்ட இராவணன் மெய் யுணர்வு அற்றவனாக இருந்தான். போரின் இறுதியில் பகைவனைச் சூலமும் ஒன்றும் செய்யவில்லை என்பதுணர்ந்து இராவணனுக்கு மெய் யுணர்வு ஒரு சிறிது தோன்றுகிறது. வாழ்வில் முதல் முறையாக "இவனோ தான் அவ் வேத முதற் காரணன் என்பான்?" என்று நினைக்கின்றான். இம் மெய் யுணர்வு காரணமாக இரு மடங்கு பொலிவு ஏற்பட்டது.

போரென்று மூண்ட பின்னர்ப் பகைவன் கடவுளேயாயினும் எண்ணித் துணிந்த கருமத்தை இடையே விட்டு உயிருக் கஞ்சி மீளல் பேடியர் செயலாகும். எனவே இராவணன் இவ் வுணர்வு தோன்றிய பின்னரும், "யாரேனும் தானாகுக; யான் என் தனி யாண்மை பேரே நின்றே வென்றி முடிப்பேன்; புகழ் பெற்றேன்" என்று இறுதிவரையில் போரிட முயலுகிறான். இனி நடைபெறும் போர் சீதையின் பொருட்டன்று; கடமையின் பொருட்டு. தான் இறப்பது உறுதி என்று தெரிந்த

பின்னரும் புகழ் நிறுத்துவான் வேண்டிச் செய்கின்ற நாகலின் கடமையைச் செலுத்தும் ஒப்பற்ற வீர னுடைய முகத்தில் தோன்றும் ஒரு பொலிவு தோன்ற லாயிற்று.

எனவே முற்மடங்கு பொலிந்தன வென்ற ஆசிரியர் அவ்வாறு பொலிவதற்குரிய காரணத்தையும் ஆய்ந்தறி வார் அறியுமாறு கூறினமை கண்டு மகிழ்தற்குரியது.

---

# முடிவுரை



'முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய பெருந்தவமும் முதல்வன் முன்னாள்
எக்கோடி யாராலும் வெலப்படாய் எனக்கொடுத்த வரமும் ஏனை
திக்கோடும் உலகனைத்தும் செருக்கடந்த புயவலியும் தின்று மார்பில்
புக்கோடி உயிர்பருகிப் புறம்போயிற்(று) இராகவன்தன் புனித வாளி.

*(இரா; வதை: 198)*

*இராவணன மாண்டதற்காகக் கவி பெரிதும் வருந்துகிறார். உலகில் எவருக்கும் கிடைத்தற்கரிய பேறுகளை அவன் பெற்றிருந்தான். அதனால மக்களுக்கு முயற்சியால் அடையக் கூடிய மேன்மைக்கு ஓர் எடுத்துக் காட்டாக அவன் விளங்கினான். இத் தகையவன், மனிதர்களுக்குள்ளே மிக மேம்பட்டவன், தேவர்களும் அஞ்சி ஒடுங்கித் தொழில் புரிந்த பெருமையை யுடையவன், அறிவும் கலை யுணர்ச்சியும் சிறக்கப் பெற்றவன் இறந்து படுவது உலகத்தின் இழவே யன்றோ? மனித சமூகம் தன்னுடைய சிறந்த பிரதிநிதியை இழந்துவிட்டதற்காகக் கவி ஏங்குகின்றார்.*

*கவிஞர் இவ்வாறு தம் மனத்தைத் தெரிவிப்பதிலிருந்தே, இராவணன் அழிவுக்கு அவன் தீய செயல்களே காரணம் என்ற கொள்கையில் அவருக்குப் பலமான பிடிப்பில்லை என்பது விளங்குகின்றது. நல் வழியில் நாட்டை ஆண்டு, இன்பமாய் வாழ்ந்திருந்தவனை,*

சூர்ப்பநகை தன் மன வேட்கையை நிறைவேற்றிக் கொள்ளத் தவருன வழியிற் செல்லத் தூண்டினுள். இராவணன் பெண் இன்பத்துக்கு இடமளித்த குற்றச் சாட்டுக்கு முழுப் பொறுப்பாளி யாவானே யொழிய, அவன் பிறன் மனையாளை வஞ்சனையாற் கவர்வதற்குவழி தெரியாதவனுகவே இருந்தான். சூர்ப்பநகையின் துர்ப் போதனையினுல் தான் சீதையை அவன் வஞ்சித்துக் கொணரச் சூழ்ச்சி செய்தான் என்பதை மறந்து விடக் கூடாது.

நல்லார் எவரும முதன் முதலாகப் பிழை செய்யப் புகும்போது நடு நடுங்குவர். ஆனுல் ஒரு முறை தவறு செய்தபின் தொடர்ந்து, குற்றஞ் செய்ய அவர்களுக்கே தைரியம் ஏற்பட்டுவிடும். மீண்டும், அவர்கள் குற்றத் துக்கு நாண வேண்டுமேயானுல், அவர்கள் செய்த பிழையைப் பன்மடங்கு பெருக்கிக் காட்டி, அதனுல் சேராத பழி சேர்ந்து விட்டதை உணர்த்தி, அத் தகைய செயல்களால் பெறக் கூடிய பயன்கள் பெரிதல்ல என்பதையும் தெரிய வைக்க வேண்டு்ர். வீடணன் இம் முறையில் இராவணன் மன நிலையை மாற்ற முயன்ருன். ஆனுல் அவன் வெற்றி பெருததன் முழுப் பொறுப்பையும் இராவணனையே ஏற்கச் சொல்வது பொருந்காது.

'கொல்லாத மைத்துனனைக் கொன்ருய் என்(று) அதுகுறித்துக்
கொடுமை சூழ்ந்து
பல்லாலே இதழ் அதுக்கும் கொடும்பாவி நெடும்பாரப் பழி
தீர்ந்தாளே.'

(இரா: வதை; 255)

சூர்பபநகை அண்ணனிடம் தெரிவித்ததைப் போல், அவன் இன்ப மடைவதில் விருப்பங் கொண்டு, அவனைச் செயல் புரியத் தூண்டவில்லை என்பது வீடணனுக்கு நன்கு தெரியும் என இதனுல் அறிகிருேம். ஏன்,

தானறிந்த இவ்வுண்மையை வீடணன் இராவணனுக்குத் தெரிவிக்கவேயில்லை? இராவணனுக்குச் 'சீதையை எடுத்து வந்தது தவறு' என்று எடுத்துக் கூறியவர் யாரும், சூர்ப்பநகையைப் போல் அவனை இன்பமடையச் செய்ய முற்சித்ததாக அவனுக்குத் தோன்றவில்லை. ஏனெனில் சூர்ப்பநகை, அண்ணனைக் கேட்காமலேயே, அவன் இன்பத்தை வேண்டித் தன் மூக்கை இழந்ததாக விளம்பரப் படுத்திவிட்டாள். தன் நன்மையை விரும்பி மூக்கை யிழந்தவள் முன் இருக்க, இராவணனுக்காக ஒன்றையும் இழக்க முன் வராதவராய், அவனும் தாமும் ஒன்றையும் இழக்காமலிருக்க உறுதி சொல்லுபவர் பேச்சை அவன் ஏற்றுக் கொள்ளாதது மனித இயற்கை தானே! பின்னர் கும்பகருணன், மேகநாதன் முதலியோர் இறந்த பின்பும் இராவணன் அவர்கள் வற்புறுத்திய படி, தான் செய்தது பிழையே என உணராததற்குக் காரணமும், அவன் வேண்டிய காலங்களில் அவர்கள் மறுத்துக் கூருமல் அவன் கட்டளைகளை நிறைவேற்றியதே. இவற்ருல் இவர்களனைவரும், முழு மனத்துடன் தன் நன்மையை நாடவில்லை என்றும், தனக்குப் பயந்தே போருக்குச் சென்றனர் என்றும இராவணன எண்ணிச் கொண்டான்.

வீடணன், கும்பகருணன் முதலியவர்களால் செய்ய முடியாததை மகோதரன் செய்து முடிக்கும் ஆற்றல் பெற்றவனாய்க் காண்கிருன். இரண்டு முறைகள் மகோதரன் கூறிய நெறியை இராவணன் ஏற்றுக் கொண்டான். இதனுல் பிறர் பேச்சுக்கு, தன் மந்திரக் கிழவர் ஆலோசனைகளுக்கு, இராவணன் மதிப்பளித்தான் என நன்ருய் உணர முடிகிறது முதற் போருக்குப் பின் மனம் தளர்ந்திருந்த இராவணனை 'வெற்றியும் தோல்வியும் போரின் இயற்கை; தோல்வியைக் கண்டு தளர்

வடைவது தோல்வியே யொழிய, தோல்விகள் உண்மையில் வெற்றியின் சூசனைகளே' என்றும், சீதையை அபகரித்து வந்த பின் அதற்காக எழுந்த போரைக் கண்டு சீதையைத் திருப்பியனுப்புதல் இராவணன் பெருமைக்கு ஏலாதது' என்றும் எடுத்துக் காட்டினான் மகோதரன். இராமன் வேத முதற் காரணனா யிருந்ததனாலும், பிறன் மனையாளை நயப்பது பேதைமை யாகையாலும், இங்கு மகோதரன் கூறியவை நமக்கு வேண்டாதவைகளாகப் படுகின்றன. அவன் காட்டிய வழி வெற்றியைத் தர வில்லை. இதற்காக அவன் அளித்த புத்திமதிகள் பொது நிலையில் ஆழ்ந்த உண்மைகளை அடிப்படையாகக் கொண்டன என்பதை நாம் எவ்வாறு மறுக்கக் கூடும்?

வீடணன், கும்பகருணன், மாலியவான் இவர்கள் மூவரும் ஒவ்வொரு நிகழ்ச்சியின் தத்துவத்தையும் நன்றாய் அறிந்து கூறும் ஆற்றலும், அறிவும் பெற்றிருந்தனர். ஆனால் அவர்கள் தம் அறிவின் வீக்கங் காரணமாகவே தாம் இராவணனை விட நன்கு அறிந்து கொண்டிருக்கிறோம் என்ற செருக்கின் காரணமாகவே, தாம் கூறியவற்றை இராவணனுக்குப் பொருந்த—அவன் ஏற்றுக்கொள்ளும் முறையில் எடுத்துக் கூற வில்லை. 'சொல்லும் திறம் அறிந்திருந்த' மகோதரனுக்கு, எல்லா வற்றையும் அலசி ஆராயும் திறமையோ அறிவோ இல்லை. குறிப்பிட்ட சமயத்தில் மணி யடிக்கும அலாரம் கடியாரத்தைப் போல, சந்தர்ப்பம் நேர்ந்த போது அரச முறையின் அடிப்படை உண்மைகளைப் பொருத்தம் அறியாமல் ஒப்பித்துக் கொண்டிருந்தான். இவற்றை அவன் வெளிப்படுத்திய விதமே, இராவணன் அக் கூற்றுக்களை ஏற்றுக் கொள்ளுமாறு செய்தது.

இவற்றால் இராவணன் அழிவுக்கு அவனே முழுப் பொறுப்பாளி என்றோ, அல்லது சூர்ப்பநகையோ

விடணனோ, கும்பகருணனோ, மகோதரனோ பொறுப் பேற்றுக் கொள்ள வேண்டும் என்றோ திட்டமாய்க் கூறுவதற் கில்லை. இவ் வனைவரும் ஒன்றாய் பொறுப்பில் பங்கு பெறுகின்றனர். இராவணன் இறந்ததற்காக நாம் வருந்துவதில் பய னில்லை; ஏனெனில் அவன் தானே யாகவோ, அல்லது பிறர் யோசனையாலோ செய்த தீமை களே அவன் அழிவுக்குக் காரணமா யிருந்தன. ஆனால் அவனோடு அளவிட முடியாத நற் பண்புகள் பலவும் அழிந் தொழிந்தமையால் தான் நாம் தாங் கொணாத துன்பத்தை யடைகிறோம். இந் நற்பண்புகள் எல்லாம் இராவணன முயன்று பெற்றவை; தேவர்களாலும், முதல்வர்களாலும் விரும்பிக் கொடுக்கப் பெற்றவை. இவற்றை நன்மையைப் பயக்க இராவணன் பயன்படுத் திய வரை, அவன் இன்பமாய் இருந்தான். இவற்றால் பிறர்க்குத் துன்பத்தைத் தேட அவன் சூழ்ந்த பின், நன்மை தீமையைத் தோற்றுவிப்பது இயற்கை நெறிக்கு மாறுபடு மாகையால், அவன் தோற்றுவித்த தீமைகளே அவனை அழித்துவிட்டன. ஆனால் அழி வெய்துவதற்கு முன், இராவணன் தான் பல நற்பண்புகளைப் பெற்றிருந் ததையும், அவற்றை நல்ல ஆற்றிலே பயன்படுத்தாததே தன் அழிவுக்குக் காரணம் என்பதையும் நன் குணர்ந் தான். ஆகவேதான், அவன் இறக்காம லிருந்திருந்தால், அவனால் உலகம் நன்மை எய்தி யிருக்குமே என்று நாம் ஏங்குகிறோம். இதையே கவி அவன இறந்தும், இறவா தவனே எனக் கூறுவதால் வற்புறுத்துகிறான.

முற்றிற்று.

---